| | | |
|---|---|---|
| ௯௫௭. | ప్రణవాయనమః. | ப்ரணவாயநம꞉. |
| ௯௫௮. | పణాయనమః. | பணாயநம꞉. |
| ௯௫௯. | ప్రమాణాయనమః. | ப்ரமாணாயநம꞉. |
| ௯௬0. | ప్రాణనిలయాయనమః. | ப்ராணநிலயாயநம꞉. |
| ௯௬௧. | ప్రాణధృతేనమః. | ப்ராணத்ருதேநம꞉. |
| ௯௬௨. | ప్రాణజీవనాయనమః. | ப்ராணஜீவநாயநம꞉. |
| ௯௬௩. | తత్వాయనమః. | தத்வாயநம꞉. |
| ௯௬௪. | తత్వవిదేనమః. | தத்வவிதேநம꞉. |
| ௯௬௫. | ఏకాత్మనేనమః. | ஏகாத்மநேநம꞉. |
| ௯௬௬, | జన్మమృత్యుజరాతిగాయనమః. | ஜன்மம்ருத்யுஜராதிகாயநம꞉. |
| ௯௬௭. | భూర్భువస్స్వస్తరవేనమః. | பூர்புவஸ்வஸ்தரவேநம꞉. |
| ௯௬௮. | తారాయనమః. | தாராயநம꞉. |
| ௯௬௯. | సవిత్రేనమః. | ஸவித்ரேநம꞉. |
| ௯௭0. | ప్రపితామహాయనమః. | ப்ரபிதாமஹாயநம꞉. |
| ௯௭௧. | యజ్ఞాయనమః. | யஜ்ஞாயநம꞉. |
| ௯௭௨, | యజ్ఞపతయేనమః. | யஜ்ஞபதயேநம꞉. |
| ௯௭௩. | యజ్వనేనమః. | யஜ்வநேநம꞉. |
| ௯௭௪. | యజ్ఞాంగాయనమః. | யஜ்ஞாங்காயநம꞉. |
| ௯௭௫, | యజ్ఞవాహనాయనమః. | யஜ்ஞவாஹநாயநம꞉. |
| ௯௭௬. | యజ్ఞభృతేనమః. | யஜ்ஞப்ருதேநம꞉. |
| ௯௭௭. | యజ్ఞకృతేనమః. | யஜ்ஞக்ருதேநம꞉. |
| ௯௭௮, | యజ్ఞినేనమః. | யஜ்ஞிநேநம꞉. |
| ௯௭௯. | యజ్ఞభుజేనమః. | யஜ்ஞபுஜேநம꞉. |
| ௯௮0. | యజ్ఞసాధనాయనమః. | யஜ்ஞஸாதநாயநம꞉. |
| ௯௮௧. | యజ్ఞాన్తకృతేనమః. | யஜ்ஞாந்தக்ருதேநம꞉. |
| ௯௮௨. | యజ్ఞగుహ్యాయనమః. | யஜ்ஞகுஹ்யாயநம꞉. |
| ௯௮௩. | అన్నాయనమః. | அந்நாயநம꞉. |
| ௯௮௪. | అన్నాదాయనమః. | அந்நாதாயநம꞉. |
| ௯௮௫. | ఆత్మయోనయేనమః. | ஆத்மயோநயேநம꞉. |
| ௯௮௬. | స్వయంజాతాయనమః. | ஸ்வயம்ஜாதாயநம꞉. |
| ௯௮௭. | వైఖానాయనమః. | வைகாநாயநம꞉. |

| | | |
|---|---|---|
| ௯௮௮. | సామగాయనాయనమః. | ஸாமகாயநாயநம:. |
| ௯௮௯. | దేవకీనన్దనాయనమః. | தேவகீநந்தநாயநம:. |
| ௯௯0. | స్రష్ట్రేనమః. | ஸ்ரஷ்ட்ரேநம:. |
| ௯௯௧. | క్షితీశాయనమః. | க்ஷிதீசாயநம:. |
| ௯௯௨. | పాపనాశనాయనమః. | பாபநாசநாயநம:. |
| ௯௯௩. | శంఖభృతేనమః. | சங்கப்ருதேநம:. |
| ௯௯௪. | నన్దకినేనమః. | நந்தகிநேநம:. |
| ௯௯௫. | చక్రిణేనమః. | சக்ரிணேநம:. |
| ௯௯௬. | శార్ఙ్గధన్వనేనమః. | சார்ங்கதந்வநேநம:. |
| ௯௯௭. | గదాధరాయనమః. | கதாதராயநம:. |
| ௯௯௮. | రథాంగపాణయేనమః. | ரதாங்கபாணயேநம:. |
| ௯௯௯. | అక్షోభ్యాయనమః. | அக்ஷோப்யாயநம:. |
| ௧000. | సర్వప్రహరణాయుధాయనమః | ஸர்வப்ரஹரணாயுதாயநம:. |



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ఓంభగవతేనమః. ஓம்பகவதேநம:.

# சகஸ்திர நாம பாஷ்யம்.

இத்திருநாமம் பகவானுக்கு எங்கும் உள்ள பரிபூரணத் தன்மையைச் சொல்லுகின்றது.

க. విశ్వస్మైనమః. **விஶ்வஸ்மைநம:.**

எல்லைஅற்றமங்களைதைசுவரியத்தைஉடையவனும் சங்கீர்த்தனைக்கு யோக்கியனும் இருக்கின்றவனுக்கு நமஸ்காரம்.

உலகங்களில்பிரவேசித்து இருக்கிறவன்என்பதும் அளவற்றஅதிசயங்களைச்சுபாவமாகஉடையவைகளான எல்லாமங்களங்களுக்கும்முக்கிய ஆஶ்ரயங்களாக இருக்கின்ற ஸ்வரூபரூபகுணவிபூதிகளாகிய ஐசுவரியங்களால்பூரணன் என்பதும் கருத்து.

இந்தப்பரிபூரணத்தன்மையே, எல்லாநாமங்களிலும்விசேஷமாய்ச்சொல்லப்படுகின்றது.

உ. విష్ణవేనమః. **விஷ்ணவேநம:.**

தன்னுடையஐசுவரியமாக இருக்கின்ற சித்து அசித்துயாவற்றிலும்பிரவேசித்துஇருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஆகாசமுதலியவைகளுக்கு வேறுபட்டு இருக்கிற இவனுடைய வியாப்திக்குப் பிரயோசனத்தைச்சொல்லுகின்றது.

ங. వషట్కారాయనమః. வஷட்காராயநம:.

ஸமஸ்தமும்தன்னுடைய இச்சையை அநுசரிக்கும்படி செய்துகொள்ளுகிறவனுக்கு நமஸ்காரம்.

ச. భూతభవ్యభవత్ప్రభవేనమః. **பூதபவ்வியபவத்ப்ரபவேநம:.**

இறப்பு எதிர்வுநிகழ்வு ஆகியமுக்காலத்தவர்களுக்கும்சுவாமியானவனுக்கு நமஸ்காரம்.

மறுபடியும் இதுமுதல் ஐந்துதிருநாமங்களால் அவனே சுவாமிஎன்பதுவிவரித்துச்சொல்லப்படுகின்றது.

ரு. భూతకృతేనమః. பூதக்ருதேநம:.

ஸமஸ்தஉயிர்களேயும்சுதந்தரனுய்ச்சிருஷ்டிக்கின்றவனுக்கு நமஸ்காரம்.

சு. భూతభృతేనమః. பூதப்ருதேநம:.

உயிர்களேத்தாங்கிக்காப்பவனுக்கு நமஸ்காரம்.

எ. భావాయనమః. பாவாயநம:.

எப்பொழுதும்ஐசுவரியங்களே உடையவனுனவனுக்கு நமஸ்காரம்.

அ. భూతాత్మనేనమః. பூதாத்மநேநம:.

ஸமஸ்தஉயிர்களுக்கும்உயிராகஇருக்கிறவனுக்கு நமஸ்காரம். சரீரியாய்நியமிக்கின்றவன்என்பதுகருத்து.

கூ. భూతభావనాయనమః. பூதபாவநாயநம:.

ஆத்துமாக்களுக்குத்தாரகமானபிரஸாதத்தையும்போஷகங்களானநெய் பால் தயிர் முதலியவைகளேயும் போக்கியங்களான சந்தனம்புஷ்பம் தாம்பூலமுதலியவைகளேயும் கொடுத்துவிருத்திசெய்கிறவனுக்குநமஸ்காரம்.

மேற்சொல்லிய ஐந்துதிருநாமங்களும் சேதனுதிகளேக்குறித்துச் சொல்லப் பட்டன. இனி அவனேக்குறித்துச்சொல்லப்படுகின்றன.

கO. పూతాత్మనేనమః. பூதாத்மநேநம:.

சேதனம் அசேதனங்களுக்குத் தான் ஆத்துமாவாகஇருந்தாலும், ஸம்ஸாரிகளேப்போலச் சேதன அசேதனஸம்பந்தத்தால் உண்டாகத்தக்க தோஷம்இல்லாதவனுயிருக்கும், பரிசுத்தசுபாவம் உடையவனுக்குநமஸ்காரம்.

கக. పరమాత్మనేనమః. பரமாத்மநேநம:.

ஸமஸ்தஉயிர்களுக்கும் அவன் ஆத்தும்ாவாக இருக்கின்றமையாலும், அவனுக்கு ஆத்துமாவாகநியமிக்கத்தக்க அந்நியன் ஒருவனும் இல்லாமையாலும், ஒருவராலும் நியமிக்கப்படாதவனுக்கு நமஸ்காரம்.

இந்தப்பிரகாரம் ஸர்வசேஷியானவனே முக்கியமாய்நாம் அடையத்தக்கவன்என்றுசொல்லுகிறது.

கஉ. ముక్తానాంపరమాగతయేనమః. முக்தாநாம்பரமாகதயேநம:.

பிரகிருதிபந்தம் அவித்தை கர்மம்வாஸனேருசிகளாகிய ஆவரணங்களினின்றும் விடுபட்டுப் புண்ணியபாவஸம்பந்தம், பாலியயௌவனவார்த்திகம், உற்பத்திநாசம், பயம், சோகம், பசி,தாகம், இவைகள் இன்றி, கோரியபலனே உடனே அடைகை, நினேத்தகாரியத்தைத் தப்பாமல் முடிக்கை ஆகிய எண்குணத்தோடுகூடியிருக்கும் முக்தர்களுக்குச் சிறந்தபேறு ஆனவனுக்கு நமஸ்காரம்.

இந்த அர்த்தத்தையேமறுபடியும் ஐந்துதிருநாமங்களால்
விவரித்துச்சொல்லப்படுகிறது.

௧௩. 𑌅𑌵𑍍𑌯𑌯𑌾𑌯𑌨𑌮𑌃. அவ்யயாயநம:.

எவ்விதத்தாலாகிலும் ஸம்ஸாரமாகிய ஸமுத்திரத்தைக்கடந்து வந்து தன்னுடையசரணாரவிந்தங்களை அடைந்தவர்களைத் தான் மறுபடியும் பிறக்கவிடுவது இன்மையால்பிறவியில்லாமல்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௧௪. 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌯𑌨𑌮𑌃. புருஷாயநம:.

வாக்கு மனங்களுக்கு எட்டாத தன்ஸ்வரூபரூப குணவிபவங்களின் அனுபவத்தைமுக்தர்களுக்குக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௧௫. 𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌣𑍇𑌨𑌮𑌃. ஸாக்ஷிணேநம:.

முக்தர்களை ஆனந்திக்கச்செய்து தானும் திருப்தி அடைந்து அவர்களையேபார்த்துக்கொண்டு இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௧௬. 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌯𑌨𑌮𑌃. க்ஷேத்ரஜ்ஞாயநம:.

தன்னுடையபோகஸமுர்த்திக்கு உற்பத்திஸ்தானமாகியதும், க்ஷேத்ரம்என்கிறபெயரை உடையதுமாகியபரமபதத்தைத் தான்ஒருவனே அறிந்தவனுக்கு நமஸ்காரம்.

௧௭. 𑌅𑌕𑍍𑌷𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. அக்ஷராயநம:.

எல்லை அற்ற தன்குணங்களாகிய தேன் கடல்களில் முக்தர்கள் முழுகி அவர்களால் அக்குணங்கள்எப்பொழுதும் அநுபவிக்கப்பட்டபோதிலும் அவைகள்மென்மேலும்மிகுவதேயன்றிக்குறைவுபடாத போக்கியரூபியாயிருப்பவனுக்கு நமஸ்காரம்.

அந்தப்பகவான் தானேமோக்ஷத்திற்கு உபாயமாகிறவன்
என்பதைச் சொல்லுகின்றது.

௧௮. 𑌯𑍋𑌗𑌾𑌯𑌨𑌮𑌃. யோகாயநம:.

தன்னுடைய சாயுச்சியத்திற்கு வேறுசகாயத்தை அபேக்ஷிக்காமல் தானே உபாயமாக இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௧௯. 𑌯𑍋𑌗𑌵𑌿𑌦𑌾𑌂𑌨𑍇𑌤𑍍𑌰𑍇𑌨𑌮𑌃. யோகவிதாம்நேத்ரேநம:.

தன்னை ஒழிந்த அந்நியங்களான உபாயநிஷ்டைகளாகிய யோகமுதலியவைகளைஅறிந்து அவைகளைஅனுஷ்டிக்கின்றவர்களுக்கும் அவர்கள்கோரியபலன்அவர்களுக்குச்சித்திஆகிறவரையில் தானே நிர்வாகம்செய்யுமவனுக்கு நமஸ்காரம்.

இதனையேமீண்டும் விவரித்துச் சொல்லப்படுகின்றது.

௨௦. 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌪𑍁𑌰𑍁𑌷𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. பிரதானபுருஷேஸ்வராயநம:

பந்தத்துக்குஎதுவானபிரகிருதிக்கும்,இப்பிரகிருதியால்பந்திக்கப்பட்டபுருஷர்களுக்கும் ஸர்வபிரகாரத்தாலும்நியமனஞ்செய்யுமவனுக்கு நமஸ்காரம்.

இத்திருநாமம்தன்னிடத்தில்வைத்தபக்திக்குவிக்கினம்வந்தால்தானே அதைப்பரிகாரம்செய்கிறவன்என்பதைக்காட்டுகின்றது.

உக. నారసింహవపుషేనమః. நாரசிம்ஹவபுஷேநம:.

பக்தனுடையபயத்தைநாசஞ்செய்கிறதற்காகஅவன் அபேட்சித்தகாலத்தில்தன்இச்சைக்குத்தகுதியாகக்கொண்டதிவ்வியமகா நரசிங்கரூபத்தைஉடையவனுக்கு நமஸ்காரம்.

உஉ. శ్రీమతేనమః. ஸ்ரீமதேநம:.

ஒன்றுக்கொன்றுஒவ்வாதநூதனமானதும்,கோரமுள்ளதுமான ரூபத்தைக்கொண்டிருந்தும், ஸௌந்தரியம் இலாவணியம் முதலியவற்றால் மனோஹரமாயிருக்கின்றதிவ்வியரூபத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

இத்தன்மையான ஸௌந்தரியஐசுவரியங்களுக்கு முக்கியமானலக்ஷணங்களைக்காண்பிக்கிறது.

உ௩. కేశవాయనమః. கேஶவாயநம:.

பரிசுத்தமாயும் மனோஹரமாயும் நீலவர்ணமாயும் இராநின்றசுருண்டதலைமயிர்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

உச. పురుషోత్తమాయనమః. புருஷோத்தமாயநம:.

வியக்தமாயும் அவியக்தமாயும் இராநின்ற பிரகிருதியினால்கட்டுண்ட பத்தசேதனர்களும், இவர்களைவிடச்சிறந்தவர்களானமுக்தர்களும், இவ்விருவரிலும் சிறந்தவர்களான அனந்தன் வைநதேயன் முதலியநித்தியர்களும் ஆகிய இம்மூன்றுவிதமான புருஷர்களைக்காட்டிலும் அதிசயமான லட்சணங்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

உரு. సర్వాయనమః. ஸர்வாயநம:.

ஸர்வத்திலும் அபேட்சையில்லாதவனா யிருந்தும் வெறுப்பு இல்லாதவனாய் ஸர்வவஸ்துக்களுடைய ஸம்ரட்சணம் தன்னால்நிருவகிக்கத்தக்கதானதால் ஸர்வத்தையும் தனக்குச்சரீரமாக எண்ணியிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

உசா. శర్వాయనమః. ஶர்வாயநம:.

தன்னுடைய சரீரங்களாயிருக்கின்றவர்களுடைய அசுபங்களை நாசம்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

உஎ. శివాయనమః. சிவாயநம:.

ஸர்வத்துக்கும் சுபங்களைஉண்டுபண்ணுகிறவனுக்கு நமஸ்காரம்.

உஅ. స్థాణవేనమః. ஸ்தாணவேநம:.

உறுதியான அநுக்கிரகபிரபாவத்தைஉடையவனுக்கு நமஸ்காரம்.

உகூ. భూతాదయేనమః. பூதாதயேநம:.

மிகவும் ஆசைப்படத்தக்கவனா யிருக்கின்றமையால் பிராணிகளாலே அபேட்சிக்கத்தக்கவனுக்கு நமஸ்காரம்,

௩0. అవ్యయనిధయేనమః. அவ்யயநிதயேநம꞉.

ஆபத்துக்காலத்தில் ஸம்ரக்ஷணைக்காகமிருந்த உலோபகுணத்தினால் சேர்த்துவைத்துக்கொள்ளும் தனத்தைப்போலச் சேதனர்களால் சேமித்துவைத்துக்கொள்ளத்தக்கவனாய் ஸர்வப்ரகாரத்தாலும் தன்னையெப்பொழுதும் அனுபவித்தபோதிலும் சுவர்ணநிதிகுறைவுபடுவதுபோல அணுமாத்திரமும்குறைவுபடாமல் இருப்பவனுக்கு நமஸ்காரம்.

௩௧. సంభవాయనమః. ஸம்பவாயநம꞉.

இந்தப்பிரகாரம் தன்னை ஆபத்துத்தனமாக வைத்துக்கொண்டு தன்னைத்தீவிரமாய்ச்சேர அபேட்சை உள்ளவர்களுக்குத் தன்னைப்பிரகாசஞ்செய்துஸர்வதேசங்களிலும் ஸர்வகாலங்களிலும்மச்சகூர்மவராகநாரசிங்க வாமன இராமகிருஷ்ணாதிகளான அநேகரூபங்களாய் அடிக்கடி அவதரிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௨. భావనాయనమః. பாவநாயநம꞉.

இந்தப்பிரகாரம் அவதாரங்கள்எடுத்துச்சாதுக்களுடையஅநிஷ்டங்களைநிவர்த்திசெய்வது முதலியவைகளால் அவர்களைவாழ்விப்பவனுக்கு நமஸ்காரம். சாதுக்களைச் சம்ரட்சிக்கவும்துஷ்டர்களைச்சங்கரிக்கவும்தருமத்தைஸ்தாபிக்கவும் யுகங்கள்தோறும் அவதரிக்கிறேன்என்றுபகவான்வாக்கியம் இருக்கின்றது.

௩௩. భర్త్రేనమః. பர்த்ரேநம꞉.

மேலும்ஆஸ்ரிதர்களுக்குத்தன்னைக்கொடுத்துஅவர்களுடையசுபாவத்தைத்தானும்உடையவனாய்அவர்களைப்போஷிக்கிறவனுக்குநமஸ்காரம்.

௩௪. ప్రభవాయనమః. ப்ரபவாயநம꞉.

அவதாரங்களில்அற்பதோஷஸம்பந்தமும்இல்லாமையால் ஆத்துமாக்கள்தன்னைஅறிகின்றமாத்திரத்தில் அவ்வாத்துமாக்களுடையபிறவிகளாகிய விலங்குகள் நிர்மூலமாவதற்கு ஏதுவாய்த் தேவர்முதலானோர்களுடைய பிறப்புகளுக்கு வேறுபட்டு இராநின்ற உத்கிருஷ்டமானபிறப்பை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩௫. ప్రభవేనమః. ப்ரபவேநம꞉.

இந்தப்பிரகாரம் மந்தர்களாயும் பரதந்திரர்களாயும் இருக்கின்ற மானிடரைப்போலச்சாமானியமான அவதாரங்கள்செய்தும்தான்பிரபுவாய்த் தேவர்முதலானவர்களுக்குப் போகம் மோட்சம்முதலிய பலன்களைக் கொடுக்கச்சமர்த்தனானவனுக்கு நமஸ்காரம்.

௩௬. ఈశ్వరాయనమః. ஈஶ்வராயநம꞉.

பரமபதத்தில்எழுந்தருளிஇருக்கும்இருப்பைப்பார்க்கிலும்அவதாரங்களில் அதிகபிரயோசனத்தை அடைந்துஈஸ்வரனாயிருப்பவனுக்கு நமஸ்காரம்.

இந்தவைபவங்களெல்லாம் எதனாலுண்டென்றால்அதற்குக் காரணம் சொல்லுகின்றது.

௩௭. ஸ்வயம்புவே நம: ஸ்வயம்புவேநம:.

தனக்கு அஸாதாரணமான சுத்தசத்துவரூபத்தைத் தன் லீலையின்பொருட்டுத்தன் இச்சையாலேதேவமனுஷியாதி ரூபங்களுக்குச்சமானமாகச்செய்துகொண்டுஅவதரிக்குமவனுக்கு நமஸ்காரம்.

கர்மஏதுவாகவேறு ஈஸ்வராதிகளாலே சிருஷ்டிக்கப்படாதவன் என்பதுகருத்து.

௩௮. ஶம்பவே நம: ஶம்பவேநம:.

இந்தப்பிரகாரம் சௌந்தரியம்சௌசீல்யம்முதலானதன்குணங்களைப்பிரகாசிப்பித்துச் சுகத்தைக்கொடுக்குமவனுக்கு நமஸ்காரம்.

மேற்கூறியஅவதாரங்களுக்கு உதாரணம்சொல்லுகின்றது.

௩௯. ஆதித்யாய நம: ஆதித்யாயநம:.

சூரியனைத்தனக்குவாசஸ்தானமாக உடையவனாய்எல்லாவற்றையும்பிரகாசிக்கச்செய்பவனுக்கு நமஸ்காரம்.

தன்னுடையஐசுவரியத்துக்கு அஸாதாரணலக்ஷணமான தாமரைக்கண்ணன்என்பதைச்சொல்லுகின்றது.

௪0. புஷ்கராக்ஷாய நம: புஷ்கராக்ஷாயநம:.

கமலம்போன்றநேத்திரங்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

அவனுக்கேவேறு அடையாளமும்கூறுகின்றது.

௪௧. மஹாஸ்வநாய நம: மஹாஸ்வநாயநம:.

மேன்மையானதிருநாமத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

இப்படிப்பட்டமேன்மை உள்ளதிவ்யநாமரூபங்களோடுகூடி நித்தியமாயிருப்பவர்என்றுசொல்லுகின்றது.

௪௨. அநாதிநிதநாய நம: அநாதிநிதநாயநம:.

பிறப்புமூப்பு முதலிய தோஷங்களுக்குத் தூரமாய்நீங்காதயௌவனமுள்ள அழியாதரூபத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

ஜகத்காரணத்தினாலும் பிரமாதிகளுக்கு வேறுபட்டவனென்று சொல்லுகின்றது.

௪௩. தாத்ரே நம: தாத்ரேநம:.

அண்டபிண்டங்களாகிய எல்லாவற்றிற்குங் காரணமாயுள்ளஅசித்ஸமஷ்டியான (ஞானசூனியமாயிருக்கும் வஸ்துவின்திரளான) பிரகிருதியில் சித்ஸமஷ்டியை (ஆத்துமாக்களின் கூட்டத்தை) உடையபிரமாவாகின்ற கருப்பத்தைத்தரிக்குமவனுக்கு நமஸ்காரம்.

சச. విధాత్రేనమః. விதாத்ரேநம:.

அவ்வாருன கருப்பத்தைவளரச்செய்துஸர்வலோகபிதாமகனுன பிரமாவைச் சிருஷ்டிப்பவனுக்கு நமஸ்காரம்.

சரு. ధాతురుత్తమాయనమః. தாதுருத்தமாயநம:.

சிருஷ்டிகர்த்தர்களாயிருக்கின்றபிரமா முதலானவர்களைப்பார்க்கிலும்மிகவும்உத்கிருஷ்டமாயிருப்பவனுக்கு நமஸ்காரம்.

பிரமாதிகளுடைய கரணங்களாலே அறியக்கூடாதவன் என்கின்றது.

சசு. అప్రమేయాయనమః. அப்ரமேயாயநம:.

இந்திரியங்களால்பிரமாதிகளாலும் அறியக்கூடாதவனுயும்இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

பிரமாதிகளுடையஇந்திரியங்களுக்கும்நியமனம் செய்பவனென்றுசொல்லுகின்றது.

சஎ. హృషీకేశాయనమః. ஹ்ருஷீகேஶாயநம:.

இந்திரியங்களுக்கு நியாமகனென்று வேதங்களால்கூறப்படுகின்றவனும் ஸந்தோஷம்ஸௌக்கியம் ஐசுவரியங்களோடுகூடி இருப்பவனுமானவனுக்கு நமஸ்காரம்.

மேற்சொல்லியயாவற்றையும்பிரகாசஞ்செய்கின்றது.

சஅ. పద్మనాభాయనమః. பத்மநாபாயநம:.

பிரமாவின் உற்பத்திக்கு ஏதுவானபதுமத்தை உந்தியில்உடையவனுக்கு நமஸ்காரம்.

சகூ. అమరప్రభవేనమః. அமரப்ரபவேநம:.

பிரமன் முதலானதேவர்களுக்குச் சிருஷ்டிமுதலியஅதிகாரங்களைக் கொடுத்து நிர்வகிக்கின்றவனுக் நமஸ்காரம்.

ருo. విశ్వకర్మణేనమః. விஶ்வகர்மணேநம:.

பிரமசிருஷ்டிக்கு முன்னும்பின்னும் உள்ளஸமஸ்த உலகங்களின்தொழில்களைஉடையவனுக்கு நமஸ்காரம்.

ருக. మనవేనమః. மநவேநம:.

ஸங்கற்ப லேசமாத்திரத்தாலே உலகத்தின் தொழில்களைச்செய்பவனுக்குநமஸ்காரம்.

இவ்விதமாகத் தன்னால் நிர்மிக்கப்பட்டிருக்கின்ற சுரர்நரர் முதலானவர் களை நாமரூபங்களால் விசித்திரபேதங்களாகக்காண்பிக்க வல்லவனென்று சொல்லுகின்றது.

ருஉ. த்வஷ்ட்ரேநம:. த்வஷ்ட்ரேநம:.

தச்சன்மரங்களைப்பிரகாசமுள்ள அவயவங்களோடு அனேகவிசித்திரங்களான உருவங்களாய்ச் செய்வதுபோலத் தான்சுரர்முதலானவர் களைச் சிருஷ்டிசெய்து பிரகாசிக்கச்செய்கின்றவனுக்கு நமஸ்காரம்.

ருங. ஸ்தவிஷ்டாயநம:. ஸ்தவிஷ்டாயநம:.

அநேகங்களாய் ஆகவேண்டுமென்கிற தன்னுடையஸங்கற்பத்தின்படி சூக்ஷ்ம அவ்யக்தசமஷ்டிக்குக்காரணமான பிரகிருதியைச்சரீரமாக உடையதான்போக்தாக்களான சுரநரதிரியக்குஸ்தாவரங்களுடைய கரண களேபரங்களும், அவற்றிற்குவிஷயமான ஶப்தஸ்பரிசாதிகளும், அவற்றிற்கு ஆஶ்ரயமானபதினாலு உலகங்கள்அடங்கியபிரமாண்டங்களும், அவைகளின் ஆவரணங்களும் ஆகின்றகாரியவிஸ்தாரத்தை உடையவனாகுமவனுக்குநமஸ்காரம்,

இவ்வாறுஸகலத்துக்கும் தான்மூலகாரணமாயிருந்தும்
உலகஸம்பந்தமாயுள்ள மண்முதலியகார்ணங்களுக்கு
வேறுபட்டவனாயிருப்பதைச் சொல்லுகின்றது.

ருச. ஸ்தவிராயநம:. ஸ்தவிராயநம:.

ஸகலகாலங்களிலும்ஸ்திரமாய் இருப்பவனும், காலத்தைஅபேட்சிக்கிறவனாயிருந்தும் காலத்துக்குத் தான்வசப்படாமல் கால வித்தியாசத்தால் மாறுதலடையும் பால்முதலானவைகளுக்கு வேறுபட்டவனாய் ஸர்வமும் தன் ஆதீனமாயிருப்பதால் காலசக்கிரத்தையும் ஜகத்சக்கிரத்தையும் யுகசக்கிரத்தையும் தன்ஸம்பந்தத்தினால் நிரந்தரமும் சுழலச்செய்கின்றவனும்காலத்தைத்தான்பசனம்(பாகம்)செய்தும் அந்தக்காலத்தினால் தான்பசனமாகாமல் இருக்கின்ற பிரபுவும்ஆனவனுக்கு நமஸ்காரம்.

ருரு. த்ருவாயநம:. த்ருவாயநம:.

இப்படிக்கு அனந்தமானவேறுபாடுகளாலும்விகாரம் இல்லாதவனாய் இருக்கின்றபடியால் தன்சொரூபத்தைவிட்டுநழுவாமல் ஸ்திரமாயிருப்பவனுக்கு நமஸ்காரம்,

ருசா. அக்ராஹ்யாயநம:. அக்ராஹ்யாயநம:.

லோகத்திலுள்ள வஸ்துக்களைப்போலத் தன்னைமேல்நடுகீழ்பாகங்களைஉடையவனாக அறியக்கூடாதவனுக்கு நமஸ்காரம்.

ருஎ. ஶாஶ்வதாயநம:. ஶாஶ்வதாயநம:.

இந்தப்பிரகாரம்எப்பொழுதும் உலகத்தொழில்களின்பெருக்கை உடையவனானபடியால் நித்தியனானவனுக்கு நமஸ்காரம்,

௫௮. కృష్ణాయనమః. க்ருஷ்ணாயநம꞉.

இப்படிப்பட்டலீலையின்ரசத்தினாலேமிகவும்சுகத்தைஅடைந்திருப்பவனுக்கு நமஸ்காரம்.

௫௯. లోహితాక్షాయనమః. லோஹிதாக்ஷாயநம꞉.

இப்படிப்பட்டசுகத்தைக்காண்பிக்கின்றயோக்கியமானதாமரைமலர்போன்றசிவந்தநேத்திரங்களைஉடையவனுக்கு நமஸ்காரம்.

௬0. ప్రతర్దనాయనమః. ப்ரதர்தநாயநம꞉.

எல்லோருக்கும் சங்கார கர்த்தாவாயிருக்குமவனுக்கு நமஸ்காரம்.

௬௧. ప్రభూతాయనమః. ப்ரபூதாயநம꞉.

ஸர்வத்தையும் சங்கரித்த காலத்திலும் நித்தியமாயும் எல்லைஅற்றபோகங்களுக்கு உபகரணமாயும்இருக்கின்ற பரமபதத்தை உடையவனானதால் மிகவும் சமிர்த்தியை உடையவனுக்கு நமஸ்காரம்.

மேற்கூறியவைகளெல்லாம் எதனாலுண்டென்றால்
அதனை நன்றாக விவரித்துச் சொல்லுகின்றது.

௬௨. త్రికకుద్ధామ్నేనమః. த்ரிககுத்தாம்நேநம꞉.

லீலாவிபூதிக்கு மும்மடங்கு அதிகமான த்ரிபாத் விபூதிஎன்கின்றசிரேஷ்டமானபரமபதத்தை உடையவனும் மேலும்ஞானம்-சக்தி-பலம்-ஐசுவரியம்-வீரியம்-தேஜசு-என்கின்ற ஆறுகுணங்களுக்கும் ஆதாரம்ஆனவனுமாய்இருப்பவனுக்கு நமஸ்காரம்.

இப்படிப்பட்ட குணவிபவங்களாகின்ற லக்ஷணங்களைச்
சொல்லாநின்றகிரமத்தில் அவற்றால்அறியப்படும்
அவனுடைய சொரூபத்தைச் சொல்லுகின்றது.

௬௩. పవిత్రాయనమః. பவித்ராயநம꞉.

பரிசுத்தமானதேகத்தைஉடையவனுக்கு நமஸ்காரம்.

௬௪. మంగళాయపరాయనమః. மங்களாயபராயநம꞉.

ஆனந்தத்தை இயல்பாக உடையவனாயிருக்கின்றமையால் சுபங்களுக்கு முக்கிய ஆதாரமாயிருக்கின்றவனும், சுபாவசித்தமாயும்உண்மையாயும் நித்தியமாயும் அளவற்றதாயும் இருக்கின்ற தன் குணவிபவங்களுடைய அனுபவவைபவம் எப்பொழுதும் தனக்கு இருந்தாலும்சுபாவமாகவேஸமஸ்ததோஷங்களுக்கும் சத்துருவாயும் மிகுந்தசாந்தமாயும் அனந்தமாயும் அனுகூலமாயும் இருக்கின்ற சுயம்பிரகாசமான தன் சொரூபத்தின் அனுபவத்தினால் பிறந்த தடை யற்ற ஆனந்தத்தினாலே அலை இல்லாமல்நிச்சலமாயிருக்கின்ற அமிர்தமயமான சமுத்திரத்தையும் அவமானம் செய்யத்தக்கஸர்வநிரபேட்சனாயும் நித்தியதிர்ப்தனாயும் இருக்கின்றவன் என்று அறியப்படுமவனும் ஆனவனுக்கு நமஸ்காரம்.

மூடுகிறதும் திறக்கிறதுமான கண்களை (ஜ்ஞானத்தை) உடையபத்தமுக்த ஜீவர்களுக்கு இவன் வேறுபட்டவனென்று சொல்லுகின்றது.

௬௫. 𑌈𑌶𑌾𑌨𑌾𑌯𑌨𑌮𑌃. ஈஶாநாயநம :.

ஸர்வ அவஸ்தைகளிலும் தன்னுடைய ஏற்பாடுகளையும் தனக்கு அன்னியங்களான ஸமஸ்த வஸ்துக்களுடைய ஏற்பாடுகளையும் சுபாவமாக உடையவனுக்கு நமஸ்காரம்.

ஐசுவரியத்துக்கு முதல்விஷயத்தைச் சொல்லுகின்றது.

௬௬. 𑌪𑍍𑌰𑌾𑌣𑌦𑌾𑌯𑌨𑌮𑌃. ப்ராணதாயநம :.

எப்பொழுதும் நித்தியசூரிகளுக்குத் தரிசன ரூபமான தன்னனுபவத்துக்கும் கைங்கரியத்துக்கும் அனுகூலமான சக்தியைக்கொடுக்கின்றவனுக்கு நமஸ்காரம்.

௬௭. 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌨𑌮𑌃. ப்ராணாயநம :.

அந்தநித்திய சூரிகளுக்குத் தான்பிராணனாய் அவர்கள் ஜீவித்துக்கொண்டிருக்க ஏதுவானவனுக்கு நமஸ்காரம்.

௬௮. 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌾𑌯𑌨𑌮𑌃. ஜ்யேஷ்டாயநம :.

தனக்கும் நித்தியசூரிகளுக்கும் எப்பொழுதும் ஸர்வப்ரகாரத்திலும் அனுபவம் இருந்தாலும் கரைகாணப்படாத ஐசுவரியத்தை உடையவனானதால் அவர்களால் சிலாகிக்கத்தக்கவனுக்கு நமஸ்காரம்.

௬௯. 𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌾𑌯𑌨𑌮𑌃. ஶ்ரேஷ்டாயநம :.

அந்தநித்திய சூரிகளால்எப்பொழுதும்தங்கள் அனுபவப்ரீதியினால் செய்யும் ஸ்தோத்திரங்களோடுசேவிக்கப்பட்டுச் சிலாகிக்கப்படும் பிரசித்தி உடையவனுக்கு நமஸ்காரம்.

அந்தநித்திய சூரிகள் யாவர் அவர்களோடு என்னசம்பந்தமுண்டு என்றால் அவைகளைச் சொல்லுகின்றது.

௭௦. 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌯𑍇𑌨𑌮𑌃. ப்ரஜாபதயேநம :.

பத்தர் முக்தர்களைப் பார்க்கிலும் சிரேஷ்டமான ஜ்ஞானத்தை உடையவர்களாகையால் பிரஜை என்று சொல்லப்படுகின்றநித்தியசூரிகளுக்குச்சேஷியானவனுக்கு நமஸ்காரம்.

உசிதமான வீட்டை உடையவனென்று சொல்லுகின்றது.

௭௧. 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌾𑌯𑌨𑌮𑌃. ஹிரண்யகர்ப்பாயநம :.

நிர்த்தோஷமாயும் நித்தியமாயும் பரமசத்துவமாயுமிருக்கின்றதிரவியமானதால் சுவர்னத்தைப்போல மிகவும் அழகுள்ளஹிரண்யம் என்கின்றபரமபதமாகிற சிரேஷ்டமான வீட்டில் நித்தியவாஸம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

அதில்திவ்வியதேவியை உடையவனாயிருப்பதைச்
சொல்லுகின்றது.

எ௨. భూగర్భాయనమః. பூகர்ப்பாயநமஃ.

நல்ல அனுபவத்தைக் கொடுத்துத்தன்னால் தாங்கப்படுதற்குயோக்கியமான பூமியைத் தன்னிடத்தில் வாசஞ்செய்யும்படியாகத் தரித்துக் கொண்டு இருக்குமவனுக்கு நமஸ்காரம்.

எ௩. మాధవాయనమః. மாதவாயநமஃ.

லக்ஷ்மிக்கு நாயகனாயிருப்பவனுக்கு நமஸ்காரம்.

எ௪. మధుసూదనాయనమః. மதுசூதநாயநமஃ.

இப்படிக்கு யாவற்றையும் நிர்வகிக்குமவனாதலால் அசுரர்களை அழித்தல் முதலியவைகளால் எதிரில்லாதிருக்கின்ற ஐசுவரியத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

எ௫. ఈశ్వరాయనమః. ஈஶ்வராயநமஃ.

தனக்கு மேற்பட்டவன் இல்லாதவனாயிருந்தும் அன்னியர்களுக்குப் போகங்களைக்கொடுப்பதில் தடைபடாத இச்சையை உடையவனுக்கு நமஸ்காரம்.

தன் இச்சையைக் கெடுக்கிறவர்களிடத்தில் பிரகாசமான சத்துரு
சுபாவத்தை உடையவனென்பதைச் சொல்லுகின்றது.

எ௬. విక్రమిణేనమః. விக்ரமிணேநமஃ.

அதிசயமான பராக்கிரமத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

எ௭. ధన్వినేనమః. தந்விநேநமஃ.

இப்படிப்பட்ட நிரதிசயமான பௌரஷத்துக்குத்தகுந்த திவ்யமானசார்ங்கம்என்னும்வில்லை நித்தியமும் தரித்துக்கொண்டு இருக்குமவனுக்கு நமஸ்காரம்.

எ௮. మేధావినేనమః. மேதாவிநேநமஃ.

நித்தியமாயும் எல்லையற்றதாயும் இராநின்ற தன்பரிபூரணத்தன்மைக்குத்தக்க ஸர்வஜ்ஞத்துவத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

எ௯. విక్రమాయనమః. விக்ரமாயநமஃ.

வேதமயனானகருடனாலே அங்கங்கே ஸ்வேச்சையாய்ப் போக்குவரவு உடையவனுக்கு நமஸ்காரம்.

அ0. క్రమాయనమః. க்ரமாயநமஃ.

இப்படிப்பட்ட நித்தியசெல்வத்தினாலே மிகவும் நிறைந்திருக்கின்றவனுக்கு நமஸ்காரம்.

அக. ಅನುತ್ತಮಾಯನಮಃ. அநுத்தமாயநம:.

ஆதலால் தன்னைப்பார்க்கிலும் சிறந்தவஸ்து வேறு ஒன்றும் இல்லாதவனுக்கு நமஸ்காரம்.

அஉ. ದುರಾಧರ್ಷಾಯನಮಃ. துராதர்ஷாயநம:.

காம்பீரியாதிசயத்தினாலே சமுத்திரத்தைப்போல அவமானயோக்கியனன்றிக்கே இருக்குமவனுக்கு நமஸ்காரம்.

அ௩. ಕೃತಜ್ಞಾಯನಮಃ. க்ருதஜ்ஞாயநம:.

அஞாதியான அவித்தையினாலே சாஸ்திரத்தில் சொல்லி இருக்கின்ற உண்மையானகைங்கரியத்தையும் நிர்மமதையையும் மறந்துதங்களிடத்தில்ஏறியிருக்கின்ற சுதந்தரத்தன்மையை உடைய சமுசாரிகள்தனக்குச் சம்மதமானதைச் சொற்பமாகச் செய்தாலும் அதனை அநேகங்களாக எண்ணுமவனுக்கு நமஸ்காரம்.

அச. ಕೃತಯೇನಮಃ. க்ருதயேநம:.

அவர்களுக்கு அந்தச்சுகிர்தத்தையும் பிரசன்னனாய்த் தானேசெய்விக்குமவனுக்கு நமஸ்காரம்.

அ௫. ಆತ್ಮವತೇನಮಃ. ஆத்மவதேநம:.

அந்தச் சுகிர்தத்தைச் செய்கிறவர்களும் தன் அதீனமான ஸ்வரூபஸ்திதி பிரவர்த்தி நிவிர்த்திகளை யுடையவர்களாயிருப்பதால் அவர்களைத்தானென்றுசொல்லும்படி இருப்பவனுக்கு நமஸ்காரம்.

அ௬. ಸುರೇಶಾಯನಮಃ. சுரேஶாயநம:.

அற்பமானபதங்களை அபேட்சித்துக் கொண்டிருக்கும் பிரமாதிகளுக்கு அப்பதங்களைச் செவ்வையாகக் கொடுத்து ரக்ஷிப்பவனுக்கு நமஸ்காரம்.

அஎ. ಶರಣಾಯನಮಃ. ஶரணாயநம:.

வித்தியாசம் இல்லாமல் எல்லோருக்கும் கதியாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

அஅ. ಶರ್ಮಣೇನಮಃ. ஶர்மணேநம:.

சுகரூபனாயும் சிறந்தபலரூபனாயும் இருப்பவனுக்கு நமஸ்காரம்.

அகூ. ವಿಶ್ವರೇತಸೇನಮಃ. விஶ்வரேதஸேநம:.

யாவற்றையும் தன்காரியங்களாக உடையவனாதலால் தன்னை அறிவதற்குத்தக்கஞானம்உண்டாவதற்கும் தான் எழுந்தருளிஇருக்கும் திவ்விய தேசங்களில் கைங்கரியம் செய்வதற்கும் பிரஜைகளுக்குஞானேந்திரிய கருமேந்திரிய முதலியவைகளைக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூ0. ಪ್ರಜಾಭವಾಯನಮಃ. பிரஜாபவாயநம:.

ஸமஸ்தபிரஜைகளும் தன்னால் கொடுக்கப்பட்ட உபகரணங்களாலே தன்னுடைய தயைக்கு யோக்கியர்களாம்படி செய்விக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூக. అహ్నే నమః. அஹ்நே நம:.

அநாதியாயுள்ள அஜ்ஞானமாகிற நித்திரையின்முடிவில் தன்னை அறியத்தானே ஏதுவாயிருப்பதால் பகல்போன்று இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூஉ. సంవత్సరాయనమః. ஸம்வத்ஸராயநம:.

மேற்கூறியவாறு விழித்துக்கொண்டவர்களுக்கு அந்தஜ்ஞானம் கெடாமல் வளர்கைக்காக அவர்களிடத்தில் வாசஞ்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூங. వ్యాళాయనమః. வியாளாயநம:.

விழித்துக் கொண்டவர்களிடத்துக்குத் தான்போய் அவர்களைத் தன்னவர்களாகச் செய்துகொள்ளுகிறவனுக்கு நமஸ்காரம்.

கூச. ప్రత్యయాయనమః. ப்ரத்யயாயநம:.

அவர்களைவிச்வசிக்கச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூரு. సర్వదర్శనాయనమః. ஸர்வதர்ஶநாயநம:.

அவர்களுக்கு ஸமஸ்தமகிமைகளுடன் தன்னைக்காண்பிக்குமவனுக்கு நமஸ்காரம்.

கூசு. అజాయనమః. அஜாயநம:.

அவர்கள் தன்னை அடைவதற்கு விரோதங்களாயிருக்கும்யாவற்றையும் தானே எடுத்தெறியுமவனுக்கு நமஸ்காரம்.

கூஎ. సర్వేశ్వరాయనమః. ஸர்வேஸ்வராயநம:.

தன்னைச்சரணமடையச் சமர்த்தரும் அசமர்த்தருமாயிருக்கும் எல்லாருடைய சோம்பலையும் அசக்தியையும் பரிகரிக்கைக்காகச் சீக்கிரமாக அவர்களோடு சேருமவனுக்கு நமஸ்காரம்.

கூஅ. సిద్ధాయనమః. ஸித்தாயநம:.

அவர்களுக்குத் தன்சொரூபத்தினாலே ஸித்தோபாயனாய் இருப்பவனுக்கு நமஸ்காரம்.

கூகூ. సిద్ధయేనమః. ஸித்தயேநம:.

உபாயங்களினாலும் தானேபலனாக அடையப்படுமவனுக்கு நமஸ்காரம்.

க00. సర్వాదయేనమః. ஸர்வாதயேநம:.

சிரேஷ்டங்களாயும் அற்பங்களாயும் இருக்கின்ற ஸர்வபுருஷார்த்தங்களுக்கும் மூலமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

க0க. అచ్యుతాయనమః. அச்சுதாயநம꞉.

தன்னை அடைந்தவர்களைவிட்டுப்பிரியாதவனுக்கு நமஸ்காரம்.

க0உ. వృషాకపయేనమః. வ்ருஷாகபயேநம꞉.

சிரேஷ்டமான தர்மவராகரூபத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

க0ங. అమేయాత్మనేనమః. அமேயாத்மநேநம꞉,

இவ்வளவென்று எல்லைசெய்து அறியக்கூடாத சொரூபத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

க0ச. సర్వయోగవినిసృతాయనమః. ஸர்வயோகவிநிஸ்ருதாயநம꞉.

வேதமாகிய குகையில் மறைந்திருக்கின்றதான் ஸமஸ்தசாஸ்திரங்களாலும்லக்ஷணங்களாலும் தன்புத்தியால்நன்ருய்க்கற்பிதமான யோகமுதலிய உபாயங்களாலும் சுலபமாய்அறியப்படுகிறவனுக்கு நமஸ்காரம்.

க0ரு. వసవేనమః. வஸவேநம꞉.

அவர்களிடத்தில் அதிக ப்ரீதியோடுவாசுஞ் செய்பவனுக்கு நமஸ்காரம்.

க0சு. వసుమనసేనమః. வசுமநஸேநம꞉.

திரவியத்தினிடத்தில் உலகத்தார்மனம் வைப்பதுபோல அவர்களைத்தனக்குத் திரவியமாகஎண்ணி அவர்களிடத்தில் தன்மனத்தைவைக்குமவனுக்கு நமஸ்காரம்.

க0எ. సత్యాయనమః. ஸத்யாயநம꞉.

சாதுக்களிடத்தில் ப்ரீதியுள்ளவனுக்கு நமஸ்காரம்.

க0அ. సమాత్మనేనమః. ஸமாத்மநேநம꞉.

சாதுக்களிடத்தில் குணத்தின் உயர்வுதாழ்வுகளைப் பாராமல்சமமானமனத்தைஉடையவனுக்கு நமஸ்காரம்.

க0கூ. సమ్మితాయనమః. ஸம்மிதாயநம꞉.

சாதுக்களால் செவ்வையாய் அளவிட்டு அறியத்தக்கவனுக்கு நமஸ்காரம்.

தசரதசக்கிரவர்த்தி ஸ்ரீராமமூர்த்தியைப் பதினறுவயதைஉடையகுழந்தை யென்றும் வசுதேவர் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைத் தன்பிள்ளை என்றும் அளவிட்டுச் சொல்லத்தக்கவனு யிருந்தவன் என்பதுகருத்து.

கக0. సమాయనమః. ஸமாயநம꞉.

சாதுக்களிடத்தில்தீவரமந்ததசைகளைஎண்ணுமல்சமமாய்க்கௌரவிப்பவனுக்கு நமஸ்காரம்.

ககக. అమోఘాయనమః. அமோகாயநம꞉.

சாதுக்கள் தன்விஷயத்திற் செய்யும்பக்தி ஸ்தோத்திரங்கள்வியர்த்தமாகாதவண்ணம்செய்பவனுக்கு நமஸ்காரம்.

௧௧௨. పుండరీకాక్షాయనమః. புண்டரீகாக்ஷாயநம:.

நித்யமானவைகுந்தவாசிகளுக்கு நேத்ரரூபமாயிருப்பவனுக்கு நமஸ்காரம்.

௧௧௩. వృషకర్మణేనమః. வ்ருஷகர்மணே நம:.

இந்தப்பிரகாரம்சிரேஷ்டனுயிருக்கின்றஇவனுடையசெய்கையான துநம்போல்வாருக்கும்மேற்சொல்லியதுபோலச்சிரேயசை உண்டாக்கத்தக்கதாகையால்தர்மரூபமானசெய்கையைஉடையவனுக்கு நமஸ்காரம்.

௧௧௪. వృషాకృతయేనమః. வ்ருஷாக்ருதயேநம:.

ரூபமும்அப்படியேசிரேயசை உண்டாக்கத்தக்கதாகையால்தருமசொரூபமானரூபத்தைஉடையவனுக்கு நமஸ்காரம்.

ஆத்யாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதெய்விகம்என்கின்றமூவகைத்துன்பங்களையும் சாந்திசெய்கிறதில் அமிர்தத்தைத் தெளித்ததுபோலச் சீதளமானசெய்கையையும் மனோஹரமானரூபத்தையும் உடையவனென்பது கருத்து.

௧௧௫. రుద్రాయనమః. ருத்ராயநம:.

மேற்சொல்லியபடி ரூபத்தினுலும் பலசெய்கைகளாலும் நம்மை உருகும் இருதயத்தையும் ஆனந்தக்கண்ணீரையும் உடையவர்களாய்ப் பிரலாபிக்கச்செய்கின்றவனுக்கு நமஸ்காரம்.

௧௧௬. బహుశిరసేనమః பஹுசிரஸேநம:.

எண்ணிறந்தசிரசுகளைஉடையவனுக்கு நமஸ்காரம்.

௧௧௭. బభ్రవేనమః. பப்ரவேநம:.

இப்படிப்பட்டவனுயிருந்துகொண்டு உலகங்களைத்தாங்குகின்றவனுக்கு நமஸ்காரம்.

தன்சிரசிலிருக்கும் பூமாலையைப்போல வருத்தமில்லாமல் ஆதிசேஷரூபமாய் உலகங்களைத்தாங்குகின்றவன்என்பதுகருத்து.

௧௧௮. విశ్వయోనయేనమః. விஶ்வயோநயேநம:.

தொழப்பட்டஎல்லோருக்கும் ஆஶ்ரயனுனவனுக்கு நமஸ்காரம்.

௧௧௯. శుచిశ్రవసేనమః. சுசிஶ்ரவஸேநம:.

தொழுகின்றவர்கள் சொல்வதைக் கேட்குமவனுக்கு நமஸ்காரம்.

தோஷங்களைப்பாராமல்பரிசுத்தமாயும்கேள்விக்கு இன்பமாயும் இருப்பவைகளைக்கிரகிக்கின்றவனென்பதுகருத்து.

௧௨0. అమృతాయనమః. அம்ருதாயநம:.

தொழுகின்றவர்களுக்குஅளவற்றமாதுரியத்தினுலேமூப்புமரணங்களைப்பரிகரிக்கின்றவனும் நிரந்தரமும் தன்சேவையாலே திர்ப்திஉண்டாகாமற்செய்பவனுமானவனுக்குநமஸ்காரம்.

கஉக. శాశ్వతస్థాణవేనమః. ஶாஶ்வதஸ்தாணவேநம:.

நித்தியனுகிய தன்னை மறுஜனனம் இல்லாதவர்களால் எப்பொழுதும் அனுபவிக்கப்பட்டபோதிலும்தனக்குவிரயமொன்றுமில்லாமையால்அனுபவிப்பவர்களால்விடக்கூடாமலிருக்குமவனுச்கு நமஸ்காரம்.

கஉஉ. వరారోహాయనమః. வராரோஹாயநம:.

தன்னைப்பெறுகையே எல்லாச் செல்வத்திலும் சிறந்தசெல்வமாயிருக்குமவனுக்கு நமஸ்காரம்.

இவனை ஒழிந்தசுவர்க்கம் முதலான செல்வங்களெல்லாம்மிகவும் அற்பங்களானவைகளென்பது கருத்து.

இதுவரையிலும் வாசுதேவரூபமானபரசொரூபத்தைச்சொல்லப்பட்டது. இனி வியூஹசொரூபங்கள்சொல்லப்படுகின்றன.

இதுசங்கருஷ்ணரூபத்தைச்சொல்லுகின்றது.

கஉங. మహాతపసేనమః. மஹாதபஸேநம:.

சிரேஷ்டமானஞானத்தைஉடையவனுக்கு நமஸ்காரம்.

கஉச. సర్వగాయనమః. ஸர்வகாயநம:.

ஒரேநிலையில்நிற்கும்சாமர்த்தியத்தினுலேதன்னைத்தான் தரித்திருப்பதுபோலத் தன்னுல் சங்கரிக்கப்பட்டயாவற்றையும் தரித்துக்கொண்டு அவைகளுக்குள்இருப்பவனுக்கு நமஸ்காரம்.

கஉரு. సర్వవిదేనమః. ஸர்வவிதேநம:.

சங்கரிக்கப்பட்டவர்களைச்சிருஷ்டிசெய்யஇச்சைகொள்ளும் பிரத்தியும்ந ரூபத்தினுலே சிருஷ்டிகாரியங்கள் யாவற்றையும் உடையவனுக்கு நமஸ்காரம்.

இதனுல்உலகசிருஷ்டிக்குஎதுவானசக்திரூபமாயிருக்கின்றஐசுவரியத்தைஉடையவன்என்பதுவிளங்குகின்றது.

கஉசு. భానవేనమః. பாநவேநம:.

யாவற்றையும்நிர்மாணம்செய்தும்தனக்குஒருவிகாரமும்இல்லாமல்பிரகாசிக்குமவனுக்கு நமஸ்காரம்.

இதனுல்விகாரமற்று இருக்கையாகிற வீரியகுணத்தைஉடையவனென்பது விளங்குகின்றது.

ரக்ஷணகர்த்தாவான அநிருத்ரரூபத்தை இங்ஙூச்சொல்லுகின்றது.

கஉஎ. విష్వక్సేనాయనమః. விஷ்வக்ஸேநாயநம:.

எல்லாவிடங்களிலுமுள்ள ஸர்வப்ராணிகளும் தன்னையேநாதனுகஉடையவைகளாம்படியாவற்றுக்கும்நாதனுயிருக்குமவனுக்குநமஸ்காரம்.

இதனுல்யாவற்றையும் ரக்ஷிக்கத்தக்கசக்தியை உடையவனென்பது விளங்குகின்றது.

கஉஅ. జనార్దనాయనమః. ஜநார்தநாயநம:.

தன்னுடைய ரட்சணத்துக்கு விரோதிகளாயிருக்கிறவர்களை வேறுசகாயத்தை அபேட்சியாமல் தன் பராக்கிரமத்தால் சங்கரிக்குமவனுக்கு நமஸ்காரம்.

சங்கருஷண ரூபத்தால் பிரமாவுக்கு ஆசாரியனாகவிருந்து
வேதமாகிறகட்டளையை அவனுக்குக் கொடுத்தவன்
என்பதைச் சொல்லுகின்றது.

கஉகூ. వేదాయనమః. வேதாயநம:.

சிருஷ்டியால் பெற்றகரணங்களை உடையவர்கள் தன்னை அடையும்படியாக இருப்பவனுக்கு நமஸ்காரம்.

கஙo. వేదవిదేనమః. வேதவிதேநம:.

சங்கருஷண ரூபத்தினால் வேதங்களின் பொருள்களைச் சந்தேக விபரீதமற உபதேசித்தவனுக்கு நமஸ்காரம்.

கஙக. అవ్యంగాయనమః. அவ்யங்காயநம:.

வேதங்களுக்குச் செவ்வையாக்க் கற்பிக்கப்பட்டிருக்கின்ற அங்கங்களாகிய சிக்ஷை - வியாகரணம் - சந்தசு - நிருக்தம் - சோதிடம் - கல்பம் இவைகளால் விடப்படாதவனுக்கு நமஸ்காரம்.

கஙஉ. వేదాంగాయనమః. வேதாங்காயநம:.

அனேகபிரிவுகளோடு கூடிய வேதங்கள் தனக்குச் சரீரமாய்த் தன்னுடைய அந்தரங்கம் அவைகளால் வெளிப்படும்படி செய்பவனுக்கு நமஸ்காரம்.

கஙங. వేదవిదేనమః. வேதவிதேநம:.

அவனுடைய கட்டளைரூபமாயிருக்கின்ற வேதங்களும் தருமசாஸ்திரங்களும் தெய்வகாரியங்களையும் பிதுரு காரியங்களையும் செய்யவேண்டியதென்று கூறுகின்றபடியால் அந்த வேதங்களிலும் தர்ம சாஸ்திரங்களிலும் சொல்லுகிற தருமங்களை அனுஷ்டிக்கும்படி செய்கின்ற பிரத்தியும்நரூபத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

கஙச. కవయేనమః. கவயேநம:.

பிராணிகள் முன்செய்தவைகளை அறியுமவனுக்குநமஸ்காரம்.
இதனைஅடியில்வரும் மூன்றுதிருநாமங்களால் விவரித்துச்
சொல்லப்படுகின்றது.

கஙரு. లోకాధ్యక్షాయనమః. லோகாத்யக்ஷாயநம:.

கஙசா. సురాధ్యక్షాయనమః. சுராத்யக்ஷாயநம:.

கந௭. ధర్మాధ్యక్షాయనమః. தர்மாத்யக்ஷாயநம꞉.

தருமத்தைச்செய்பவர்களாகிற உலகத்தாருக்கும் இவர்களால் ஆராதிக்கப்படும் சுரர்களுக்கும் ஆராதனை ரூபங்களான தருமங்களுக்கும் அதிகாரியாய்ச்செய்யப்படாததற்குப் பலன் வருதலையும் செய்ததற்குப் பலன் இல்லாமற்போதலையும் விலக்கிப் பலன்களைக்கொடுப்பதற்கு அனுகூலமான ஞானத்தோடுகூடிய அநிருத்தரூபத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

கந௮. కృతాకృతాయనమః. க்ருதாக்ருதாயநம꞉.

பிரவர்த்தகம் நிவர்த்தகம் ஆகின்ற தருமங்கள் இரண்டில் பிரவர்த்தக தருமத்துக்கு அநித்தியபலத்தையும் நிவர்த்தகதருமத்திற்கு நித்தியபலத்தையுங் கொடுப்பவனுக்கு நமஸ்காரம்.

கநகூ. చతురాత్మనేనమః. சதுராத்மநேநம꞉.

இவ்விதமாக வாசுதேவ சங்கருஷண பிரத்தியும்ந அநிருத்தரென்கின்ற நான்குரூபங்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

ஒருவனுக்கு நான்குரூபங்கள் எப்படி அமையும்
என்னில் அதனைச் சொல்லுகின்றது.

க௪0. చతుర్వ్యూహాయనమః. சதுர்வ்யூஹாயநம꞉.

மேல் சொல்லிய பிரயோசனங்களுக்காகத் தியானம் ஆராதனம் செய்பவர்களுக்குத் தான் பிரகாசமாகும்பொருட்டுச் சேர்ந்தும் வேறுபட்டும்இருக்கின்ற ஆறுகுணங்களோடும் இவைகளை அறிதற்கு லட்சணங்களான அவயவம்-வர்ணம்-பூஷணம்-ஆயுதம்-வாகனம்-துவஜம் இவைகளோடும் ஜாக்கிரம்முதலான நான்கு அவஸ்தைகளோடுகூடியும் இருக்கின்றமூர்த்தங்களாலே நான்குபிரகாரமாகப் பிரிவுபட்டு இருப்பவனுக்கு நமஸ்காரம்.

க௪க. చతుర్దంష్ట్రాయనమః. சதுர்தம்ஷ்ட்ராயநம꞉.

மகாபுருஷலக்ஷணமான நான்குபற்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

க௪உ. చతుర్భుజాయనమః. சதுர்புஜாயநம꞉.

சங்கு-சக்கரம்-கதை-பதுமம் இவைகளைத்தரித்த நான்குபுஜங்களை உடையவனுக்கு நமஸ்காரம்

க௪ந. భ్రాజిష్ణవేనమః. ப்ராஜிஷ்ணவேநம꞉.

உபாசிக்குமவர்களுக்குத் தன்னைப்பிரகாசஞ்செய்யும் சுபாவத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

க௪௪. భోజనాయనమః. போஜநாயநம꞉.

உபாசகர்களாலேசுகமாய்அநுபவிக்கத்தக்கவனுக்குநமஸ்காரம்.

கசரு. భోక్త్రేనమః. போக்த்ரேநமஃ.

அவர்களால் ஸமர்ப்பிக்கப்பட்ட பிராணன் முதலியவைகளை அமிர்தத்தைப்போலத் தானும் போக்தாவாயிருந்து அனுபவிக்கு மவனுக்கு நமஸ்காரம்.

கசசு. సహిష్ణవేనమః. ஸஹிஷ்ணவேநமஃ.

தன் பக்தர்களாலே தன்னிடத்தில் பக்தி செய்வதற்கு முன்பும் பின்பும் அறிந்தும் அறியாமலும் சகல கரணங்களாலும் விதி நிஷேத சாஸ்திரங்களை அதிக்கிரமித்துச் செய்யப்பட்டவைகளையும், தன் விஷயமாகச் செய்யப்பட்டவைகளையும், தன்பக்தர் விஷயத்தில் செய்யப்பட்ட தன்னாலும் பொறுக்கவொண்ணாத அவமானம் நிந்தைமுதலிய அபராதங்களையும் சகிக்குமவனுக்கு நமஸ்காரம்.

கசஎ. జగదాదిజాయనమః. ஜகதாதிஜாயநமஃ.

உலகங்களுக்கு முதன்மையாயிருக்கின்ற திரிமூர்த்திகளில் ஒருவனாய் அவதரிக்குமவனுக்கு நமஸ்காரம்.

கசஅ. అనఘాయనమః. அநகாயநமஃ.

இவ்விதமாகச்சமுசாரத்தில் பிறந்தும் பாவம் இல்லாதவனும் பாவத்துக்கு விரோதியுமானவனுக்கு நமஸ்காரம்.

கசகூ. విజయాయనమః. விஜயாயநமஃ.

வேறுமூர்த்திகளான பிரம ருத்திராதிகள் சிருஷ்டி சங்காரம் முதலியவைகளால் ஜகத்தின் விஜயத்தை அடையும்படிக்குத் தானே செய்பவனுக்கு நமஸ்காரம்.

கரு0. జేత్రేనమః. ஜேத்ரேநமஃ.

பிரமருத்திரர்களைத் தன்அபிப்பிராயப்படிக்கு நடக்கச்செய்பவனுக்கு நமஸ்காரம்.

கருக. విశ్వయోనయేనమః. விஶ்வயோநயேநமஃ.

அதனால் ஸமஸ்தபிரபஞ்சங்களுக்கும் தானே காரணமானவனுக்கு நமஸ்காரம்.

கருஉ. పునర్వసవేనమః. புநர்வஸவேநமஃ.

மீண்டும்அந்தப் பிரமருத்திரர்முதலான ஸமஸ்ததேவதைகளிடத்திலும் அந்தராத்துமாவாக வாசஞ்செய்பவனுக்கு நமஸ்காரம்.

கருங. ఉపేంద్రాయనమః. உபேந்த்ராயநமஃ.

அதிதியினுடையபிள்ளைகளில் கடைசி பிள்ளையாகவும் இந்திரனுக்குத் தம்பியாகவும் பிறந்தவனுக்கு நமஸ்காரம்.

௧௫௪. വാമനായനമഃ. வாமநாயநம꞉.

இந்திரனைச் சம்ரக்ஷணைசெய்ய மஹாபலிசக்கரவர்த்தி யாகஞ் செய்தகாலத்தில் வாமனமூர்த்தியாக (குறுகினரூபனாக) அவதரித்தவனுக்கு நமஸ்காரம்.

௧௫௫. പ്രാംശവേനമഃ ப்ராம்சவேநம꞉.

அக்காலத்தில் மூன்றுலோகங்களையும் ஆக்கிரமிக்கத்தக்க திரிவிக்ரம அவதாரமாகிய உயர்ந்தரூபத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

௧௫௬. അമോഘായനമഃ. அமோகாயநம꞉.

அபரிமிதபிரபாவனுகையால் வியர்த்தமானது ஒன்றுமில்லாதவனுக்கு நமஸ்காரம்.

௧௫௭. ശുചയേനമഃ. சுசயேநம꞉.

தன்னாலே இப்படிப்பட்ட உபகாரத்தைப் பெற்றவர்களிடத்தில் பிரதி உபகாரத்தை அபேட்சிக்காதவனுக்கு நமஸ்காரம்.

௧௫௮. ഊർജ്ജിതായനമഃ. ஊர்ஜிதாயநம꞉.

நமுசிமுதலான சத்துருக்களுடைய வதை பந்தனமுதலியவைகளில் உறுதியான பலத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

௧௫௯. അതീന്ദ്രായനമഃ. அதீந்த்ராயநம꞉.

இந்திரனுக்குத் தம்பியாக இருந்தும் ஐசுவரியத்திலும் வீரச்செய்கைகளிலும் அவனை அதிக்கிரமித்தவனுக்கு நமஸ்காரம்.

௧௬0. സംഗ്രഹായനമഃ. ஸங்க்ரஹாயநம꞉.

திரிவிக்கிரம அவதாரத்தில் தன்பக்தர்களுக்கு யத்தனமில்லாமலே சுலபமாகத் தன்பாதபதுமதரிசனம் கிடைக்கும்படிச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

௧௬௧. സർഗ്ഗായനമഃ. ஸர்காயநம꞉.

பத்தர்கள்நிமித்தம் ஜனனத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

௧௬௨. ധൃതാത്മനേനമഃ. த்ருதாத்மநேநம꞉.

இப்படிக்குத் தன்னைக்கொடுத்து ஆத்துமகோடிகளைத் தாங்குமவனுக்கு நமஸ்காரம்.

௧௬௩. നിയമായനമഃ. நியமாயநம꞉.

தன்னுடைய பக்தர்களை விரோதிக்கையால் மஹாபலிமுதலானவர்களை அடக்கினவனுக்கு நமஸ்காரம்.

கசுச. యమాయనమః. யமாயநம:.

சமஸ்தர்களுக்கும் அனுகூலத்தைச்செய்ய அவர்களுச்குள் அந்தரியாமியாக இருப்பவனுக்கு நமஸ்காரம்.

கசுரு. వేద్యాయనమః. வேத்யாயநம:.

மேற்சொல்லியபிரகாரம் அவதரித்து இந்திரனைவிட அதிக்கிரமித்த ஐசுவரியம் உள்ளவனாய் எல்லாராலும் பஹிரங்கமாக அறியத்தக்கவனுக்கு நமஸ்காரம்.

கசுசு. వైద్యాయనమః. வைத்யாயநம:.

தன்னை அறிந்தவர்களுக்குப் பிறவிநோயைப் போக்கப்பட்ட வித்தையை நன்ருகத்தெரிந்தவனுக்கு நமஸ்காரம்.

கசுஎ. సదాయోగినేనమః. ஸதாயோகிநேநம:.

எப்பொழுதும் விழித்துக்கொண்டே இருக்குமவனுக்கு நமஸ்காரம்.

கசுஅ. వీరఘ్నేనమః. வீரக்நேநம:.

தன்னை அறிவதைக்கெடுக்கப்பட்ட அற்பவீரத்தை உடையவர்களாயும் இந்த உலகம் அசத்தியம், நிலை இல்லாதது, ஈஸ்வரன் இல்லாதது என்று சொல்லுகிற துவேஷிகளாயும் குரூர்களாயும் இருக்கிற நர அதமர்களைச் சமுசாரத்திலே தள்ளிச் சங்கரிக்குமவனுக்கு நமஸ்காரம்.

கசுகூ. మాధవాయనమః. மாதவாயநம:.

தன்விஷயமான பிரமவித்தைக்குத் தானே ஆசாரியனுகுமவனுக்கு நமஸ்காரம்.

கஎ0. మధవేనమః. மதவேநம:.

பிரமவித்தை லபித்தவர்களுச்கு மதுரமாயிருக்குமவனுக்கு நமஸ்காரம்.

ஞானிகளுக்கு நான் பிரியன், எனக்கு ஞானிகள் பிரியர் என்று பகத் வாக்கியமும் இருக்கின்றது.

கஎக. అతీంద్రియాయనమః. அதீந்திரியாயநம:.

ஞானத்துக்குத் துணையான இந்திரியங்களை (கண்முதலான கருவிகளை) அதிக்கிரமித்து இருக்குமவனுக்கு நமஸ்காரம்.

கஎஉ. మహామాయాయనమః. மஹாமாயாயநம:.

மகத்தானதாயும், தன்னைச் சரணமடையாத ஸகல ஜனங்களையும் மோகிக்கச்செய்யத்தக்கதாயும், திரைச்சீலைபோலுமிராநின்ற மாயையை உடையவனுக்கு நமஸ்காரம்.

சாங்கியசாஸ்திரத்தில் சொல்லப்படுகிற ஈஸ்வர லட்சணத்துக்கு வேறுபட்ட ஐசுவரியகுணத்தைச்சொல்லுகின்றது.

கஎ௩. మహోత్సాహాయనమః. மஹோத்சாஹாயநம:.

மகத்தான கர்த்ருத்துவத்தை (எல்லாச்செயல்களையும் செய்கைக்கு ஏதுவாயிருக்கின்ற சக்திரூபமான ஐசுவரியத்தை) உடையவனுக்கு நமஸ்காரம்.

எல்லாக்காரியங்களிலேயும் அந்யனாலே ஏவப்படாததும், தடையற்றதுமாய் இராநின்ற தன் சங்கல்பலேசமாத்திரத்தினாலே சேதனர்களுடைய விசித்ரங்களான கர்மங்களின் தாரதம்மியத்துக்கு அநுகுணமாக போக்ய போகோபகரண போகஸ்தானங்களை யுண்டாக்குவதில் சர்வ சக்தியையுடையவனும் சுதந்தரனும் இருப்பவனென்பதும், இந்தச் சக்தியின் திவலையினுடைய பரமாணுவை அணிமாதிகளாகப் பிர்மா முதலானவர்களிடத்தில் விளங்கச் செய்கிறவன் என்பதும் கருத்து.

கஎ௪. మహాబలాయనమః. மஹாபலாயநம:.

சகாயத்தைஅபேட்சிக்கிற லோகத்தாரைப்போலன்றியே சகாயத்தை வேண்டாத மகத்தானபலத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

இவன் அபரிமிதமான கிரியைகளைச்செய்தும் சிரமத்தை அடையாதவன் என்பதும், தன்மகிமையைத்தவிர வேறு ஆதாரம் வேண்டாதவன் என்பதும், பிறருக்கு அசக்கியமான செயல்களில் வியாபித்த தன் சக்தியினுடைய வெற்றி உல்லாசத்தை உடையவனாய்த் தன்சரீரத்தைப்போலச் சகலத்தையும் தாங்குகிறவன் என்பதும், இந்தப் பலத்தில் லேசமானது காற்று மலை பூமி முதலியவைகளில் இருக்கின்றதென்பதும் கருத்து.

அஸர்வஜ்ஞனே காரணமென்கிற (யாவற்றையும் அறியும் அறிவு இன்மையாகச் சொல்லுகின்ற) மதத்தை நிராகரிக்கின்றது.

கஎ௫. మహాబుద్ధయేనమః. மஹாபுத்தயேநம:.

மகத்தான ஞானம் உள்ளவனுக்கு நமஸ்காரம்.

சமஸ்ததேசங்களையும் காலங்களையும் சுபாவங்களையும் சமீபத்திலிருப்பவைகளையும் தூரத்திலிருப்பவைகளையும் அறிவதும், யாவற்றையும் அறியும் தன்மையால் மாறுபாடின்றி யதார்த்தத்தை அறிவதும், கிலேசரகிதமானதும், சுபாவீகமானதும், நித்தியமானதும், கண்முதலியகரணங்களை அபேட்சிக்காம லிருக்கிறதும், சுதந்தரத்தினாலே அபேட்சிக்கிறதும், சருவகாரியங்களிலும் சக்திஉள்ள தாகையால் ரூபம் ரசம் முதலியவைகளைக் கிரகிக்கத்தக்ககரணங்களை வேண்டியநியமமானது தனக்குஅபேக்ஷை இல்லாததுமான ஞானத்தைஉடையவனென்பதும் இவனால்சிருஷ்டிக்கப்பட்ட திரியக்கு ஜந்துக்களில் ஸர்ப்பமானது கண்களினாலே பார்க்கிறதும் கேட்கிறதுமா யிருக்கிறபடியால் ஒரு இந்திரியத்தின் செய்கையை மற்றொரு இந்திரியத்தைக் கொண்டு நடத்துகிற இவனுக்கு ஒரு அருமையும் இல்லைஎன்பதும் கருத்து.

களசு. మహావీర్యాయనమః. மஹாவீர்யாயநமః.

விகாரம்உண்டாகுங்காரணங்களிருந்தும் விகாரத்தைஅடையாத தன்மையுள்ள மகத்தானவீரியத்தை உடையவனுக்கு நமஸ்காரம். அகிற்கட்டை கஸ்தூரி புஷ்பங்கள் தாம் விகாரப்படாமல் இருந்துகொண்டேபரிமளத்தால் இதரர்களை விகாரப்படுத்துவதுபோல் இவனும் விகாரமில்லாமல் முன்னிலைமாத்திரத்தினலேஎல்லைகடந்தகாரியங்களைச் செய்பவனென்பதுகருத்து.

களஎ. మహాశక్తయేనమః. மஹாசக்தயேநமః.

சிவனை நிமித்தமாத்திரமென்று சொல்லுகின்றசைவமதம்போலன்றியேதானேஉபாதானகாரணமாகும்படி மகத்தானசக்தியை உடையவனுக்கு நமஸ்காரம்.

சேதனகோடிகள் அடங்கிய பரிணமயோக்கியதையுடையஸூக்ஷ்மபிரகிருதியைச் சரீரமாகவுடையதானே ஜகத்தாய்ப்பரிணமிக்கையாலே தானே உபாதான காரணமாயிருக்கிறவனென்பதற்கும், ஸ்வரூபத்துக்கு விகாரமில்லாமையாலே நிர்விகாரனென்பதற்கும், பரஸ்பர விரோதமில்லை. ஆதலால் விசிஷ்ட விசேஷணத்வாரகமாக ஒரு சிலந்திக்குண்டாகிய பரிணமம், ஸர்வசக்தியுடையவனுக்குக் கூடாது ஒழியாது என்பதும் கருத்து.

களஅ. మహాద్యుతయేనమః. மஹாத்யுதயேநமః.

சகாயத்தை அபேட்சிக்கின்ற மண் முதலிய காரணங்களைப் போலன்றியே வேறு சகாயத்தை வேண்டாத மகத்தான தேஜஸ்ஸை யுடையவனுக்கு நமஸ்காரம்.

இந்தப்பிரகாசம் உள்ளும்புறம்புமான இருளுக்கு விரோதமானது என்பதும் ஸர்வருக்கும்சந்தோஷகரமானது என்பதும் பயங்கரமற்றதுமாயிருக்கிறதென்பதும்,இந்ததேஜஸ்ஸினுடைய லேசமானது சந்திர சூரியமாணிக்கமுதலியவைகளில் பேதமாகப்பிரகாசிக்கின்றதென்பதும் கருத்து.

களகூ. అనిర్దేశ్యవపుషేనమః. அநிர்தேஸ்யவபுஷேநமః.

ஆறுகுணங்களும் பிரகாசிப்பிக்கத்தக்கதான சரீரத்தைஉடையவனைதால் நிர்த்தேசிக்கக்கூடாதசரீரத்தைஉடையவனுக்கு நமஸ்காரம்.

வர்ணம் *ரூபம் முதலிய விசேஷணங்களைக்கொண்டு நிர்த்தேசிக்கப்படாதவனென்பதும் உபமானமற்ற சரீரத்தை உடையவனென்பதும் கருத்து. * ரூபம்=அழகு.

கஅ0. శ్రీమతేనమః. ஸ்ரீமதேநமః.

இதற்கு அநுகுணமான திவ்விய பூஷணசம்பத்தோடு நித்தியஸ்ரீங்கூடி இருக்கின்றவனுக்கு நமஸ்காரம்.

கஅக. అమేయాత్మనేనమః. அமேயாத்மநேநம:.

இப்படிக்குப் பலவகையான குணங்களுக்குத் தகுந்த சமுத்திரம் போன்ற கம்பீரசுபாவத்தை உடையவனுக்கு நமஸ்காரம்,

கஅஉ. మహాద్రిధృతేనమః மஹாத்ரித்ருதேநம:.

அதற்குஅனுகுணமானயதேஷ்டசெயல்களை உள்ளவனும் சமுத்திரத்தைக்கடைந்தகாலத்தில்மகத்தான மந்தரகிரியைத் தாங்கினவனும் ஆனவனுக்கு நமஸ்காரம்,

கஅ௩. మహేష్వాసాయనమః மஹேஷ்வாஸாயநம:.

மகத்தாயும் மனோகரமுமாயுமிருக்கிற பாணப்பிரயோகத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

இதுசமுத்திரபந்தனம் ராவணசங்காரம் முதலானகாலங்களில் எனவறிக.

கஅச. మహీభర్త్రేనమః மஹீபர்த்ரேநம:.

பூமியை லேசாய்த் தாங்குகின்ற லீலையை உடையவனுக்கு நமஸ்காரம்.

கஅரு. శ్రీనివాసాయనమః. ஸ்ரீநிவாஸாயநம:,

சமுத்திர மதனகாலத்தில் பிறந்தலட்சுமியைத் தரிசனசமத்கார வசனங்களாலே தன்மார்பில் ஏறச்செய்வதுமுதலான திவ்வியசேஷ்டைகளை உடையவனுக்கு நமஸ்காரம்.

கஅசா. సతాంగతయేనమః. ஸதாங்கதயேநம:.

சுயேச்சையான தன்செயல்களால்தன்பக்தர்களானசத்துக்களுக்குப்பிரியத்தைச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கஅஎ. అనిరుద్ధాయనమః. அநிருத்தாயநம:,

விரோதிகளை நாசஞ் செய்து அளவற்ற சிவர்களுக்கு ஜீவன ஔஷதமாயும் இருக்கின்ற திவ்வியசெயல்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

கஅஅ. సురానందాయనమః. சுராநந்தாயநம:.

அவதாரங்களுக்குமூலமாயிருக்கின்ற அநிருத்தர் தேவர்களுக்கு ஆபத்காலத்தில் அம்சாவதாரத்தினலே துணையாய் அவர்களை ஆநந்திக்கச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கஅகூ. గోవిందాయనమః. கோவிந்தாயநம:.

அந்தத்தேவதைகளால் சொல்லப்படும் ஸ்துதிவசனங்களை அடைந்தவனுக்கு நமஸ்காரம்.

கசுO. గోవిదాంపతయేనమః கோவிதாம்பதயேநம:.

வேதவாக்கியத்தைஅறிந்தவர்கள்ஞானத்தைப்பெற அவர்களால் தான்ஆராதிக்கப்பட்டுஅவர்களைச்சம்ரக்ஷணைசெய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கசுக. మరీచయేనమః. மரீசயேநம:.

குருடனைப்போன்று அறிவற்றிராநின்ற பிராணிகளுக்கு அவதாரங்களாலே நிர்ம்மலமான தன்ரூபத்தைப் பிரகாசஞ் செய்பவனுக்கு நமஸ்காரம்.

ஊசிமல்லிகைப்புஷ்பத்தைப்போலும் சந்திரனைப்போலும் மநோகரமானகாந்தியை உடையவனென்று தியாந மார்க்கத்தில் சொல்லப்படுகின்றது.

கசுஉ. దమనాయనమః தமநாயநம:.

தன்காந்திஆகியகங்கையினாலேபிறவிஆகிய வெப்பத்தைப் போக்குமவனுக்கு நமஸ்காரம்.

கசுங. హంసాయనమః. ஹம்ஸாயநம:.

மநோகரமான நடையை உடையவனுக்கும் சத்துவகுணந்தங்கும் இடமுமானவனுக்கும் நமஸ்காரம்.

கசுச. సుపర్ణాయనమః. சுபர்ணயநம:.

சமுசாரமாகிய சமுத்திரத்தின்கரையைச் செவ்வையாய்அடையச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கசுரு. భుజగోత్తమాయనమః. புஜகோத்தமாயநம:.

ஆதிசேஷனுக்கு உத்தமமான சுவாமியாயிருப்பவனுக்கு நமஸ்காரம்.

கசுசு. హిరణ్యనాభాయనమః. ஹிரண்யநாபாயநம:.

சுவர்ணமயமானநாபிகமலத்தையுடையவனுக்கு நமஸ்காரம்.

கசுஎ. సుతపసేనమః. ஸுதபஸேநம:.

பிராணிகள்செய்ததை அறியத்தக்க நல்லஞானமூர்த்தியானவனுக்கு நமஸ்காரம்.

கசுஅ. పద్మనాభాయనమః. பத்மநாபாயநம:.

கமலரூபமான நாபியை உடையவனுக்கு நமஸ்காரம்.

கசுசு. ప్రజాపతయేనమః ப்ரஜாபதயேநம:.

அந்தப்பதுமத்தினிடத்தில் பிறந்த ருத்திரன்முதலான பிரஜாபதிகளுக்குச் சுவாமியானவனுக்கு நமஸ்காரம்.

இது நைமித்திகசிருஷ்டிபிரளயவிஷயமானதென்று அறிக.

உ00. అమృత్యవేనమః அம்ருத்யவேநம ঃ.

யமனுக்கும் யமனுகையால் தன்னை அடைந்தவர்களுக்கு ஒரு வராலும்இமிசைவராமல்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

உ0க. సర్వద్రుశేనమః. ஸர்வத்ருசேநம ঃ.

அநுகூலராயும் பிரதிகூலராயும் பொதுவானவர்களாயும் இரா நின்ற எல்லோரையும் அவரவர்கள் யோக்கியதைக்குத் தக்கபடி நியமிக் கிறவனுக்கு நமஸ்காரம்.

உ0உ. సింహాయనమః. சிம்ஹாயநம ঃ.

எங்கும்பரிபூரணனுன தானே மகத்தான நரசிங்கரூபத்தை உ டையவனுனவனுக்கு நமஸ்காரம்.

உ0௩. సంధాత్రేనమః. ஸந்தாத்ரேநம ঃ.

பயங்கரனுயிருந்தும் அன்பையுடைய பிரகலாதாழ்வான் முத லானவர்களை ஆலிங்கனஞ்செய்து கொண்டவனுக்கு நமஸ்காரம்.

உ0௪. సంధిమతేనమః. சந்திமதேநம ঃ.

அந்தப் பக்தர்களிடத்தில் நித்தியமான சம்பந்தத்தை உடைய வனுக்கு நமஸ்காரம்.

உ0௫. స్థిరాయనమః. ஸ்திராயநம ঃ.

அந்தப் பக்தர்களோடு சேருமிடத்தில் அவர்களுடைய அபசா ரங்களால் சலநமில்லாதவனுக்கு நமஸ்காரம்.

உ0௬. అజాయనమః. அஜாயநம ঃ.

மற்றவர்களைப்போலப்பிறக்காமல் தூணிலேபிறந்தவனுக்கு நமஸ் காரம்.

உ0௭. దుర్మర్షణాయనమః. துர்மர்ஷணுயநம ঃ.

சத்துருக்களாலே சகிக்கக்கூடாத கோபத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

உ0௮. శాస్త్రేనమః. ஶாஸ்த்ரேநம ঃ.

எல்லோருக்கும் உபத்திரவம் செய்கிறவனைச் செவ்வையாய்ச் சி க்ஷிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

உ0௯. విశ్రుతాత్మనేనమః. விஶ்ருதாத்மநேநம ঃ.

எப்பொழுதும் எல்லோரும் ஆச்சரியத்தினுலே ஸ்தோத்திரம் பண்ணும்படி பிரசித்தி அடைந்த சிங்கரூபச்செயல்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

உகO. సురారిఘ్నేనమః. சுராரிக்நேநம :.

சுரர்களுக்குச் சத்துருவாகவிருந்த இரணியகசிபனுடையமார் பைப்பிளந்து சங்கரித்தவனுக்கு நமஸ்காரம்.

மச்சாவதாரத்தைச்சொல்லுகின்றது.

உகக. గురుతమాయగురవేనమః. குருதமாயகுரவேநம :.

ஸமஸ்தவித்தைகளையும் பிரமனுக்கும் மற்றுமுள்ள பூர்வகுரு வானவர்களுக்கும் உபதேசித்த பரமாசாரியனானவனுக்கு நமஸ்காரம்.

உகஉ. ధామ్నేనమః தாம்நேநம :.

சங்காரத்தினாலே நஸ்வரமான (அநித்தியமான) சராசரங்களின் விதைகளடங்கின ஓடத்துக்கு ஓடக்காரனாயும் அவைகளுக்கு ஆதாரமா யும் இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

உகங. సత్యాయనమః ஸத்யாயநம :.

அந்த அவதாரகாலத்தில் தன்னை அடைந்திருந்த சத்துக்களான மநுமுதலானவர்களில் தானும் சத்தியரூபனாயிருந்தவனுக்கு நமஸ்காரம்.

உகச. సత్యపరాక్రమాయనమః ஸத்தியபராக்ரமாயநம :.

அந்த மநுமுதலான ஆசிரிதரிடத்தில் வஞ்சனை அற்ற செயலை உடையவனாயிருந்தவனுக்கு நமஸ்காரம்.

உகரு. నిమిషాయనమః. நிமிஷாயநம :.

தன்னைவிரோதிக்கும்வர்களிடத்தில் கடாட்சியாமலிருக்குமவ னுக்கு நமஸ்காரம்.

திவ்வியமான மச்சாவதாரரூபத்தைச் சொல்லுகின்றது.

உகசா. అనిమిషాయనమః. அநிமிஷாயநம :.

ஸஜ்ஜனர்களிடத்தில் இமைகூட்டாமல் ஜாக்கிரதையாயிருக்கிற வனுக்கு நமஸ்காரம்.

உகஎ. స్రగ్విణేనమః ஸ்ரக்விணேநம :.

திரியக்காயிருந்தும் பரத்துவத்தை அறிவிக்கின்ற வைஜயந்திமா லையை நித்தியமும் தரித்துக்கொண்டிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

உகஅ. వాచస్పతయేనమః. வாசஸ்பதயேநம :.

ஸ்ரீமச்சபுராணத்தைக்கொண்டு வேதங்களின் பொருளைத்தானே வெளிப்படுத்தினவனுக்கு நமஸ்காரம்.

உககூ. ఉదారధియేనమః உதாரதியேநம :.

இந்தப்பிரகாரம் எல்லோருக்கும் உபகாரமான ஸர்வஜ்ஞயதன் மையை உடையவனுக்கு நமஸ்காரம்.

உஉ0. అగ్రణ్యేనమః அக்ர்ண்யைநமః.

இந்தப்பிரகாரம் எல்லாவற்றிற்கும் உயர்ந்தபதத்தை அடையச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

உஉக. గ్రామణ్యేనమః. க்ராமண்யைநமః.

அந்தஉயர்ந்தபதத்தில்நித்யசூரிகளுடையகூட்டத்தை அடையச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

உஉஉ. శ్రీమతేనమః. ஸ்ரீமதேநமః.

கண்ணழகினல் நித்தியஐசுவரியமுடையவனாய் விளங்குகிறவனுக்கு நமஸ்காரம்.

உஉங. న్యాయాయనమః. ந்யாயாயநமః.

ஒருவரிடத்திலும் துவேஷம்இல்லாதவனாகையால் நியாயமானதைச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

உஉச. నేత్రేనమః. நேத்ரேநமః.

நிருவாகசீலனானவனுக்கு நமஸ்காரம்.

உஉரு. సమీరణాయనమః. சமீரணாயநமః.

தனக்கு இஷ்டமானசெயல்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

ஞானரூபமானஅவதாரத்தினாலே பயன்பட்ட புருஷஸூக்தமுதலானவைகளின் பொருள்களைச் சேர்ந்த திருநாமங்களைச் சொல்லுகின்றன.

உஉசு. సహస్రమూర్ధ్నేనమః. சஹஸ்ரமூர்த்நேநம ః.

ஆயிரம்சிரசுகளை உடையவனுக்கு நமஸ்காரம்.

உஉஎ. విశ్వాత్మనేనమః. விஶ்வாத்மநேநம ః.

இந்தஞாநசக்திகளாலே எல்லாவற்றிலும் வியாபித்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

உஉஅ. సహస్రాక్షాయనమః. சஹஸ்ராக்ஷாயநம ః.

ஆயிரங்கண்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

உஉகூ. సహస్రపదేనమః. ஸஹஸ்ரபதேநம ః.

ஆயிரம்பாதங்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

உங0. ఆవర్తనాయనమః. ஆவர்த்தநாயநம ః.

லீலாவிபூதிஆகிய ஏற்ற சுத்திரத்தைச் சுழலச்செய்பவனுக்கு நமஸ்காரம்.

உ௲க. నివృత్తాత్మనేనమః. நிவ்ருத்தாத்மநேநம꞉.

திரிபாத்விபூதியிலிருக்கிறவனானதினால் லீலாவிபூதியில் அகப்படாதசொரூபத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

பரத்துக்குப்பரமாயும்மகத்துக்குமகத்தாயும் இருக்கிறவனென்று சொல்லுகின்றது.

உ௲உ. సంవృతాయనమః. ஸம்வ்ருதாயநம꞉.

தமோகுணத்தை உடையவர்களாயும் மூடர்களாயும் இருக்கிறவர்களுக்கு மறைவாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

உ௲௩. సంప్రమర్దనాయనమః. ஸம்ப்ரமர்த்தநாயநம꞉.

தன்னுடையஞானத்தினாலேஅஞ்ஞானஇருளைச் செவ்வையாய்த் தேய்க்கிறவனுக்கு நமஸ்காரம்.

உ௲ச. అహస్సంవర్తకాయనమః. அஹஸ்ஸம்வர்த்தகாயநம꞉.

பகல்முதலானகாலங்களின்சுழற்சிக்குக் காரணமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

இந்தக்காலமானது இறப்பு, நிகழ்வு எதிர்வு என்கின்ற மூன்றுவிதமாய் நித்தியமும்பகவானுடையகிரீடைக்குத் துணைக்காரணமாயும் கருதரித்தல் பிறத்தல் வளருதல் பருத்தல் குறைதல் நாசமடைதல் என்கின்ற ஆறுவிகாரங்களுக்கும் பிரகிருதிபுருஷர்களுடைய சையோக வியோகங்களுக்கும் காரணமாயும் இருக்கிறதென்பது கருத்து.

உ௲ரு. వహ్నయేనమః. வஹ்நயேநம꞉.

தேசரூபமாயிருந்துகொண்டு ஸமஸ்தத்தையும்தாங்குகிறவனுக்கு நமஸ்காரம்.

தேசம்என்கிறது பரமபதம். இங்குள்ள ஆகாசமுந்திக்குமுதலியவைகளும் அதில் ஒருமூலைபோல இருக்கின்றன.

உ௲சா. అనిలాయనమః. அநிலாயநம꞉.

பத்தர் முத்தர் நித்தியர்களை உஜ்ஜீவிக்கச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

பகவானுடையஒருகலை பிரசித்தமானகாற்றாயிருக்கின்றது என்றும் பொருள்படுகிறது.

உ௲எ. ధరణీధరాయనమః. தரணீதராயநம꞉.

ஸர்வத்துக்கும் ஆதாரமான பூமியைத் தாங்குகிறவனுக்கு நமஸ்காரம்.

வராகரூபத்தினாலே பூமியையும் ஆகாசத்தையும் தன்சங்கல்பத்திலேயே தன்வசம் செய்துகொண்டிருந்தவனென்று வேதம் சொல்லுகின்றது.

உ௩அ. సుప్రసాదాయనమః. ஸுப்ரஸாதாயநம:.

ஸர்வத்துக்கும் ஆதாரமானதானே தன்னுடைய கிருபையினா ல் தன்னைச் சேதனர்கள் அறியும்படிசெய்கிறவனுக்கு நமஸ்காரம்.

உ௩௯. ప్రసన్నాత్మనేనమః. ப்ரஸந்நாத்மநேநம:.

தன்னால்தானே கோரியபலனை உடனே அநுபவிக்கிறவ ஞன தினால் ஆசை முதலியவைகளால் கலங்காமல் தெளிந்தமனத்தை உடைய வனுக்கு நமஸ்காரம்.

உ௪0. విశ్వసృజేనమః. விஸ்வஸ்ருஜேநம:.

குணதோஷங்களைப் பாராமல் தயையினால் ஸமஸ்தத்தையும் சிரு ஷ்டிசெய்கிறவனுக்கு நமஸ்காரம்.

உ௪க. విశ్వభుగ్విభవేనమః. விஸ்வபுக்விபவேநம:.

அப்படியே யாவற்றிலும் வியாபித்துப் பாலனஞ்செய்கிறவனுக் கு நமஸ்காரம்.

உ௪உ. సత్కర్త్రేనమః. ஸத்கர்த்ரேநம:.

தன்னை சஜ்ஜனர்கள் எவ்விதமாய்ப் பூஜிக்கிறார்களோ அவ்வித மாய்த் தானும் பிரதிபூஜைசெய்கிறவனுக்கு நமஸ்காரம்.

உ௪௩. సత్కృతయేనమః. ஸத்க்ருதயேநம:.

அந்த சஜ்ஜனர்களாலே பூஜிக்கப்பட்டு அவர்கள் சிரத்தையாய் அற்பிதஞ்செய்த சொற்பத்தையுந் தான்செய்த உபகாரத்துக்கு அதிகமாக எண்ணித் தன்மகிமைக்குத் தகுந்தகுணத்தினாலே சந்தோஷிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

சாஸ்திரங்களில் சொல்லுகிறபிரகாரம் ஏகாந்திகளான பக்தர்க ளாலே செய்யப்பட்ட பூஜையைத் தன்சிரசில் ஏந்திக்கொண்டு அவர்களைச் சந்தோஷிக்கச்செய்கிறவனென்றும் சபரியினாலும் மாலாகாரனாலும் பூஜிக் கப்பட்டவனென்றுங் கூறி இருக்கின்றது.

உ௪௪. సాధవేనమః. ஸாதவேநம:.

பக்தர்கள் அபேட்சித்தால் தூது சாரத்தியமுதலான காரியங்க ளைச்செய்து அவர்கள் காரியத்தைச் சாதிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

உ௪ரு. జహ్నవేనమః. ஜஹ்நவேநம:.

பக்தி இல்லாதவர்களிடத்தில் தன் பிரபாவத்தை மறைக்கிறவனு க்கு நமஸ்காரம்.

இந்தத் திருநாமம் வேதஸாரோப நிஷத்ஸாரதரா நுவாக ஸாரதமகாயத்திரியில் முதலோதப்படுகிறதாய்ப் பொருள்முடிவைப் பிரதிபாதிப்பதாய் அஸாதாரணயோகரூடி பதமாயிருக்கிறபடியால் அபர்யவஸான வ்ருத்தி அவயவ ஶக்திகளாகிற நியாயங்களைக்கொண்டு ஸர்வ ஶப்தங்களையும் நாராயண பர்யவஸானங்களாக்குகிறது மல்லாமல், நியாய நிரபேக்ஷமாக நிகிலவேதாந்த நிர்வாஹகமாயிருந்துள்ள நாராயணானுவாகம் ஸர்வ வேதாந்தங்களிலும் பரப்பிரம்ம பரந்தத்வ, பரமாத்ம, பரஞ்சோதி, பராயண, புருஷ,ஸதாத்ம,அக்ஷர அச்சுத ஹிரண்யகர்ப்ப பிரஜாபதி சிவ ஶம்புப் பிரமுக ஶப்தங்களாலே நிர்திஷ்டமான வஸ்துவை அவ்வோ ஶப்தங்களாலே அநுவதித்து நாராயணனென்று விசேஷித்துச் சொல்லும்படியான ஏற்றத்தை யுடையதாயிருக்கிறது.

௨௬௫. नारायणाय नमः. நாராயணாயநம:.

அகிலஹேயப் பிரத்தியநீகாநந்த ஜ்ஞானாநந்தைக ஸ்வரூபனாய் ஜ்ஞானஶக்த்யாதி கல்யாண குணகணவிபூஷிதனாய் விலக்ஷண விக்ரஹயுக்தனாய் லக்ஷ்மிபூமி நீளாநாயகனாய் நித்யமுக்தானுபாவ்யனாய் நிரதிஶயானந்தயுக்தனாய் அவாப்த ஸமஸ்தகாமனாய் உபய விபூதிநிர்வாஹகனாய் ஸர்வாதாரனாய் ஸர்வகாரணனாய் ஸர்வேஶ்வரனாய் ஸர்வரக்ஷகனாய் ஸர்வாந்தர்யாமியாய் ஸர்வவியாபகனாய் ஸர்வஶரீரகனாய் ஸர்வஶப்தவாச்யனாய் ஸர்வகர்மஸமாராத்யனாய் ஸர்வவித்யாவேத்யனாய் ஸர்வாஶ்ரயணீயனாய் ஸர்வபலப்பிரதனாய் முமுக்ஷோபாஸ்யனாய் மோக்ஷப்பிரதனாய் ஸர்வசேஷியாய் ஸர்வப்பிராபகனாய் ஸர்வப்பிராப்யனாய் ஸர்வஸ்மாத்பரனாய் ஸமாநாதிகரஹிதனாய் ஸர்வஸ்ஃலபனாய் இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௨௬௭. नराय नमः. நராயநம:.

நசியாமல் நித்தியமாயுள்ள சேதநம் அசேதநம் யாவற்றையுந் தனக்கு ஐசுவரியமாக உடையவனுக்கு நமஸ்காரம்.

௨௬௮. असंख्येयाय नमः. அஸங்க்யேயாயநம:.

அந்தச் சித்து அசித்துக்கள் எண்ணிறந்தவைகளாதலால் அளவற்ற ஐசுவரியத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

௨௬௯. अप्रमेयात्मने नमः அப்ரமேயாத்மநேநம:.

எண்ணுக்கு அளவுபடாததாயும் ஒவ்வொன்றினையே அறியக்கூடாததாயும் எல்லை இல்லாததாயும் இராநின்ற அந்தச் சித்து அசித்துக்களில் உள்ளும் புறம்பும் வியாபித்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௨௭௰. विशिष्टाय नमः. விசிஷ்டாயநம:.

சித்து அசித்து ஆகிய தன் ஐசுவரியங்களால் மாத்திரமே அன்றிச் சுபாவசித்தமான வைபத்தை உடையனுக்கு நமஸ்காரம்.

௨௫௧. ௨௫௨. 𑌶𑌿𑌷𑍍𑌟𑌕𑍃𑌚𑍍𑌛𑍁𑌚𑌯𑍇𑌨𑌮𑌃. சிஷ்டக்ருத்சுசயேநம:.

அந்தச் சித்து அசித்துக்கள் தன்னுடைய சம்பந்தத்தினாலே அதற்குத்தகுந்த மங்களங்களை உடையவைகளாகச் செய்கிறவனும் பரிசுத்தனுமானவனுக்கு நமஸ்காரம்.

௨௫௩. 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌰𑍍𑌥𑌾𑌯𑌨𑌮𑌃. ஸித்தார்த்தாயநம:.

சுபாவமாகவே தான்விரும்பிய வைகளையெல்லாம் அடைகிறவனுக்கு நமஸ்காரம்.

௨௫௪. 𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌾𑌯𑌨𑌮𑌃. ஸித்தசங்கல்பாயநம:.

சுதந்தரனாக இருக்கிறவனாதலால் தன்னிச்சையின்படிச்கு ஸமஸ்தத்தையும் சாதிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௨௫௫. 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌦𑌾𑌯𑌨𑌮𑌃. ஸித்திதாயநம:.

அணிமா மகிமாமுதலான அஷ்டசித்திகளை அபேட்சித்தவர்களுக்கு அவைகளைக்கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௨௫௬. 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌸𑌾𑌧𑌨𑌾𑌯𑌨𑌮𑌃. ஸித்திஸாதநாயநம:.

தன்னை ஆத்துமாக்கள் தியானஞ்செய்யும் பொழுது சுகமாக இருக்கிறதால் இதுவேபோதுமென்னும்படித் தியாநமுதலான வருத்தமற்ற உபாயங்களாலே அடையத்தக்கவனுக்கு நமஸ்காரம்.

௨௫௭. 𑌵𑍃𑌷𑌾𑌹𑌿𑌣𑍇𑌨𑌮𑌃. வ்ருஷாஹிணேநம:.

தன்சேவைகிடைத்த முதல்திநமானது ஸமஸ்த மங்களங்களுக்கும் விதைகளை நடப்பட்டதிநமானதால் புண்ணியரூபமான அந்தத் திநத்தை உடையவனுச்கு நமஸ்காரம்.

௨௫௮. 𑌵𑍃𑌷𑌭𑌾𑌯𑌨𑌮𑌃. வ்ருஷபாயநம:.

பிறவிகளாகிய அக்கினியினால் வெந்தவர்களாய் வருகிறவர்களுக்குத் தன்கருணையாகிய மழையினால் அந்தவெப்பத்தைப்போக்குகிறவனுக்கு நமஸ்காரம்.

௨௫௯. 𑌵𑌿𑌷𑍍𑌣𑌵𑍇𑌨𑌮𑌃. விஷ்ணவேநம:.

இந்தப் பிரகாரந் தன்கருணை மழையைப்பொழிந்துகொண்டு அவர்களைவிடாமல் அவர்களில் வியாபித்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௨௬௦. 𑌵𑍃𑌷𑌪𑌰𑍍𑌵𑌣𑍇𑌨𑌮𑌃. வ்ருஷபர்வணேநம:.

வருணாச்சிரமதருமங்களானவை தானிருக்கும் இடத்துக்கு ஏறிவருதற்கு ஏதுவானபடிகளாக உள்ளவனுக்கு நமஸ்காரம்.

உகூக. వృషోదరాయనమః. வ்ருஷோதராயநம ஃ.

தன்னை ஆராதநஞ் செய்யுமவர்கள் தங்கள் சக்தியாநுசாரஞ்சம ர்ப்பித்தவைகளால் நிறையத்தக்கதாயும் ஆபத்தை அடைந்தவர்களெ ல்லோருக்கும் புகலிடமாயும் இருப்பதால் தருமரூபமானவயிற்றை உடை யவனுக்கு நமஸ்காரம்.

உகூஉ. వర్ధనాయనమః. வர்த்தநாயநம ஃ.

தான் அவர்களை மாதாவைப்போல் தன் உதரத்தில் வைத்துக் கொண்டு விருத்திசெய்கிறவனுக்கு நமஸ்காரம்.

உகூங. వర్ధమానాయనమః. வர்த்தமாநாயநம ஃ.

தான் அவர்களைவிருத்திசெய்து தானும் சந்தோஷத்தினால் விருத் தி அடைகிறவனும் இத்தன்மைகளால் முடிவில்லாத சமூர்த்தியைஉடைய வனுமானவனுக்கு நமஸ்காரம்.

உகூச. వివిక్తాయనమః. விவிக்தாயநம ஃ.

இப்படிக்கு ஸர்வலோகத்திலும் சிரேஷ்டனாய்த் தனக்கேஅசா தாரணமான செயல்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

உகூரு. శ్రుతిసాగరాయనమః. ஶ்ருதிஸாகராயநம ஃ.

இப்படிப்பட்ட தன்குணங்களை ஆதரத்தோடு சொல்லுகிற வேத ங்களாகிற நதிப்பிரவாகங்கள் சேருமிடமான சாகரத்தைப்போ விருக்கிற வனுக்கு நமஸ்காரம்.

உகூகூ. సుభుజాయనమః. ஸுபுஜாயநம ஃ.

பிரபன்னர்களுடைய பாரங்களை வகிக்கப்பட்ட சோபநகரமான புஜங்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

உகூஎ. దుర్ధరాయనమః. துர்தராயநம ஃ.

இப்படிப்பட்ட தன்புஜபலத்தின் செயல்களைப் பிரளயகாலத்துச் சமுத்திரவேதத்தைச் சிறுபிள்ளையானவன் விளையாட்டாகச்செய்த மணற் கரையானது தடுக்கமாட்டாததுபோல் பிறரால்தடுக்கஅசக்கியமானவனுக் கு நமஸ்காரம்.

உகூஅ. వాగ్మినేనమః. வாக்மிநே நம ஃ.

பிரசஸ்தமானவாக்கை உடையவனுக்கு நமஸ்காரம்.

வேதசொரூபமாயும் ஜயசீலமாயும் மதுரமாயும் கம்பீரமாயும் பிரியமாயும் இதமாயுமிருப்பதாய்ப் பிரசஸ்தமான வாக்கை உடையவ னென்பது கருத்து.

உசுகூ. మహేంద్రాయనమః. மஹேந்த்ராயநம:.

இந்தப்பிரகாரம் இவனுடைய ஐசுவரியம் எங்கும் வியாபித்து இருப்பதால் மகத்தான ஐசுவரியத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

உஎ0. వసుధాయనమః. வஸுதாயநம:.

அவமதிக்கப்படாத பரமஐசுவரியத்தையும் மகத்துவத்தையும் உடையவனானதால் தநத்தை ஆசைப்படுகிறவர்களான அற்பஜநங்களுக்குத் தநத்தைக்கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

உஎக. వసవేనమః வஸவேநம:.

ஸர்வம் வாஸுதேவம்என்கிற பிரகாரத்தினாலே சிரேஷ்டனான தானே தநமாக இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

உஎஉ. నైకరూపాయనమః. நைகரூபாயநம:.

மேற்சொல்லியபடிக்குத் தன்மகிமைகளுக்குத்தகுந்தஉசிதமான விசுவரூபத்தை உடையவனும் அவரவர்களுடைய யோக்கியதைக்குத் தக்கதான ரூபங்களைஉடையவனுமானவனுக்கு நமஸ்காரம்.

உஎங. బృహద్రూపాయనమః. ப்ருஹத்ரூபாயநம:.

அந்தந்தரூபங்களில் ஒவ்வொன்றும் திக்குகளிலும் நீரிலும் ஆகாசத்திலும் வியாபித்து இருக்கையால் பெரிதானரூபத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

உஎச. శిపివిష్టాయనమః. ஸிபிவிஷ்டாயநம:.

அந்தரூபங்களாலே யாவற்றிலும் பிரவேசித்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

உஎரு. ప్రకాశనాయనమః. ப்ரகாசநாயநம:.

திவ்வியமான இந்தரூபத்தைத்தரிசிக்க அபேக்ஷிக்கிறவர்களுக்குப் பிரகாசஞ்செய்கிறவனுக்கு நமஸ்காரம்,

திவ்வியநேத்திரத்தை உனக்குக்கொடுத்தேன். என்னுடைய விசுவரூபத்தைப்பாரென்று காண்பித்துப் பார்க்கக்கூடாத என் ரூபத்தை இப்போது நீபார்த்தனை யென்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அர்ச்சுனனுடன் சொல்லி இருக்கிறார்.

உஎசு. ఓజస్తేజోద్యుతిధరాయనమః. ஓஜஸ்தேஜோத்யுதிதராயநம:.

பலம்-பகைவரை யவமானஞ்செய்து வெற்றிகொள்ளுதல்-காந்தி இவைகளை உடையவனுக்கு நமஸ்காரம்.

உஎஎ. ప్రకాశాత్మనేనమః. ப்ரகாசாத்மநேநம:.

மூர்க்கர்களும் ஒப்புக்கொள்ளும்படிக்கு எங்கும் பிரகாசமான பிரபாவத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

யாதவசிரேஷ்டனான ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியே நீர் புண்டரீகாக்ஷனும் ஸமஸ்தபிரபஞ்சத்துக்கும் பிரபுவாயுமிருப்பதால் என்னிடத்தில் அருள்செய்யுமென்று திருதராஷ்டன் பிரார்த்தித்தான்.

உஎஅ. ప్రతాపనాయనమః. ப்ரதாபநாயநம:.

மிகவும் உக்கிரமான காந்தியை உடையவனுக்கு நமஸ்காரம்.

உஎகூ. ఋద్ధాయనమః. ருத்தாயநம:.

இந்தப்பிரகாரம்கரையை அதிக்கிரமித்த பௌர்ணமிசமுத்திரத்தைப்போல விருத்தி அடைகிறவனுக்கு நமஸ்காரம்.

உஅ0. స్పష్టాక్షరాయనమః. ஸ்பஷ்டாக்ஷராயநம:.

வேதங்களை எல்லோரும் அறியும்படி வெளிப்படுத்தினவனுக்கு நமஸ்காரம்.

உஅக. మంత్రాయనమః. மந்த்ராயநம:.

தன்னை மனனஞ்செய்கிறவர்களைச் சம்ரட்சிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

பிராண அந்தியகாலத்தில் உம்மைச்சேர எவன்சக்தி உள்ளவனுவானென்று ஸ்ரீ நாரதர்கேட்டபோது எவன் என்னை நினைக்கிறனோ அவன் ஆசையாகிற ஜலத்தினலே பூரணமாயிருக்கின்ற கோரமான ஸமுஸாரசமுத்திரத்தின் கரையைக்கடந்து என்னைச்சேருவானென்று ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியும், பூபிராட்டியார் கேட்டபோது மனது சொஸ்தமாயும் சரீரம் திடமாயும் தாதுக்கள் ஸமமாயும் இருக்கும்பொழுதே விசுவரூபனை என்னை நினைத்தால் காஷ்டபாஷாணத்தைப்போல அறிவற்றுக்கிடக்கும் அவர்களுடைய மரணதசையில் அவர்களை நான் நினைத்து என்னைச்சேரும்படி செய்வேனென்று ஸ்ரீ வராஹமூர்த்தியும் திருவாய்மலர்ந்தருளி இருக்கிறார்கள்.

உஅஉ. చంద్రాంశవేనమః. சந்த்ராம்ஸவேநம:.

தன்னை ஸ்மரிப்பவர்களுக்குச் சிரமபரிகாரம் செய்கிறதும் சந்தோஷகரமாயிருக்கிறதுமான காந்தியை உடையவனுக்கு நமஸ்காரம்.

உஅ௩. భాస్కరద్యుతయేనమః. பாஸ்கரத்யுதயேநம:.

சத்துருக்களுக்கு அவமானகரமான பிரபாவத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

௨௮௪. అమృతాంశూద్భవాయనమః. அமிருதாம்சூத்பவாயநம:.

ஸர்வதாபங்களையும் பரிகரிப்பதும் திருப்திகரமானதும் சஞ்சீவியுமான அமிர்தமயகிரணங்களை உடைய சந்திரனைத் தன்மனதிலுள்ள சைத்தியகுணங்களை உடையவனாகத் தன்மனதில் உத்பவிக்கச்செய்தவனுக்கு நமஸ்காரம்.

௨௮௫. భానవేనమః பாநவேநம:.

அதிககாந்தி உள்ள ஆயிரங்கிரணங்களை உடைய சூரியனையும் தன்காந்தியினாலே பிரகாசிக்கச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௨௮௬. శశబిందవేనమః. ஸஸிபிந்தவேநம:.

குடிலமானநடத்தையை உடையவர்களுக்கு வஞ்சனைசெய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௨௮௭. సురేశ్వరాయనమః. ஸுரேஸ்வராயநம:.

இந்தப்பிரகாரம் ஜகத்துகளுக்குப் பிரபுக்களான தேவர்களுக்கும் பிரபுவானவனுக்கு நமஸ்காரம்.

௨௮௮. ఔషధాయనమః. ஔஷதாயநம:.

பிறவி ஆகிற விஷத்தைப் பரிகரிக்கப்பட்ட பிரபாவத்தை உடைய ஔஷதமானவனுக்கு நமஸ்காரம்.

துக்கத்தைப்போக்கத்தக்கதாயும் ஏகாக்கிரசித்தத்தோடுசிந்திக்கையாகிற கிரயத்தினாலே கிடைக்கத்தக்கதாயும் பிறவிநோயைத் தீர்க்கத்தக்கதாயுமிருக்கிறமருந்தாக எவனைத் தேவர்கள் ரிஷிகள் முதலான பெரியோர்கள் அறிகிறார்களோ அப்படிப்பட்ட பகவானன்றோ நீயென்று புராணங்களில் சொல்லியிருக்கின்றது.

௨௮௯. జగతస్సేతవేనమః. ஜகதஸ்ஸேதவேநம:.

இந்தப்பிரகாரம் ஸத்து அஸத்து வருக்கங்கள் சங்கரமாகி வரம்புகெடாமல் கரைபோன்று இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

அவரவர்களுடை கர்மங்களில் செய்யாததற்குப் பலன்வருகிறதும் செய்ததற்குப்பலன் வாராமற்போகிறதும் இல்லையானதால் ஸத்து அஸத்து ஜனங்களுக்குள் பேதம் நன்றாகத்தெரிகின்றது. எப்படிக்கென்னில் ஆயிரம்பசுக்களில் ஒரு கன்று தன்தாயை அறிவதுபோல முன்செய்த கர்மங்கள் தன்கர்த்தாவை அடைகின்றன. சுபத்தைச்செய்தவன் சுகத்தை அடைவானென்றும் அசுபத்தைச்செய்தவன் துக்கத்தை அனுபவிப்பானென்றும் சாஸ்திரங்களில் சொல்லி இருக்கிறது.

உகூ0. సత్యధర్మపరాక్రమాయనమః. ஸத்யதர்ம்பராக்ரமாயநம ஃ.

இந்தப்பிரகாரம் தருமங்களும் கலியாணகுணங்களும் பராக்கிரமச்செயல்களு மெய்யாக உள்ளவனுக்கு நமஸ்காரம்.

உபநிஷத்துமுதலானவைகளில் அவனைச் சத்தியசொரூபனென்றும் சத்தியவாக்கிய முடையவனென்றும் கூறியிருக்கின்றது.

உகூக. భూతభవ్యభవన్నాథాయనమః. பூதபவ்யபவந்நாதாயநம ஃ.

இவ்விதமாய்ச் சுவாமித்வமும் ஐசுவரியமும் இப்போதுமாத்திரமேயல்லாமல் முக்காலங்களிலுமுள்ளவனுக்கு நமஸ்காரம்.

உகூஉ. పవనాయనమః. பவநாயநம ஃ.

இந்தப்பிரகாரம் எப்போதும் எல்லாவிடங்களிலும் சுபாவமாகச் சஞ்சரிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

இவனுடைய சஞ்சாரசக்தி லேசத்தினலே வாயு எப்போதும் சஞ்சரிக்கிறது.

உகூங. పావనాయనమః. பாவநாயநம ஃ.

அப்படியே ஒருசாலத்தில் தன்சம்பந்தம்பெற்ற கங்கைமுதலானவைகள் ஜகத்தைப் பரிசுத்தம்பண்ணும்படிக்குத் தான் அதிபரிசுத்தனுய் இருக்கிறவனுச்கு நமஸ்காரம்.

உகூச. అనలాయనమః. அநலாயநம ஃ.

இந்தப்பிரகாம் பலவழியாகத் தான் உபகாரங்களைச் செய்தும் போதுமென்கிற மனதில்லாமல் அநுக்கிரகிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

உகூரு. కామఘ్నేనమః. காமக்நேநம ஃ.

தன்னுடையகுணங்களை அறிந்தவர்களுக்கு வேறுவிஷயத்தில் ஆசையை நிவர்த்திக்கிறவனுக்கு நகஸ்காரம்.

உகூசா. కామకృతేనమః காமக்ருதேநம ஃ.

போகமோட்ச முதலானவைகளை விரும்பினவர்களுக்கு அவைகளைத்தானுகவே செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

உகூஎ. కాంతాయనమః. காந்தாயநம ஃ.

ஸௌந்தரியம் ஸௌகுமாரமுதலான குணங்களோடு கூடியிருப்பதினல் மனோகரமானவனுக்கு நமஸ்காரம்.

உகூஅ. కామాయనమః. காமாயநம ஃ.

சீலம் உதாரம் தயை இவைமுதலானவைகளால் மிகவும் ஆசைப்படத்தக்கவனுக்கு நமஸ்காரம்,

இவனுடைய குணலேசத்திஞலே மன்மதன் ஜகத்தை மயக்குகிருனென்று கூறியிருக்கிறது.

உ௯௯. కామప్రదాయనమః. காமப்ரதாயநம ஃ.

தன்னை ஆசைப்பட்டவர்களுக்கும் அற்பபலன்களை ஆசைப்பட்டவர்களுக்கும் அவரவர்களுக்குத் தகுதியான அபீஷ்டத்தைக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௦௦. ప్రభవేనమః. ப்ரபவேநம ஃ.

இவ்விதமாக மிகவு மனோஹரனுயிருப்பதிஞலே ஸகலருடைய இருதயத்தையும் அபகரிக்கிறதில் சாமர்த்தியமுள்ளவனுச்கு நமஸ்காரம்.

எல்லை அற்ற இவனுடைய ஆச்சரியசக்தியையும் ஆலிலையில் சயனஞ்செய்த அவதாரத்தையும் சொல்லுகின்றது.

௩௦௧. యుగాదికృతేనమః. யுகாதிக்ருதேநம ஃ.

யுகத்தின் அந்தத்தில் மறுபடியும் யுகத்தின் ஆதியைச்செய்பவனுக்கு நமஸ்காரம்.

பிரளயத்தில் முழுகி இருந்தஜகத்தை மறுபடியும் யுகத்தின் ஆதிகாலத்தில் இவனே உண்டாக்கினுனென்பது கருத்து.

௩௦௨. యుగావర్తాయనమః. யுகாவர்த்தாயநம ஃ.

தானதர்ம வியவஸ்தையாலே கிருதயுகமுதலான யுகங்களை மேலுமேலும் சுழன்றுவரும்படி செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௦௩. నైకమాయాయనమః. நைகமாயாயநம ஃ.

மிகவும் இளமையான சிசுரூபத்திஞலே அபரிமிதமான ஜகத்துக்களை விழுங்கி ஆதாரமில்லாத ஏகோதகத்தில் ஆலிலையில் சயனமுதலான ஊகிக்கக்கூடாத அனேக ஆச்சரியங்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩௦௪. మహాశనాయనమః. மஹாஶநாயநம ஃ.

ஸமஸ்த உலகங்களையும் விழுங்கினவனுக்கு நமஸ்காரம்.

உலகத்தில்கண்ட சராசரங்களையெல்லாம் இவன்வயிற்றில் பார்த்தேனென்று மார்க்கண்டேயர் சொல்லி இருக்கிருர்.

௩௦௫. అదృశ్యాయనమః. அத்ருஸ்யாயநம ஃ.

அறியக்கூடாத தன்மையுள்ள செயல்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

உலகங்களெல்லாம் நாசம் அடைந்திருக்க இந்தச்சிசுவானது எப்படி படுத்துக்கொண்டு இருக்கிறதென்று என்தபசுக்களாலே நான் யோசித்துப்பார்த்தாலும் இந்தச்சிசுவை அறியக்கூட இல்லை என்று மார்க்கண்டேயர் சொல்லி இருக்கிருர்.

௩0௬. వ్యక్తరూపాయనమః. வ்யக்தரூபாயநம:.

மார்க்கண்டேயாதிகளுக்கு சுசமாககாணும்படியான திவ்யவிக்கிரஹத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௩0௭. సహస్రజితేనమః. ஸஹஸ்ரஜிதேநம:.

ஆயிரம்யுகங்கள்கொண்ட கற்பமுடிவுபரியந்தம் சயனித்துக் கொண்டிருந்து அச்செயலால் யாவரையும் ஜயிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஆயிரயுகங்கள் எதுவரைக்கும் சுழலுமோ அதுவரையில் நான்படுத்துக்கொண்டிருப்பேனென்று பகவான்சொல்லியிருக்கிறார்.

௩0௮. అనంతజితేనమః. அநந்தஜிதேநம:.

அளவுபட்டசிசுவாக இருந்தும் எக்காலத்திலும் எவ்விதத்திலும் அளவுகாணமுடியாத மகிமையை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩0௯. అవిశిష్టాయనమః. அவிசிஷ்டாயநம:.

வயிற்றில்வைத்து தரிக்கப்பட்ட மூர்க்கராலும்கூட எவ்விசேஷமுமின்றிக்கே பெற்றதாயைப்போல் விரும்பப்பட்டவனுக்கு நமஸ்காரம்.

௩௧0. శిష్టేష్టాయనమః. சிஷ்டேஷ்டாயநம:.

பண்டிதசிரோஷ்டர்களான மார்க்கண்டேயர் முதலானவர்களுக்குப் பரமபுருஷார்த்தமாக இஷ்டனானவனுக்கு நமஸ்காரம்.

ஸத்வகுணஸ்தராயும் நிரஹங்காரிகளாயும்வேதாந்தசாஸ்திரங்களை நன்றாய் அறிந்தவர்களாயும் தன்னை எப்பொழுதும் தியானம்செய்கிறவர்களாயும் இருக்கிறவர்கள் சிஷ்டரென்று சொல்லப்படுவார்கள் இப்படிப்பட்ட சிஷ்டர்களுக்கு இஷ்டனாகுமவனென்பது கருத்து.

௩௧௧. శిఖండినేనమః. சிகண்டிநேநம:.

அபரிமிதமானதும் ஜயிக்கப்படாததும் ஐசுவரியத்தைக்காண்பிக்கத்தக்கதுமான ஒளியை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩௧௨. నహుషాయనమః. நஹுஷாயநம:.

தன்மாயையினாலேஜீவகோடிகளைப் பந்திக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௧௩. వృషాయనమః. வ்ருஷாயநம:.

அப்படி சிசுவாயிருக்கும்போதும் தன்னால்காண்பிக்கப்பட்ட பிரளயசமுத்திரத்தில் அலைந்து சிரமம் அடைந்த மார்க்கண்டேயருக்குந் தன் காந்தியும் வசனமுமாகிற அமிர்தத்தைப்பொழிந்து அந்தச்சிரமத்தைப்போக்கினவனுக்கு நமஸ்காரம்.

இந்தத்திருநாமம் பரசுராமாவதாரத்தைச் சொல்லுகின்றது.

௩கச. క్రోధఘ్నేనమః. க்ரோதக்நேநம꞉.

இருபத்தொருதரம் அரசர்களை அழித்த குரோதத்தைக் காசிபர் பிரார்த்தித்தமாத்திரத்தில் விட்டுவிட்டவனுக்கு நமஸ்காரம்.

௩கரு. క్రోధకృతేనమః. க்ரோதக்ருதேநம꞉.

இதற்குமுன்புள்ளவர்களிடத்தில் குரோதத்தைச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

௩கசு. కర్త్రేనమః. கர்த்ரேநம꞉.

குரோதத்துக்கு ஹேதுவான கார்த்தியவீரனைச் சங்கரித்தவனுக்கு நமஸ்காரம்.

௩கஎ. విశ్వబాహవేనమః. விஸ்வபாஹவேநம꞉.

இந்தப்பிரகாரம் துஷ்டர்களைச் சங்கரிக்கிறதினாலே எல்லா உலகங்களுக்கும் உபகாரமான புஜங்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩கஅ. మహీధరాయనమః. மஹீதராயநம꞉.

துஷ்டர்களாகிய பாரத்தை இறக்கிப் பூமியைத்தாங்குகிறவனுக்கு நமஸ்காரம்.

௩கக. అచ్యుతాయనమః. அச்சுதாயநம꞉.

பிரமாதிகளோடு தானும் ஒருவனாக அவதாரம்செய்தகாலத்திலும் தன்னுடைய ஐசுவரியத்தை விடாதிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩உ0. ప్రథితాయనమః. ப்ரதிதாயநம꞉.

இப்படிப்பட்டவன் என்கின்ற புகழை அடைந்தவனுக்கு நமஸ்காரம்.

௩உக. ప్రాణాయనమః. ப்ராணாயநம꞉.

தன்னை அடைந்தவர்களுக்குப் பிராணனைப்போன்று இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

திருப்பாற்கடலைக்கடைந்த சக்தியைச் சொல்லுகின்றது.

௩உஉ. ప్రాణదాయనమః. ப்ராணதாயநம꞉.

தேவர்களுக்குக் கடைகிறதற்கு வேண்டியபலனைக் கொடுத்தவனுக்கு நமஸ்காரம்.

௩௨௩. 𑌵𑌾𑌸𑌵𑌾𑌨𑍁𑌜𑌾𑌯𑌨𑌮𑌃. வாஸவானுஜாயநம:.

அமிர்தத்தைக் கடைந்தவர்களுக்குள் இந்திரனை அனுசரித்து அந்த அமிர்தத்தைப் பங்கிடுகிறதற்காக அவதாரம்செய்தவனுக்கு நமஸ்காரம்.

௩௨௪. 𑌅𑌪𑌾𑌂𑌨𑌿𑌧𑌯𑍇𑌨𑌮𑌃. அபாம்நிதயேநம:.

கடையும்போது பொங்கினசமுத்திரத்தைக் கரைபுரளாமல் தாங்கினவனுக்கு நமஸ்காரம்.

௩௨௫. 𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌯𑌨𑌮𑌃. அதிஷ்டானாயநம:.

மந்தரபருவதத்துக்கு ஆதாரமானவனுக்கு நமஸ்காரம்.

௩௨௬. 𑌅𑌪𑍍𑌰𑌮𑌤𑍍𑌤𑌾𑌯𑌨𑌮𑌃. அப்ரமத்தாயநம:.

இப்படிக்குத் துயர் அடைந்தவர்களைச் சம்ரட்சணை செய்வதில் தீவரமான அவதானத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩௨௭. 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌯𑌨𑌮𑌃. ப்ரதிஷ்டிதாயநம:.

தான் அந்நியாபேட்சை இல்லாமல் தன்னுடைய மகிமையில் ஸ்திரமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௨௮. 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌾𑌯𑌨𑌮𑌃. ஸ்கந்தாயநம:.

அசுரர்முதலானவர்களை வற்றச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௨௯. 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌧𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. ஸ்கந்ததராயநம:.

சேனுபதியாகிய சுப்பிரமணியனைக்கொண்டு தேவசைன்னியத்தைத் தாங்கிக்கொண்டிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௩௦. 𑌧𑍁𑌰𑍍𑌯𑌾𑌯𑌨𑌮𑌃. துர்யாயநம:.

உலககாரியங்களின் பாரத்தை வகிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௩௧. 𑌵𑌰𑌦𑌾𑌯𑌨𑌮𑌃. வரதாயநம:.

அந்நியர்களாய் உலககாரியங்களின் பாரத்தை வகித்துக்கொண்டிருக்கிற தேவர்களுக்கு வரங்களைக்கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௩௨. 𑌵𑌾𑌯𑍁𑌵𑌾𑌹𑌨𑌾𑌯𑌨𑌮𑌃. வாயுவாஹநாயநம:.

ஜகத்துக்குப் பிராணமாயிருக்கிற வாயுவை வீசச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௩௩. 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌯𑌨𑌮𑌃. வாஸுதேவாயநம:.

ஸமஸ்தமும் தன்னிடத்தில் வசிக்கத்தக்கவனும் தானும் எங்கும் வசிப்பவனுமாய் இந்தப்பிரகாரம் கிரீடித்துக்கொண்டும் வெற்றிகொண்டும் பிரகாசித்துக்கொண்டும் ஸஞ்சரித்துக்கொண்டும் இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

இவனுடைய போகவிபூதியான பரமபதத்தில் விளங்குந் தன்மையைச் சொல்லுகின்றது.

௩௩௪. ബൃഹദ്ഭാനവേനമഃ. ப்ருஹத்பாநவேநம꞉.

பெரிதாகவும் அணையாததீபமாகவும் இருக்கின்ற கிரணங்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩௩௫. ആദിദേവായനമഃ. ஆதிதேவாயநம꞉.

லீலாவிபூதியினாலே கிரீடித்துக்கொண்டிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

அளவிடப்படாதவனும் நியமிக்கப்படாதவனும் தன் இச்சையின்படி சஞ்சரிக்கிறவனும் சுதந்திரம் உள்ளவனும் இருக்கிற பகவான் குழந்தைகள் பந்தாடுமாப்போல் உயிர்களைக்கொண்டு லீலைசெய்கிறானென்று சொல்லி இருக்கிறது.

௩௩௬. പുരന്ദരായനമഃ. புரந்தராயநம꞉.

அசுரர்களுடைய பட்டணங்களைநாசஞ்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

அசுரர்களாகிற பிசாசுகளை நிக்கிரகித்து ஆதிதெய்விகமான பயங்களை நிவாரணம்செய்கிறவனென்று சொல்லி இருக்கிறது.

௩௩௭. അശോകായനമഃ. அசோகாயநம꞉.

ஆத்யாத்மிகங்களான சோகம் மோகம் பசி வியாதி முதலானவைகளைப் போக்குகிறவனுக்கு நமஸ்காரம்.

௩௩௮. താരണായനമഃ. தாரணாயநம꞉.

ஆதிபௌதிகங்களான வைரிகள் சோரர்கள் முதலானவைகளால் உண்டாகும்பயத்தைத்தாண்டுவிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௩௯. താരായനമഃ. தாராயநம꞉.

சமுசாரபயத்தைக் கிழங்கோடே போக்குகிறவனுக்கு நமஸ்காரம்.

கர்ப்பம் ஜனனம் ஜரை மரணம் ஆகிய சமுசாரமகாபயத்தைத் தாண்டுவிக்கிறவன் என்று அதர்வசிரசில் சொல்லியிருக்கிறது.

வெற்றி அடையுந்தன்மையைச் சொல்லுகின்றது.

௩௪0. ശൂരായനമഃ. சூராயநம꞉.

வெற்றி அடைய அபேக்ஷையுள்ளவனுக்கு நமஸ்காரம்.

௩௪௧. ശൗരയേനമഃ. சௌரயேநம꞉.

விசேஷமாகப் பக்தர்களை ஸுகிப்பிக்குமவனும் வஸுதேவருடைய பிள்ளையுமாயுள்ளவனுமானவனுக்கு நமஸ்காரம்.

௯௪௨. జనేశ్వరాయనమః. ஜநேஸ்வராயநம:,

எல்லாரையும் முழுகடித்துக்கொண்டு ப்ரகாசிக்கும் ஐசுவரிய ப்ரவாஹமுடையவனுக்கு நமஸ்காரம்.

௯௪௩, అనుకూలాయనమః. அநுகூலாயநம:.

சுபாவமாயிருக்கிற மகத்துவத்தினாலே கர்வம் மதம் மானம் இவைகளின்றி இருக்கிறபடியால் எல்லையை அதிக்கிரமிக்காதவனுக்கு நமஸ்காரம்.

௯௪௪. శతావర్తాయనమః. ஸதாவர்த்தாயநம:.

கணக்கில்லாத ஐசுவர்ய பூர்த்தியையுடையவனுக்கு நமஸ்காரம்.

இதுவரையிலும் வாசுதேவனைக் குணத்தால் விவரித்து
இனி ரூபத்தால் விவரிக்கின்றது.

௯௪௫. పద్మినేనమః. பத்மிநேநம:.

தனக்குலீலையாகப் பதுமத்தைக் கையில் பிடித்துக்கொண்டு இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௪௬. పద్మనిభేక్షణాయనమః. பத்மநிபேக்ஷணாயநம:.

பரிசுத்தமான தாமரைமாலையினுடைய சலனத்துக்குச் சமானமான (பக்தர்களுடைய சிரமத்தைப் பரிகரிக்கத்தக்க) பார்வையை உடையவனுக்கு நமஸ்காரம்.

௯௪௭. పద్మనాభాయనమః. பத்மநாபாயநம:.

பதுமத்தைப்போன்ற நாபியை உடையவனுக்கு நமஸ்காரம்.

௯௪௮. అరవిన్దాక్షాయనమః. அரவிந்தாக்ஷாயநம:.

சூட்சுமமாயும் பரிசுத்தமாயுமிராநின்ற இருதயகமலங்களைத் தனக்குச் சரீரமாக உடையவனுக்கு நமஸ்காரம்.

௯௪௯. పద్మగర్భాయనమః. பத்மகர்பாயநம:.

ஹ்ருதய கமலத்தினுடைய மத்தியிலிருக்கின்றவனுக்கு நமஸ்காரம்.

௯௫௦. శరీరభృతేనమః. ஸரீரப்ருதேநம:.

இப்படிப்பட்ட சுபாசிரயமானதினாலே தன்சரீரம்போன்றிருக்கின்ற உபாசகர்களைப் போஷணம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௫௧. మహర్ధయేనమః. மஹர்த்தயேநம:.

அவர்களுடைய யோகக்ஷேமத்தை நடத்தச் சாமர்த்தியமுள்ள எல்லை அற்றவிபூதியை உடையவனுக்கு நமஸ்காரம்.

ஙருஉ. 𑌋𑌦𑍍𑌧𑌾𑌯𑌨𑌮𑌃. ருத்தாயநம:.

அவர்களை ரக்ஷித்து அதனால்தானும் சந்தோஷத்தை அடைகிறவனுக்கு நமஸ்காரம்.

ஙருங. 𑌵𑍃𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌨𑍇𑌨𑌮𑌃. வ்ருத்தாத்மநேநம:.

அவ்வாறு அபிவிர்த்தி அடைந்தசொரூபத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

ஙருச. 𑌮𑌹𑌾𑌕𑍍𑌷𑌾𑌯𑌨𑌮𑌃. மஹாக்ஷாயநம:.

சுமப்பதில் ரதத்தின் அச்சைப்போன்று சிரேஷ்டனாக இருப்பதால் அக்ஷமென்று சொல்லப்படும் வேதமயனான கருடனை வாகனமாக உடையவனுக்கு நமஸ்காரம்.

ஙருரு. 𑌗𑌰𑍁𑌡𑌧𑍍𑌵𑌜𑌾𑌯𑌨𑌮𑌃. கருடத்வஜாயநம:.

தனக்கே அசாதாரணசின்னமாக இருக்கிற அந்தக்கருடனைக் கொடியிலே உடையவனுக்கு நமஸ்காரம்.

ஙருசா. 𑌅𑌤𑍁𑌲𑌾𑌯𑌨𑌮𑌃. அதுலாயநம:.

தனக்குச் சமானமானவன் ஒருவனும் இல்லாமையால் உபமானரகிதனாக இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஙருஎ. 𑌶𑌰𑌭𑌾𑌯𑌨𑌮𑌃. ஸரபாயநம:.

தங்கள் மரியாதைகளைத் தப்பினவர்களை இமிசிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஙருஅ. 𑌭𑍀𑌮𑌾𑌯𑌨𑌮𑌃. பீமாயநம:.

ஆகையால் அவர்கள் தனக்குப் பயப்படும்படி செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

அவனுக்குப் பயப்பட்டவர்களாய் வாயுமுதலான தேவர்கள் எல்லோரும் அவனுடைய ஆக்கினையை அதிக்கிரமிக்காமலிருக்கிறார்களென்று சுருதியில் சொல்லி இருக்கிறது.

ஙருகூ. 𑌸𑌮𑌯𑌜𑍍𑌞𑌾𑌯𑌨𑌮𑌃. ஸமயஜ்ஞாயநம:.

ஆகையால் அக்கினிமுதலானவர்கள் மேல்நோக்கிப் பிரகாசிப்பது முதலான சுபாவ நியமனத்தையும் பக்தர்களுக்குத் தன்னைக்கொடுக்கும் சமயத்தையும் அபயதான விரதத்தையும் அறிந்தவனுக்கு நமஸ்காரம்.

ஙசா0. 𑌹𑌵𑌿𑌷𑍇𑌨𑌮𑌃. ஹவிஷேநம:.

பக்தாளாலே க்ரஹிக்கப்படுமவனுக்கும் பக்தாள்பொருட்டுக் கொடுக்கப்படுமவனுக்கும் நமஸ்காரம்.

௩௯௧. హరయేనమః. ஹரயேநம:.

அவர்கள் செய்தபாவத்தைப் போக்குகிறவனுக்கு நமஸ்காரம்.

தெரியாமல் அக்கினியைத்தொட்டாலும் சுடுமாப்போல துஷ்ட சித்தமுடையவர்களாலும் நினைக்கப்பட்டால் அவர்கள்பாவத்தைப் பரிகரிக்கிறவனென்று சொல்லி இருக்கிறது.

హవిర్హరయేనమః. ஹவிர்ஹரயேநம:.

என்றும் பாடமுண்டு. அப்போது அவர்கள்செய்யும்யாகத்தில் ஹவிசைக்கொள்ளுமவனுக்கு நமஸ்காரம்.

லட்சுமீபதி என்கிறதைச் சொல்லுகின்றது.

௩௯௨. సర్వలక్షణలక్షణ్యాయనమః. ஸர்வலக்ஷணலக்ஷண்யாயநம:.

சாட்சாத் லட்சுமியின் ஆலிங்கன சௌபாக்கியத்தைக் காட்டத் தக்க லட்சணங்களாலே அறியப்படுகிறவனுக்கு நமஸ்காரம்.

௩௯௩. లక్ష్మీవతేనమః. லக்ஷ்மீவதேநம:.

லட்சுமியோடு நித்தியசம்பந்தத்தைஉடையவனுக்கு நமஸ்காரம்.

௩௯௪. సమితింజయాయనమః. ஸமிதிஞ்ஜயாயநம:.

நித்தியம் பிரீதிகரனாயிருப்பதால் தனக்குத் தொண்டராகாமல் தன்னோடு விவாதப்பட்ட பிராணிகள்படும் கிலேசத்தைப் போக்குகிறவனுக்கு நமஸ்காரம்.

௩௯௫. విక్షరాయనమః. விக்ஷராயநம:.

மேற்சொல்லிய சுபாவத்தில் (அபிவிருத்தி உடையவனாய்) க்ஷீணம் இல்லாதவனுக்கு நமஸ்காரம்.

௩௯௬. లోహితాయనమః. லோஹிதாயநம:.

கமலத்திலிருக்கிறவனானதால் சிவந்த வர்ணத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩௯௭. మార్గాయనమః மார்காயநம:.

உபாசகர்களாலே தேடப்பட்டவனுக்கு நமஸ்காரம்.

௩௯௮. హేతవేనమః. ஹேதவேநம:.

அவர்கள் ஆசைப்பட்டதைக் கொடுக்க ஏதுவா யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௯௯. దామోదరాయనమః. தாமோதராயநம:.

மாலைபோன்று ஒன்றின்மேலொன்றாக தொடுக்கப்பட்டிருக்கும் உலகங்களைத் தன்வயிற்றிலுடையவனும் தேவர்முதலான ஆசிரிதர்களை

ரக்ஷிப்பதைக்காட்டும் வைஜயந்திமாலையைப்பூண்டவனும் லட்சுமியுங்கூட மோகிக்கும் சாதுரியமுடையவனுமாயிருந்தும் அசோதை தன்வயிற்றில் கயிற்றினுல் கட்ட அவளிடத்தில் வாச்சலியத்தால் அக்கட்டை அவிழ்த்துக்கொள்ளமாட்டாமல் அதுவேதனக்குத் திருநாமமாகும்படிக்கும் ஆனவனுக்கு நமஸ்காரம்.

௩௭0. ஸஹாயநம꞉. ஸஹாயநம꞉.

இவ்வாறு கட்டுண்டல் அதட்டப்படுதல் நிந்தைவார்த்தைகளைச்சகித்தல் முதலிய பூஷணங்களை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩௭௧. மஹீதராயநம꞉. மஹீதராயநம꞉.

பூபாரத்தைச் சுமந்துகொண்டிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௭௨. மஹாபாகாயநம꞉. மஹாபாகாயநம꞉.

கோபிகாஸ்திரீகள் நீளாதேவி பதினுறுயிரம் திவ்வியகன்னிகைகள் ருக்குமணி சத்யபாமை ஜாம்பவதிமுதலான தேவிமார்களுடைய சுயம்வரசௌபாக்கியத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩௭௩. வேகவதேநம꞉. வேகவதேநம꞉.

மனிதப்பிறவியிற்றேன்றி விளையாட்டுப்பருவமாகிய பாலியத்திலேயும் தடை அற்ற பரம ஐசுவரியத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩௭௪. அமிதாசநாயநம꞉. அமிதாசநாயநம꞉.

அபரிமிதமாக கோபாலர்களாலே யக்கியநிமித்தமாய்ச் செய்திருந்ததைச் சாப்பிட்டு இவன் தேவனே தானவனே என்கிறதாக அவர்களாலே சந்தேகிக்கச் செய்துகொண்டவனுக்கு நமஸ்காரம்.

௩௭௫. உத்பவாயநம꞉. உத்பவாயநம꞉.

தாமோதரன் பிறவிப்பந்தத்தைப் பரிகரிக்கிறவன் என்று எண்ணுகிறவர்களுக்கு அப்பிறவிப்பந்தத்தை நாசம்செய்து ஜனனம் அற்றவர்களாகச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௭௬. க்ஷோபணாயநம꞉. க்ஷோபணாயநம꞉.

பந்தனைக்கு உரிய ஆத்மாக்களையும் பந்திக்கிற பிரகிருதியையும் ஒன்றேடொன்று சேரும்படி விகரிக்கப்பண்ணுகிறவனுக்கு நமஸ்காரம்.

௩௭௭. தேவாயநம꞉. தேவாயநம꞉.

கரடி, குரங்கு, புலி, பன்றி முதலானவைகளை மனிதர் ஆட்டிவிளையாடுவதுபோல் மாயாபாசத்தினுலே ஜீவர்களை ஆட்டிக் கிரீடிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௭௮. శ్రీగర్భాయనమః. ஸ்ரீகர்பாயநம:.

இவ்விதமாகப் பிரியமான போககிரீடைகளால் சந்தோஷிக்கும் லட்சுமியை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩௭௯. పరమేశ్వరాయనమః. பரமேஸ்வராயநம:.

லட்சுமி தானும் ஆலிங்கனம் செய்கிறதினாலே ஸபலமான ஐசுவரியத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩௮௦. కరణాయనమః. கரணாயநம:.

தன்னை அடைகிறதற்குத்தானே சாதனமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஞானகரணங்களாக இருக்கிற செவி கண் முதலானவைகளும் கிரியைகளுக்கு உபகரணங்களாக இருக்கிற கரசரணாதிகளும் இவன் சக்தியின் திவலையினாலே கரணம் என்று சொல்லப்படுகின்றன. ஆதலால் இவனே முக்கியமான கரணம் என்பது கருத்து.

௩௮௧. కారణాయనమః. காரணாயநம:.

அததனாலே அந்தந்தப்பிரகாரம்செய்விக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௮௨. కర్త్రేనమః. கர்த்ரேநம:.

சுதந்தரனாகச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௮௩. వికర్త్రేనమః. விகர்த்ரேநம:.

அவிகாரியான இவன் கருமபலத்தை உடைய ஜீவர்களுக்கு இமிசை துக்கம் முதலியவைகள் நேரிடும்போது அவர்கள்கொண்ட அபிமானத்தைப்பார்க்கிலும் விசேஷமான அபிமானத்தை உடையவனாய் அவர்களுக்காகக் கிலேசத்தை அடைகிறவனுக்கு நமஸ்காரம்.

ஜீவர்களுடைய கிலேசத்தைக்கண்டு தனக்குக் கிலேசம் உண்டானாலும் தனக்கென்று ஒருகிலேசமும் இல்லையாதலால் தயை உடையவர்களுக்கு இது குணமேயல்லது தோஷம் அல்ல என்பது கருத்து.

௩௮௪. గహనాయనమః. கஹநாயநம:.

ஞானத்துக்கு ஆசிரியமான ஆத்மாவிலும் போகத்துக்கு ஆசிரியமான தேகத்திலும் எல்லாப்பிராணிகளுக்கும் இருக்கும் அபிமானத்தைப் போலத் தானும் அபிமானம் உள்ளவனாக இருக்கிற அறியக்கூடாத மகா குணத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

௩௮௫. గుహాయనమః. குஹாயநம:.

மேற்கூறியபடி அபிமானமுள்ளவனாய் ஆத்மாக்களை ரக்ஷிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௲அசா. వ్యవసాయాయనమః. வ்யவஸாயாயநம꞉.

ஜோதிசக்ரங்களுக்கு ஆதாரமான ஆகாசமானவனுக்கு நமஸ்காரம்.

௲அஎ. వ్యవస్థానాయనమః. வ்யவஸ்தாநாயநம꞉.

கலை முகூர்த்தம் முதலியவைகளின் சொரூபமாக இருக்கும் காலமும் தன்னில் ஸ்திரமாயிருக்கும்படிக்கு ஜோதிசக்கர மூலமாய்த் தான் ஆதாரமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௲அஅ. సంస్థానాయనమః. ஸம்ஸ்தாநாயநம꞉.

ஸமஸ்தமும் தன்னாலே தரிக்கிறதாகவும் தன்னிடத்தில் சேரும்படியாகவும் இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௲அகூ. స్థానదాయనమః. ஸ்தாநதாயநம꞉.

தன்னுடைய உயர்ந்தபதத்தைத் தானேகொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௲கூ0. ధ్రువాయనమః. த்ருவாயநம꞉.

கீழ்லோகத்திலிருந்த துருவனையும் அந்தஜோதிசக்கரத்தில் சாஸ்வதமாக நிலைநிறுத்தினவனுக்கு நமஸ்காரம்.

ஸ்ரீ ராமசரிதத்தைச் சொல்லுகிறது.

௲கூக. పరర్ధయేనమః. பரர்த்தயேநம꞉.

பகவானாக இருக்கிற இருப்பைக்காட்டிலும் ராமாவதாரத்தில் அதிககல்யாணகுண சமூர்த்தியை உடையவனுக்கு நமஸ்காரம்.

ஸ்ரீ ராமமூர்த்தி வீரியகுணத்தில் விஷ்ணுவுக்கு ஒப்பானவரென்று ராமாயணத்தில் சொல்லி இருக்கின்றது.

௲கூ௨. పరమస్పష్టాయనమః. பரமஸ்பஷ்டாயநம꞉.

பிரத்தியக்ஷமாகத் தெரிகிற பெருமையை உடையவனுக்கு நமஸ்காரம்.

தாராமுதலானவர்களும் ஸ்ரீராமரைப் பரப்பிரம்மமென்று அறிந்து கொண்டாடினார்கள்.

௲கூ௩. తుష్టాయనమః. துஷ்டாயநம꞉.

எவர்களும் கிட்டவொண்ணாதபடி பரமபதத்தில் இருக்கும் இருப்பைப்பார்க்கிலும் அறிவில்லாத மனிதரும் தன்னைத் தரிசித்துவாழும்படிக்குத் தசரதசக்ரவர்த்திக்குப் பிள்ளையாக இருந்து ஜகத்பாலனம் செய்து இவர்களுடைய லாபத்தினாலே சந்தோஷமடைந்தவனுக்கு நமஸ்காரம்.

௩௯௪. ஞுஷ்டாய நம:. புஷ்டாயநம:.

இப்படிக்கு மகிமையான குணங்களாலே பரிபூரணமாக இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௯௫. ஶுபேக்ஷணாய நம:. சுபேக்ஷணாயநம:.

இவ்விதமாக ஐசுவரியம் சீலம் இவைகளின் அதிசயங்களைக்காண்பிக்கின்றனவாயும் சீதளமாயும் விசாலமாயும் ஆதரத்துடன் கூடினவைகளாயும் தீர்க்கமாயும் தாமரைமலர்போன்றனவாயும் இராநின்ற நேத்திரங்களை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௩௯௬. ராமாய நம:. ராமாயநம:.

ரூபம் குணம்முதலியவைகளால் ஸமஸ்தஜனங்களும் தன்னிடத்தில் பிரீதி அடையச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௯௭. விராமாய நம:. விராமாயநம:.

ராவணாதிகளை முடிவு பெறச்செய்தவனுக்கு நமஸ்காரம்.

௩௯௮. விரதாய நம:. விரதாயநம:.

சுபாவமான நிரபேட்சையினாலே அற்பமான ராஜ்யமுதலானவைகளில் ஆசையற்றவனுக்கு நமஸ்காரம்.

௩௯௯. மார்காய நம:. மார்க்காயநம:.

பரத்துவாசர் முதலான முனீஸ்வரர்களால் தேடப்பட்டவனுக்கு நமஸ்காரம்.

௪00. நேயாய நம:. நேயாயநம:.

நல்லவர்களுடைய ஆஜ்ஞைக்கு உடன்பட்டவனுக்கு நமஸ்காரம்.

ஸ்ரீமத் ராமாயணத்தில் தண்டகாரணியவாசிகளான தபசிகளைப் பார்த்து நான் உங்களாலே ஆஜ்ஞாபிக்கத்தக்கவன் இந்த அரணியத்தில் வாசம்செய்ய இச்சிக்கிறேன் என்றும், மகாபாரதத்தில் ராஜசூயயாககாலத்தில்தருமராஜனே உம்முடைய இஷ்டப்பிரகாரம் யாகத்தைச்செய்யும் உமக்கு நான் செய்யவேண்டிய காரியங்களில் என்னை ஆஜ்ஞாபியும் நான் உம்முடைய வார்த்தையின்படி ஸமஸ்தமும் செய்கிறேன் என்றும், தூதுக்கு ஆஜ்ஞாபிக்கப்பட்டபோது தருமராஜனே நீர் சொல்லத்தக்ககாரியங்களை என்னுடன்சொல்லும் நீர் சொல்லுகிற ஸமஸ்தகாரியங்களையும் செய்கிறேன் என்றும் பகவான் திருவாய்மலர்ந்தருளியிருக்கிறார்.

சoக. நயாயநம: நயாயநம:.

அவர்களும் அந்தப்பிரகாரம் தான்சொன்னபடியே நடக்கச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

ஸ்ரீமத்ராமாயணத்தில் தண்டகாரணிய ரிஷிகள் ஸ்ரீ ராமமூர்த்தியைப்பார்த்து தாய் பிள்ளையைரக்ஷிப்பதுபோல் உம்மால் நாங்கள் சாசுவிதமாய் ரக்ஷிக்கப்படத்தக்கவர்கள் உம்மை அடைந்தவர்களுச்கு நீர் சுவாமியாக இருப்பதால் உம்மை அடைந்த எங்களையும் நீரே ரக்ஷித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.

சoஉ. அநயாயநம: அநயாயநம:.

துவேஷிகள் தன்னைக்கிட்ட அரிதாயிருக்கிறவனும் சுபத்தை உண்டாக்கும் தெய்வம் தன்னையன்றி வேறு இல்லாதவனுமானவனுக்கு நமஸ்காரம்.

ஸ்ரீ ராமாயணத்தில் இமயகிரி மந்தரகிரி மேருகிரிகளையும் தேவதைகளுடன் மூன்றுலோகங்களையும் புஜங்களாலே எடுக்கச் சக்தியுள்ள நான் ஸ்ரீ ராமருடன் யுத்தம்செய்யச் சக்தி அற்றவனுனேன் என்று ராவணன் சொன்னதாகச் சொல்லி இருக்கிறது.

சoரு. வீராயநம: வீராயநம:.

ராக்ஷஸர்முதலான விரோதிகளுக்குப் பயத்தையும் நடுக்கத்தையும் உண்டாக்குகிறவனுக்கு நமஸ்காரம்.

ஸ்ரீமத்ராமாயணத்தில் பிரமதண்டத்துக்குச் சமானமானவைகளும் மின்னல்போல்ஜொலிக்கப்பட்ட காந்தியை உடையவைகளுமாக விருந்த ராமபாணங்களை நினைத்துக்கொண்டு விசனமடைந்து சிங்கத்தைக் கண்டயானையைப்போலவும் கருடனைக்கண்டசர்ப்பத்தைப்போலவும் ராவணன் மகாத்துமரான ஸ்ரீ ராமரால் அவமானிச்கப்பட்டான் என்றும் மரவுரியும் மான்தோலும் வஸ்திரமாக உடையவரும் தனுசைப்பிடித்தவருமாயிருச்கிற ஸ்ரீராமரை விருட்சங்கள்தோறும் கையில் பாசத்தை உடையயமனைப்போலக்காண்கிறேன் என்று மாரீசனும் சொன்னுனென்றும் கூறியிருக்கிறது.

சoச. ஶக்திமதாம்ஶ்ரேஷ்டாயநம: ஸக்திமதாம்சிரேஷ்டாயநம:.

ஸ்தோத்திரம்செய்யச் சக்தியுள்ள தேவாதிகளாலே அதிசயமாகச் சிலாகிக்கத்தக்கவனுக்கு நமஸ்காரம்.

ஸ்ரீமத்ராமாயணத்தில் உத்தமதேவனும் வற்றுதபிரபாவம் உடையவனும் மதுவென்கிற ராக்ஷஸனைச் சங்கரித்தவனுமாக நான் உம்மை அறிவேனென்று ஸ்ரீராமமூர்த்தியைப்பார்த்துப் பரசுராமர் கூறியிருக்கிறார்.

சOரு. ధర్మాయనమః. தர்மாயநம ः.

இந்த லோகத்தின் பலனேயும் மோட்சத்தையுங் கொடுக்கும்படி யான தருமசொரூபமாக இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

இந்திரசித்தின்மீது லட்சுமணப்பெருமாள் பாணம் பிரயோகித்த பொழுது ஸ்ரீ ராமர் தர்மாத்துமாவாயும் சத்தியஸந்தராயும் பராக்கிரமத்தில் நிகரில்லாதவராயும் இருக்கிறது உண்மையானல் நீ இந்திரசித்தனைச் சங்கரிக்கக்கடவாயென்று சொல்லிப் பிரயோகித்தார் என்று ஸ்ரீமத்ராமாயணத்தில் கூறியிருக்கின்றது.

சOசு. ధర్మవిదుత్తమాయనమః. தர்மவிதுத்தமாயநம ः.

தருமத்தை அறிந்தவர்களில் உத்தமனானவனுக்கு நமஸ்காரம்.

தருமங்களை அறிவதில் வசிஷ்டர் வாமதேவர் மார்க்கண்டேயர் முதலானவர்களுக்குத் தான் சிஷ்யனாக இருந்தும் தன்னால் அவர்கள் சந்தேகநிவாரணஞ் செய்துகொள்ளும்படி இருந்தவனும் பின்னும் நதிகள் சமுத்திரத்தைச் சேருவதுபோலச் சஜ்ஜனர்கள் தன்னிடத்தில் வந்து சேரும்படி இருக்கிறவன் என்றும் பிரமாணமிருக்கின்றது.

சOஎ. వైకుంఠాయనమః. வைகுண்டாயநம ः.

யாவற்றிற்கும் ஒன்றுக்கொன்று சேர்க்கையை உண்டாக்கினவனுக்கு நமஸ்காரம்.

பகவான் வாக்கியம். என்னால் பூமி ஜலத்தோடும் ஆகாசம் வாயுவோடும் வாயு தேயுவோடும் சேர்ந்திருக்கின்றன. இக்காரணத்தினாலே நான் வைகுந்தன் என்று சொல்லப்படுகிறேன்.

சOஅ. పురుషాయనమః. புருஷாயநம ः.

யாவற்றையும் பரிசுத்தம்செய்கிறவனும் ரக்ஷணம் செய்கிறவனும் குணங்களினால் பூரணனும் ஆனவனுக்கு நமஸ்காரம்.

சOகூ. ప్రాణాయనమః. ப்ராணாயநம ः.

ஸமஸ்தத்துக்கும் பிராணனாக இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

எல்லாவற்றையும் பிராணவாயுவோடே கூட்டுகிறவனுக்கு நமஸ்காரமென்றுமாம்.

சகO. ప్రాణదాయనమః. ப்ராணதாயநம ः.

பிரசித்தமான ஐந்து பிராணன்களையுங் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஸ்ரீ ராமமூர்த்தி காட்டுக்குச்சென்றபொழுது நாட்டிலிருந்த பூமுதலியவைகளோடு கூடிய மரங்களும் வாடிப்போயினவென்று ஸ்ரீமத் ராமாயணத்தில் சொல்லி இருக்கிறபடியால் யாவற்றிற்கும் பிராணனைக் கொடுக்கிறவனென்பது கருத்து.

௪௧௧. ப்ரணவாயநமஃ. ப்ரணவாயநம:.

தன்னுடைய குணங்களினாலே பிராணிகளை வணங்கச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௪௧௨. ப்ருதவேநமஃ. ப்ருதவேநம:.

எங்கும் பரந்த கீர்த்தியை யுடையவனுக்கு நமஸ்காரம்.

அவதாரகாலத்தி லில்லாதவர்களுக்கும் தியானமுதலியவற்றால் உபகாரம் செய்கிறவனென்று சொல்லுகின்றது.

௪௧௩. ஹிரண்யகர்ப்பாயநமஃ. ஹிரண்யகர்ப்பாயநம:.

தியானிக்கிறவர்களுடைய இருதயங்களுக்கு இதமானதும் சுந்தரமானதும் பொன்னோடொத்த நிறத்தை உடையதுமான வடிவத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

௪௧௪. சத்ருக்நாயநமஃ. சத்ருக்நாயநம:.

தன்னைத் தியானஞ்செய்கிறவர்களுக்குத் தன்னை ஒழிந்த வேறு விஷயங்களில் செல்லச்செய்வதினால் ராவணனைப்போலச் சத்துருவாக இருக்கிற இந்திரியவருக்கங்களை விவேகமாகிய சரங்களாலே சங்கரித்துச் சாந்தி அடையச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

தசேந்திரியங்களாகிய முகங்களை யுடைய மனம் என்கின்ற ராக்ஷஸனை விவேகமாகிய பாணசமுகத்தினால் சங்கரித்து யோகிகளுக்கு மனத்தை வசப்படுத்துகிறவன் என்று பிரமாண மிருக்கின்றது.

௪௧௫. வ்யாப்தாயநமஃ. வ்யாப்தாயநம:.

தியானம்செய்யும் பாலியர் விருத்தர் எஜமான்கள் சேவகர் சத்துருக்கள் மித்துருக்கள் இவர்களில் தாரதம்மியம் இல்லாமல் சமமாகத் தான்வியாபித்து அனுக்கிரகஞ் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஸ்ரீ ராமர் பட்டணத்திலிருந்த ஜனங்களைத் தன் சொந்தஜனங்களைப்போலப் பிரதிதினமும் குசலத்தைக்கேட்டுத் தகப்பன் தன்வயிற்றிற் பிறந்த பிள்ளைகளை விசாரிப்பதுபோலப் புத்திரர்கள் பத்தினிகள் ஏவல்செய்கிற சிஷ்யகணங்கள் மற்றுமுள்ள யாவரையும் கிரமமாக விசாரித்துச் சத்துருக்களிடத்திலும் வாச்சலியம் உடையவராக இருந்தாரென்று ஸ்ரீமத் ராமாயணத்தில் கூறி இருக்கின்றது.

௪௧௬. వాయవేనమః. வாயவேநம:.

தானுகவே அங்கங்கே அவரவர்களிடத்துக்குப்போய் விசாரிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஸ்ரீ ராமாயணத்தில் சவரி ஆசிரமத்துக்கும் பரத்துவாசர் ஆசிரமத்துக்கும் குகன் இருந்த இடத்துக்கும் ஸ்ரீராமர் தாமாகவே போனுரென்று கூறி இருக்கின்றது.

௪௧௭. అధోక్షజాయనమః. அதோக்ஷஜாயநம:.

இப்படிச்கு எப்பொழுதும் எல்லாராலும் அனுபவிக்கப்பட்டாலும் ஒருக்காலும் வற்ருத அமிர்த சமுத்திரத்தைப்போன்றவனுக்கு நமஸ்காரம்.

௪௧௮. ఋతవేనమః. ருதவேநம:.

எப்பொழுதும் நூதனமாயும் ஸர்வ உல்லாசகரமாயும் ஒன்றுக்கொன்று சிறந்ததாயும் இருக்கின்ற குணங்களால் வசந்தாதி ருதுக்களைப்போல யாவருக்கும் சந்தோஷத்தைச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

இவன் சம்பந்தத்தினுல் வசந்தம் முதலான காலங்கள் ருதுக்களென்று சொல்லப்படுகின்றன.

௪௧௯. సుదర్శనాయనమః. சுதர்சனுயநம:.

தன் குணப்பிரபாவத்தை அறியாமலிருக்கிறவர்களுக்கும் தன்னுடைய தரிசனமாத்திரத்தாலே மங்களங்களைச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௪௨0. కాలాయనమః. காலாயநம:.

இப்படிப்பட்ட குணங்களினுலே சராசரங்கள் யாவும் தன்னிடத்தில் சேரும்படி செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௪௨௧. పరమేష్ఠినేనమః. பரமேஷ்டிநேநம:.

ஜகத்ரக்ஷணத்துக்காக இவ்விடத்தில் அவதரித்து வஞ்சகர்களான ராக்ஷஸர் முதலானவர்களைச் சங்கரித்தல் முதலிய விளையாடல்களைச்செய்து மறுபடியும் சிரேஷ்டமான தன் ஸ்தானத்துக்குப் போயிருக்குமவனுக்கு நமஸ்காரம்.

௪௨௨. పరిగ్రహాయనమః. பரிக்ரஹாயநம:.

தன்னைப் பற்றினவர்களையும் அவர்களைச் சேர்ந்தவற்றையும் அங்கீகரிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஸ்ரீராமாயணத்தில் ஸ்ரீராமர் தமக்குச் சம்பந்தப்பட்ட பட்டணத்திலிருந்தவர்களையும் கிராமத்திலிருந்தவர்களையும் அவர்களுக்குச் சம்பந்தமுடையவர்களையும் அவர்கள் வீட்டுத்தெய்வங்களையும் சோலைகள் தருக்கள் அறுகம்புல் முதலியவைகளையும் பரமபதம் அடையச்செய்தாரென்று கூறி இருக்கின்றது.

மேல் நாமங்களால் இவனுக்குச் சௌசீல்யத்வத்தைச் சொல்லி
அக்குணத்தால் வசப்படாத துஷ்டர்களை அடக்குகிறவன்
என்பதை இனிச் சொல்லுகின்றது.

௪௨௩. உக்ராயநம:. உக்ராயநம:.

யுகமுடிவில் பாவங்கள்மிகுந்து வர்ணாச்சிரமங்களின் ஏற்பாடுகளை அழியச்செய்யுமவர்களிடத்தில் உக்கிரனாக இருப்பவனுக்கு நமஸ்காரம்.

பகவானான விஷ்ணுவானவர் தருமம் நஷ்டமாகுங்காலத்தில் கற்கியாக அவதரித்துப் பூமியில் இருக்கும் மிலேச்சகணங்களைச் சங்கரித்துக் கலியுகத்தில் இருப்பாரென்று பிரமாணம் இருக்கின்றது.

௪௨௪. ஸம்வத்ஸராயநம:. ஸம்வத்ஸராயநம:.

பாதாளத்தில் சங்கார பரிகரங்களுடன் காலத்தை நிரீக்ஷித்துக்கொண்டு அனந்தன் ரூபமாய் வாசஞ்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

மூர்த்தங்களாய் இருக்கிற சக்கரம் முதலான ஆயுத சமூகங்களோடு கூடிக் கொண்டு இருக்கிறான் என்றும் சோரர்களை வதைக்கிறதில் ஆசக்தி உள்ளவனாய்ப் பூமியிலே கற்கி ரூபனாகச் சஞ்சரிப்பான் என்றும் கூச்சல் இட்டுக்கொண்டு ஓடும் சோரர்களை நாசம் அடையச் செய்வான் என்றும் பிரமாணம் இருக்கின்றது.

௪௨௫. தக்ஷாயநம:. தக்ஷாயநம:.

சோரர்களை வதைப்பதில் சமர்த்தனும் விரைந்துசெய்யுமவனும் ஆனவனுக்கு நமஸ்காரம்.

௪௨௬. விஸ்ராமாயநம:. விஸ்ராமாயநம:.

பாவம் அதனுடைய பலன் இவைகளின் அதிக சம்பந்தத்தினாலே சிரமத்தை அடைந்த ஜந்துக்களுக்குச் சிரமபரிகாரமாகும் இடமாக் இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௪௨௭. விஸ்வதக்ஷிணாயநம:. விஸ்வதக்ஷிணாயநம:.

இஷ்டத்தைச் செய்கிறவர்களிடத்திலும் அநிஷ்டத்தைச் செய்கிறவர்களிடத்திலும் சமமாகத்தயையை உடையவனும் அசுவமேத யாகத்தில் ஸமஸ்த பூமியையும் தக்ஷிணையாகக் கொடுத்தவனும் ஆனவனுக்கு நமஸ்காரம்.

சஉஅ. విస్తారాయనమః. விஸ்தாராயநம:.

கலியுகத்தின் பலத்தை அழித்துக் கிரேதாயுகத்தை வரச்செய்து வேத மரியாதைகளை விஸ்தாரமாகப் பரவச் செய்பவனுக்கு நமஸ்காரம்.

சஉகூ. స్థావరస్థాణవేనమః. ஸ்தாவரஸ்தாணவேநம:.

இந்தப் பிரகாரம் தருமத்தை ஸ்திரப்படுத்தித் தானும் சலனமற்று இருப்பவனுக்கு நமஸ்காரம்.

அவன் பிரம்மாவுக்கு விகிதமானதும் சுபமானதுமான மரியாதைகளை ஸ்தாபித்தவனென்று மகா பாரதத்தில் பிரமாணம் இருக்கின்றது.

சஙO. ప్రమాణాయనమః. ப்ரமாணாயநம:.

கிரேதாயுகத்தில் உள்ளவர்களுக்கு இதாகிதங்களை அறியும் ஏற்பாடுகளைச் செய்பவனுக்கு நமஸ்காரம்.

சஙக. అవ్యయబీజాయనమః. அவ்யயபீஜாயநம:.

இந்தப் பிரகாரம் கலிகால முதலாகிய க்ஷாமகாலத்தின் முடிவில் மறுபடியும் தருமத்தை முளைக்கும்படி செய்பவனாதலால் அழியாத வித்தைப் போன்றவனுக்கு நமஸ்காரம்.

சஙஉ. అర్థాయనమః அர்த்தாயநம:.

ஞானிகளுக்குத் தானே பயனாக இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

பகவத்கீதையில் ஞானவான் என்னை அடைகிறானென்று சொல்லியிருக்கிறது.

சிலபக்தர்கள் பலனை அபேட்சித்து இவனைப்பூசிக்கிறார்களென்று சொல்லுகின்றது.

சஙங. అనర్థాయనమః. அநர்த்தாயநம:.

மந்த மதிகளாக இருக்கிறவர்கள் ஒரு பலனைக் குறித்தே இவனைப் பிரார்த்திப்பதால் நிஷ்பலமாகப் பிரார்த்திக்கப்படாதவனுக்கு நமஸ்காரம்.

சஙச. మహాకోశాయనమః. மஹாகோசாயநம:.

சகலருக்கும் சர்வ பிரகாரத்தாலும் எக்காலமும் கொடுத்தாலும் அட்சயமானதால் மகத்தான சங்கநிதி பதுமநிதி ரத்நாகரம் பருவதங்களில் சிரேஷ்டமான மேரு இவை முதலானவைகளைக் கோசமாக உடையவனுக்கு நமஸ்காரம்.

௪௬௫. మహాభోగాయనమః. மஹாபோகாயநம:.

அர்த்தசாத்தியமானதும் மகத்தானதுமான சாம போகங்களை க்குறித்துத் தன்னைப் பிரார்த்திக்கிற மந்தமதிகளுக்கு அவைகளை உண்டு பண்ணுகிறவனுக்கு நமஸ்காரம்.

என்னால் உண்டாக்கப்பட்ட காமங்களை அடைகிறார்களென்று பகவான் கூறி இருக்கிறார்.

௪௬௬. మహాధనాయనమః. மஹாதநாயநம:.

இவ்வளவு என்று நிரூபிக்கக் கூடாததாயும் அதி தரித்திரர்களுக்கும் கொடுக்கத்தக்கதாயும் அனந்தமாயும் இருக்கின்ற தனத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

௪௬௭. అనిర్విణ్ణాయనమః. அநிர்விண்ணாயநம:.

இப்படிக்குச் சிருஷ்டி முதலானவைகளைச் செய்து அவர்களுக்கு இஷ்டமானவைகளை அதிகமாய்க் கொடுத்தும் 'விஷய வெறியினாலே தன்னிடத்தில் விருப்பம் அற்றவர்களாய் இருக்கின்ற சமுசாரிகளிடத்தில் அவைகள் நிஷ்பலமானாலும் அவர்களை விடக் கூடாதென்கிற துராசையினாலே மறுபடியும் சிருஷ்டி முதலானவைகளைச் செய்வதில் சோம்பல் இல்லாதவனுக்கு நமஸ்காரம்.

௪௬௮. స్థవిష్ఠాయనమః. ஸ்தவிஷ்டாயநம:.

சிம்சுமார ஆக்ருதியான நட்சத்திர ரூபமாக ஸ்துலமா யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

பகவானுடைய நட்சத்திர ரூபசிம்சுமாரமானது தேள் மாதிரியாக இருக்கின்றது என்று பிரமாணம் இருக்கின்றது.

௪௬௯. భువేనమః. புவேநம:.

துருவ மண்டலத்துக்குத் தான் ஆதாரமாய் அதின் சம்பந்தத்தினாலே சர்வத்துக்கும் ஆதாரமாக இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

சிம்சுமார ரூபமாகிய இறைவனுடைய வாலிலே துருவன் இருக்கிறான் என்று பிரமாணம் இருக்கின்றது.

௪௭0. ధర్మయూపాయనమః. தர்மயூபாயநம:.

தர்ம தத்துவத்தைச் சிரசாக உடையவனுக்கு நமஸ்காரம்.

தருமம் அந்த நட்சத்திர ரூபமான பகவானுடைய சிரசை ஆதாரமாகக் கொண்டு இருக்கின்றதென்றும் அவனுடைய சிரசு தருமமென்றும் பிரமாணம் இருக்கின்றது.

௪௪௧. മഹാമഖായനമഃ மஹாமகாயநம ঃ.

தரும சொரூபனானதால் சிரேஷ்டமான யாக ரூபனாய் இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௪௪௨. നക്ഷത്രനേമയേനമഃ. நக்ஷத்ரநேமயேநம ঃ.

ஜோதி சக்கரத்தை நடத்துகிறவனுக்கு நமஸ்காரம்.

சுழல்காற்றினாலே பிரேரிக்கப்பட்டதாய்ச் சக்ராகாரமான கொள்ளியைப்போலச் சுழலுகிற நட்சத்திரங்களை வகிக்கிறவனென்றும் தான் சுழன்று சந்திரன் முதலான கிரகங்களைச் சுழலச் செய்கிறானென்றும் பிரமாணமிருக்கின்றது.

௪௪௩. നക്ഷത്രിണേനമഃ. நக்ஷத்ரிணேநம ঃ.

அந்த ஜோதி சக்கரத்திலிருக்கிற நட்சத்திரங்களுக்கு ஆதாரமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஜோதி சக்கரத்தின் மத்தியிலிருக்கிற சிம்சுமார ஆக்ருதியானது நாராயணன் என்றும் அதுவே யாவற்றிற்கும் ஆதாரம் என்றும் புராணங்கள் கூறுகின்றன.

௪௪௪. ക്ഷമായനമഃ. க்ஷமாயநம ঃ.

இந்தப் பிரகாரம் அகில புவன பாரத்தையும் அநாயாசமாய் வகிக்கச் சாமர்த்தியமுள்ளவனுக்கு நமஸ்காரம்.

௪௪௫. ക്ഷാമായനമഃ. க்ஷாமாயநம ঃ.

மத்தியகால பிரளயத்தில் சில நட்சத்திரங்கள் நாசமாகும்போதும் தான் மற்ற நட்சத்திரரூபியாய்த் தரித்திருப்பதால் மறைவான தசையை அடைபவனுக்கு நமஸ்காரம்.

சிம்சுமார சக்கரத்தில் இருக்கும் நட்சத்திரங்களில் நான்கு அஸ்தமானம் ஆகிறதில்லை என்றும் துருவன் இருப்பது எந்தெந்தப் பிரதேசமோ அந்தந்தப் பிரதேசத்தில் இருப்பவைகள் மாத்திரம் பூத பிரளயத்தில் க்ஷயம் அடையத்தக்கவைகள் என்றும் புராணங்கள் கூறுகின்றன.

௪௪௬. സമീഹനായനമഃ. ஸமீஹநாயநம ঃ.

பின்பு சிருஷ்டிகாலத்தில் சகலரையும் தங்கள் தங்கள் அதிகாரங்களில் இருக்க இச்சை யுடையவர்களாகச் செய்பவனுக்கு நமஸ்காரம்.

பூமி ஆகாசம் சுவர்க்கம் இவைகளில் இருக்கின்ற உயிர்களைத் தனக்குக் கிரீடையாய்த் தொழில்படச்செய்பவன் என்று மகாபாரதத்தில் கூறி இருக்கின்றது.

சசள். யஜ்ஞாயநம:. யஜ்ஞாயநம:.

யஜ்ஞம் யஜ்ஞசாதகம் யஜ்ஞபலன் என்று சொல்லப்படு மவனுக்கு நமஸ்காரம்.

இவை யாவற்றிற்கும் அவனே ஆதாரமாய்ச் சொல்லப்பட்டிருப்பதால் யஜ்ஞசொரூபமா யிருக்கிறவனென்பது கருத்து.

சசஅ. இஜ்யாயநம:. இஜ்யாயநம:.

இந்திரன்முதலானவர்களின் வழியாகச் சொற்பபலனை அபேக்ஷித்தவர்களால் ஆராதனம் செய்யப்படுமவனுக்கு நமஸ்காரம்.

பிதுர்க்களையும் தேவர்களையும் பிராமணர்களையும் அக்கினியையுங்குறித்து யார் யஜ்ஞம் செய்கிறார்களோ அவர்கள் சர்வபூதாந்தராத்துமாவாய் இருக்கிற விஷ்ணுவைக்குறித்தே யஜ்ஞம் செய்கின்றவர்களாகின்றார்களென்றும் அன்னியதேவதைகளுடைய பக்தர் செய்கிறதும் விஷ்ணுவுக்கே சேருகிறதென்றும் புராணங்களும், கீதையும் கூறுகின்றன.

சசகூ. மஹேஜ்யாயநம:. மஹேஜ்யாயநம:.

சொற்பபலனை அபேக்ஷியாத ஞானிகளால் செய்யப்படும் சிரேஷ்டமான ஆராதனத்தை யடைகிறவனுக்கு நமஸ்காரம்.

ஞானிகள் என்னிடத்தில் ஸர்வகருமங்களையும் சமர்ப்பிக்கக்கடவரென்று பகவான் கூறி இருக்கிறார்.

சரு0. க்ரதவேநம:. க்ரதவேநம:.

யக்கியங்களென்று சொல்லப்படுகிற பஞ்சயக்கியம் ஔபாசனம் சிரௌதாக்கினிஹோத்திரம் முதலானவைகளாலும் கிருதுக்கள் என்று சொல்லப்படுகிற அக்கினிஷ்ட்டோமாதிகளாலும் ஆராதிக்கப் படுமவனுக்கு நமஸ்காரம்.

சருக. ஸத்ராயநம:. ஸத்ராயநம:.

வெகுகாலம் செய்யப்பட்டதாயும் அனேக எஜமான்களை உள்ளதாயும் மாசந்தோறும் செய்யப்படுவதுமான சத்ரம் என்கின்ற யாக வழியாக ஆராதிக்கப்படுமவனுக்கு நமஸ்காரம்.

சருஉ. ஸதாங்கதயேநம:. ஸதாம்கதயேநம:.

இதுவரையிலும் பிரவர்த்தி நிஷ்டர்களாயிருக்கிறவர்களுக்குக் கதியானவன் என்று சொல்லியதுபோலவே நிவர்த்தி நிஷ்டர்களாயிருக்கிற ஸத்துக்களுக்கும் கதியாய் இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

தோஷமாகிய சேற்றைச் செவ்வையாய்க் கழுவிப் புறக்கரணங்களாகிய பொறிகளையும் உட்கரணமாகிற மனத்தையும் நிக்கிரகிக்கிறவர்களுக்குப் புண்ணிய பாவங்கள் க்ஷீணமாய் அவர்கள் அந்தப் பகவானை அடைவார்களென்று பிரமாணமிருக்கின்றது.

சருங. ஸர்வதர்ஶிநேநம꞉. ஸர்வதர்சிநேநம꞉.

பிரவர்த்தி, நிவிர்த்தி, என்று இரண்டு விதப்பட்ட ஸமஸ்த தருமங்களையும் பிரத்தியட்சமாய் அறிகிறவனுக்கு நமஸ்காரம்.

சருச. நிவ்ருத்தாத்மநேநம꞉. நிவிருத்தாத்மநேநம꞉.

நிவிர்த்தி தர்ம ஆசாரியனையும் நரநாராயணனையும் பரம வைராக்கியத்தைப் பிரசித்தி செய்வதற்காக விஷயங்களை நிக்கிரகித்த மனத்தை உடையவனையும் ஆனவனுக்கு நமஸ்காரம்.

சருரு. ஸர்வஜ்ஞாயநம꞉. ஸர்வஜ்ஞாயநம꞉.

அப்படியே ஸர்வப்பிரகாரத்தாலும் தன்னைத்தான் அறிந்தவனுக்கு நமஸ்காரம்.

பரமபதத்தில் இருக்குந் தன்னை நரநாராயண ரூபமாகத் திருவவதரித்த தானே தியானஞ் செய்தானென்று பிரமாணம் இருக்கின்றது.

சருசு. உத்தமஜ்ஞாயநம꞉. உத்தமஜ்ஞாயநம꞉.

சிரேஷ்டமான ஸமஸ்த வைஷ்ணவ தருமங்களையும் பாஞ்சராத்திர முதலான சாஸ்திரங்கள் மூலமாகத் தானே தெரியச் செய்து யாவருக்கும் ஞானம் உண்டாகும்படி செய்தவனுக்கு நமஸ்காரம்.

சருஎ. ஸுவ்ரதாயநம꞉. ஸுவ்ரதாயநம꞉.

அர்ச்சுனா-என் பிரயோஜனத்துக்காக நான் செய்யத்தக்கது ஒன்றுமில்லை, அன்னியருடைய பிரயோஜனத்துக்காகச் செய்கிறேன் என்று கீதையில் சொல்லியபடிக்கு மங்களகரமான விரதங்களை அநுஷ்டித்தவனுக்கு நமஸ்காரம்.

நரநாராயண அவதாரத்தில் ஒரு பாதத்தில் நின்றுகொண்டு வாயுவை பக்ஷணஞ்செய்து பக்ஷ உபவாஸம் மாஸ உபவாஸங்களைச் செய்துகொண்டு இருந்தானென்று புராணங்கள் கூறுகின்றன.

சருஅ. ஸுமுகாயநம꞉. ஸுமுகாயநம꞉.

ஐப் முதலிய காலங்களில் விகாரமில்லாமல் பிரசன்னமாயும் மனோஹரமாயும் இராநின்ற திருமுகத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

சருக. ஸூக்ஷ்மாயநம꞉. ஸூக்ஷ்மாயநம꞉.

நிருபாதிக சமாதியில் சாக்ஷாத்கரிக்கப்பட்ட மிகவும் சூக்ஷ்ம ரூபத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௪௯௦. 𑌸𑍁𑌘𑍋𑌷𑌾𑌯𑌨𑌮𑌃. ஸுகோஷாயநம꞉.

உபநிஷத்துக்களுடைய அத்யயன கோஷத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௪௯௧. 𑌸𑍁𑌖𑌦𑌾𑌯𑌨𑌮𑌃. ஸுகதாயநம꞉.

நல்ல ஆசாரம் ஸமாதி முதலானவைகளைத் தான் செய்து காண்பித்து அப்படியே அவைகளைச்செய்பவர்களுக்கு இஷ்டமான பலத்தைக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௪௯௨. 𑌸𑍁𑌹𑍃𑌦𑍇𑌨𑌮𑌃. ஸுஹ்ருதேநம꞉.

இப்படிக்குப் பரோபகாரத்தைச் சிந்தை செய்கிறவனானதால் நல்ல மனதை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௪௯௩. 𑌮𑌨𑍋𑌹𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. மநோஹ்ராயநம꞉.

இந்தப் பிரகாரம் சுபாவமான பிரீதியினாலே அன்பர்களுடைய மனத்தை அபகரிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௪௯௪. 𑌜𑌿𑌤𑌕𑍍𑌰𑍋𑌧𑌾𑌯𑌨𑌮𑌃. ஜிதக்ரோதாயநம꞉.

அவர்களுடைய குரோத முதலானவைகளைத் தன் குணத்தால் போக்குகிறவனுக்கு நமஸ்காரம்.

மேற் சொல்லிய ஏழு திருநாமங்களுக்கும்

அமிர்தம் கடைந்தவிஷயமாக வேறு பொருளைச்
சொல்லுகின்றன.

𑌸𑍁𑌮𑍁𑌖𑌾𑌯𑌨𑌮𑌃. ஸுமுகாயநம꞉.

கையில் அமிர்த கலசத்தை ஏந்திக்கொண்டு பூர்ண சந்திரனைப்போல அழகுள்ள முகத்தை யுடையவனாய்ப் பிரகாசித்தவனுக்கு நமஸ்காரம்.

𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌯𑌨𑌮𑌃. ஸூக்ஷ்மாயநம꞉.

அசுரர்கள் தன் கருத்தை அறியாதபடி சூக்ஷ்மமாய் இருந்தவனுக்கு நமஸ்காரம்.

𑌸𑍁𑌘𑍋𑌷𑌾𑌯𑌨𑌮𑌃. ஸுகோஷாயநம꞉.

அமிர்தத்தைக் கடைந்தபோது செய்த செயலைக் கண்டு, சுரர்களும் அசுரர்களும் கோஷித்துக் கொண்டாடப் பெற்றவனுக்கு நமஸ்காரம்.

𑌸𑍁𑌖𑌦𑌾𑌯𑌨𑌮𑌃. ஸுகதாயநம꞉.

அமிர்ததானம் முதலானவைகளாலே சுரர்களுக்குச்சுகத்தைக் கொடுத்தவனுக்கு நமஸ்காரம்.

సుహృదేనమః. ஸுஹ்ருதேநம꞉.

அதற்கு ஹேதுவான நல்ல இருதயத்தை உடையவனுக்கு நமஸ்காரம்.

మనోహరాయనమః. மநோஹ்ராயநம꞉.

அசுரர்களை மோகம் அடையச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

జితక్రోధాయనమః. ஜிதக்ரோதாயநம꞉.

ஆச்சரியத்தினுலே கலங்கின மனத்தையுடைய அசுரர்கள் தேவர்களிடத்தில் செய்த குரோதத்தை விடும்படி செய்தவனுக்கு நமஸ்காரம்.

௪௬௫. వీరబాహవేనమః. வீரபாஹுவேநம꞉.

மிகுந்த பராக்கிரமத்தை யுடையவைகளான ஆயிரம் புஜங்களை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௪௬௬. విదారణాయనమః. விதாரணுயநம꞉.

தேவர்களுக்கு அமிர்தத்தைப் பகிர்ந்த காலத்தில் திவ்ய ஆயுதத்தினுலே ராகுவினுடைய முகத்தைப் பிளந்தவனுக்கு நமஸ்காரம்.

௪௬௭. స్వాపనాయనమః. ஸ்வாபநாயநம꞉.

சிரமத்தையடைந்த தொண்டர்களை மனேகரமாயும் சாமர்த்தியமுள்ளதாயும் இருக்கின்ற புன்சிரிப்பினுலும் மதுரமான கடாட்சத்தினுலும் புருவவிலாசத்தினுலும்பரவசமடையச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௪௬௮. స్వవశాయనమః. ஸ்வவசாயநம꞉.

அசுரர்கள் நித்திரை செய்யும் பொழுது தன்னவர்களான சுரர்களோடு யதேச்சையாய் விளையாடிக்கொண்டிருந்தவனுக்கு நமஸ்காரம்.

௪௬௯. వ్యాపినేనమః. வ்யாபிநேநம꞉.

சுரர்களும் அசுரர்களும் திருப்பாற் கடலைக் கடந்த காலத்தில் மந்தரகிரி வாசுகி முதலான யாவற்றிலும் தான் வியாபித்து அவைகள் கடைதற்குச் சக்தி உள்ளவைகளாகும்படி செய்தவனுக்கு நமஸ்காரம்.

௪௭௦. నైకాత్మనేనమః. நைகாத்மநேநம꞉.

அக்காலத்தில் பெரிய கூர்மம் மோகினி முதலான அனேக ரூப்ங்களை யுடையவனுயினவனுக்கு நமஸ்காரம்.

௪௭௧. నైకకర్మకృతేనమః. நைககர்மக்ருதேநம꞉.

க்ஷீரப்தியை மதனம் செய்தது மந்தரகிரியைத் தாங்கினது வைரிகளை நிக்கிரகித்தது அமிர்தத்தைப் பங்கிட்டது முதலிய அனேகஞ் செயல்களைச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

சஎ௨. வத்ஸராயநம꞉. வத்ஸராயநம꞉.

யாவற்றிலும் அந்தராத்மாவாய் வசிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

சஎ௩. வத்ஸலாயநம꞉. வத்ஸலாயநம꞉.

அதற்கேதுவான வாச்சலியத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

அப்பொழுது ஈன்றகன்றை ஏதோ ஒரு காரணத்தால் காணாமற்போய் ஹுங்காரத்தோடு பால் பெருகுகிற முலைகளுடன் என்ன செய்வோமென்று வருத்தப்படும் பசுவைப்போல ஸ்ரீ ராமர் கொஞ்சக்காலம் பரிசயம் செய்தவர்களிடத்திலும் வாச்சலியத்தால் அலைந்தவரென்றும் தருமங்களை யறிந்தவரென்றும் சரணாகதவச்சலரென்றும் ஸ்ரீ ராமாயணத்தில் கூறி இருக்கின்றது.

சஎச. வத்ஸிநேநம꞉. வத்ஸிநேநம꞉.

இப்படிக்கு நித்தியம் போஷிக்கத்தக்க ஆத்மாக்களாகிய அனேகங் கன்றுகளை உடையவனுக்குநமஸ்காரம்.

சஎ௫. ரத்நகர்ப்பாயநம꞉. ரத்நகர்ப்பாயநம꞉.

அவர்களில் தனத்தை அபேட்சித்தவர்களுக்குக் கொடுக்கத்தக்க தனங்களின் பெருமையை யுடையவனுக்கு நமஸ்காரம்.

சஎசா. தநேஶ்வராயநம꞉. தநேஸ்வராயநம꞉.

அவர்களுக்கு இஷ்டமானதைக் கொடுப்பதில் சீக்கிரகாரி ஆனவனுக்கு நமஸ்காரம்.

சஎஎ. தர்மகுபேநம꞉. தர்மகுபேநம꞉.

தன்னால் கொடுக்கப்படும் பொருள்கள் துர்விஷயத்தில் வீணாகாமல் அவைகளை விஹித கருமங்களில் அவர்கள் உபயோகிக்கச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

சஎஅ. தர்மக்ருதேநம꞉. தர்மக்ருதேநம꞉.

இந்தப்பிரகாரம் யாவரையும் தரும சம்பந்தமான எத்தனங்களைப் பண்ணச் செய்கிறவனானதால் தன்னுடைய அநுக்கிரக ரூபமான தருமத்தைச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

சஎகூ. தர்மிணேநம꞉. தர்மிணேநம꞉.

சாதாரணமான தருமங்களால் யாவரும் தன்னை அடையும்படியிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௪௮௦. అక్షరాయాసతే నమః. அக்ஷராயஸதேநம:.

எல்லாராலும் கொண்டாடப்பட்ட கர்மங்களாலே ஸாதிக்கப்படுமவனுக்கு நமஸ்காரம்.

ஸத் என்கிற சப்தம் நல்ல செயலைச் சொல்லுகிறதாகக் கீதையில் கூறியிருக்கிறது. ஸாதிக்கப்படுமவன் ஸத்தாகையாலே நல்லகருமங்களையும் ஸத்தெனப்பட்டது. இக்கருமங்கள் அக்ஷரமாகையாவது நழுவாமலிருக்கை.

௪௮௧. క్షరాయఅసతే నమః. க்ஷராய அஸதேநம:.

குரூரமான பாவங்களைச் செய்கிறவர்களுக்கு எப்பொழுதும் அளவற்ற துக்கங்களைக் கொடுத்து, அவர்களை நாசமடையச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஆநுகூல்லியங்களிலே அந்வயித்தவர்களைக் கொண்டு இவனே நல்ல கருமங்களைச் செய்வித்துச் சிரேஷ்டமான லோகங்களை அடையச் செய்கிறவன் என்றும் இவனே மிகவும் பாப பிராதி கூல்யத்தில் அந்வயித்தவர்களைக்கொண்டு கருமங்களைச் செய்வித்து அதனாலே அவர்கள் அதோகதி அடையச் செய்கிறவன் என்றும் வேதம் கூறுகின்றது.

௪௮௨. అవిజ్ఞాత్రే నమః. அவிஜ்ஞாத்ரேநம:.

சாதுக்களிடத்தில் அநந்தமான அபராதங்களைப் பார்த்தும், தண்டிக்காமல் க்ஷமிக்கிறவனாயிருப்பதுமல்லாமல் அவைகளை அறியாதவன் போலுமிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

பிரஜைகள் கடினவார்த்தைகளைப் பேசினாலும் தான் பிரதிசொல்லாதவர் என்றும், பிரபன்னர்களுடைய அபராதங்களை எண்ணாத குணம் உடையவர் என்றும் ஸ்ரீராமாயணத்தில் கூறி இருக்கின்றது.

௪௮௩. సహస్రాంశవే నమః. ஸஹஸ்ராம்ஶவேநம:.

அபரிமிதமான ஞானத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

ஆசிரிதர்களுடைய அபராதங்களில் தவிர குணங்களையறிவதில் சருவஞ்ஞன் என்று பிரமாணமிருக்கின்றது. ஆசிரிதர்களுடைய அபராதங்களைப் பார்க்கவேண்டும் என்கிற கருத்து இல்லாமல் அவைகளை உபேட்சை செய்வதனால் அவனுடைய சருவஞ்ஞத் தன்மைக்குக் குற்றம் அல்ல என்பது கருத்து.

௪௮௪. విధాత్రే నమః. விதாத்ரேநம:.

தன் பக்தர்களை யமன் தண்டிக்காதபடிக்கு அவனுக்கு நியமனம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

இவன் தோஷங்களைப் பொறுக்கிறவனென்றால் நல்லவர்கள்
பொல்லாதவர்களென்பதற்கு அடையாள மென்ன
வெனில் அதனைச்சொல்லுகின்றது.

சஅ௫. க்ருதலக்ஷணாயநமஃ. க்ருதலக்ஷணாயநமஃ.

தன்னிடத்தில் துவேஷம் இல்லாமையே நல்லவர்களுக்கு அடையாளமாகச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

மனத்தில் தன்னிடத்து அன்பு இல்லாவிடினும் அன்பை உடையவர்களைப் போலத் தன்னிடத்துக்கு வருவதே போதுமென்று ஸ்ரீ ராமர் திருவாய் மலர்ந்தருளினாரென்று ஸ்ரீ ராமாயணமும் ஸ்ரீ கிருஷ்ணன் துவாரகையை விட்டுப் போனபொழுது நான் வருமளவும் சக்கராங்கிதமுடையவர்கள் மாத்திரமே துவாரகையில் பிரவேசிக்கலாம் அது இல்லாதவர்கள் பிரவேசிக்கக்கூடாதென்று நியமனஞ் செய்தானென்று ஹரிவம்சமும் விஷ்ணுவிடத்தில் பிரிதி இருப்பதற்கு அடையாளமான சக்ரதாரணமில்லாமல் திரிகின்ற உங்களுக்கு ஞானம் உண்டாக இல்லை என்று விஷ்ணுதத்துவமும் வளையல் முதலான ஆபரணங்கள் பதிவிருதைக்கு அடையாளம் ஆகிறது போல விஷ்ணு பக்தர்களுக்கு சக்ராதிதாரணம் அடையாளமென்று புராணங்களும் கூறுகின்றன.

சஅசூ. கபஸ்திநேமயேநமஃ. கபஸ்திநேமயேநமஃ.

இப்படிப்பட்ட பக்தர்களை ரட்சிப்பதற்காகப் பிரகாசகரமான ஆயிரமுகங்களை யுடைய சக்கரத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

யமன் முதலானவர்களுக்கு ஹரிபக்தர்கள் அசாத்தியர்கள்
ஆதற்கு இன்னுமொரு காரணம் கூறுகின்றது.

சஅஎ. ஸத்வஸ்தாயநமஃ. ஸத்வஸ்தாயநமஃ.

யமன் கிட்டுவதற்கு ஹேதுவான பாவங்கள் போம்படிக்கு அவர்கள் மனத்தில் வாசம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

அநாதியானவனும் சங்கு சக்கரம் கதை முதலியவைகளைத் தரித்தவனுமாகிய பகவான் இருதயத்தில் இருப்பானானால் சூரியன் முன் அந்தகாரம் இராததுபோலப் பாவங்கள் இருக்கமாட்டாவென்று பிரமாணம் இருக்கின்றது.

௪௮௮. సింహాయనమః. ஸிம்ஹாயநம:.

இதை அறியாதவர்களாய் யமன் முதலானவர்கள் அவர்களைப் பலவந்தமாய் இழுப்பார்களாகில் அவர்களைத் தண்டிப்பதில் சிங்கம்போன்றிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஹரிபக்த்தனானவன் பாவங்கள் போனவனென்றும் அவனைக் கண்டால் தேவதைகள் பயம் அடைந்து நமஸ்கரிப்பார்களென்றும் யமனும் இப்படிப்பட்டவர்களைப் பார்த்தால் கைகூப்பிக்கொண்டு நமஸ்காரம் செய்வானென்றும் பக்தியினாலே வைஷ்ணவர்களை விஷ்ணுவைப்போலச் செவ்வையாய்ப் பூஜித்தவன் விஷ்ணுஸாமீப்யத்தை அடைவான் இதில் சந்தேகம் வேண்டியதில்லை யென்றும் புராணங்களும் ஹரியைக் கீர்த்திக்கிற பக்தர்களை லோகபிதாமகனான பிர்மா பார்த்து எதிர்கொண்டுவந்து விதியுக்தப்பிரகாரம் குசலப் பிரசனையுடன் பூசைசெய்தானென்று கௌசிகோபாக்கியானமும் நரகப்பிரஸ்தாபத்தில் ஹரி பாதப்பிரபன்னர்களுக்கு நரகங்கள் சுபாவமாய்த் தூரம் ஆகின்றனவென்றும் சர்வப்பிராணிகளுக்கும் பதியான ஹரிக்குப் பக்தர்களாயிருந்தால் அவர்களிடத்தில் தேவதைகளும் பயம் அடைவார்களென்றும் அவர்களை அவமானம் செய்பவர்கள் எப்படிப்பட்டவர்களாயிருந்தாலும் கிலேசத்தை அடைவார்களென்றும் விஷ்ணுதத்வமும் நரகத்திலே வேதனைப்படுகிறவர்களைப்பார்த்துச் சகலகிலேசத்தையும் பரிகரிக்கப்பட்ட கேசவனை நீங்கள் என் பூஜிக்கவில்லை யென்று யமன் கேட்டதாய் விஷ்ணுதர்மமும் கூறுகின்றன.

௪௮௯. భూతమహేశ్వరాయనమః. பூதமஹேஶ்வராயநம:.

பிராணிகளுக்கு எசமான்களாயிருக்கின்ற பிரமன் ருத்திரன் இந்திரன் யமன் முதலானவர்களுக்கும் நியாமகனாயிருக்கிறவனானதால் மேற்சொல்லியபடி பக்தர்களை ரக்ஷிப்பதில் சமர்த்தனானவனுக்கு நமஸ்காரம்.

௪௯0. ఆదిదేవాయనమః. ஆதிதேவாயநம:.

அந்தத் தேவதைகளுக்குக் காரணனும் அவர்களைத் திரஸ்கரிப்பதில் பிரதாபசாமர்த்தியமுள்ளவனுமானவனுக்கு நமஸ்காரம்.

௪௯௧. మహాదేవాయనమః. மஹாதேவாயநம:.

கிரீடைக்குச் சாதகமாகிய பந்துக்கள்போலிருக்கிற அவர்களுடன் கிரீடிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௪௯௨. దేవేశాయనమః. தேவேஶாயநம:.

அவர்களுக்குச் சுவாமியா யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௪௯௩. దేవభృతేనమః. தேவப்ருதேநம:.

அவர்களை எப்படி விநியோகிக்கவேண்டுமோ அவ்வாறு விநியோகிக்கத்தக்க சாமர்த்தியமுள்ளவனாய் அவர்களைத் தாங்குகிறவனுக்கு நமஸ்காரம்.

௪௯௪. గురవేనమః. குரவேநம:.

அவர்களுக்கு வேதங்களாலே தங்கள் தங்கள் அதிகாரங்களைப் போதிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

காலத்தாலும் தேசத்தாலும் வஸ்துவினாலும் அளவிடக் கூடாதவனென்றுமாம்.

௪௯௫. ఉత్తరాయనమః. உத்தராயநம:.

இந்தப்பிரகாரம் பிரமன் முதலானவர்களை ஆபத்திலிருந்து உத்தாரணம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

தேவதாகாரிய நிமித்தமாக நித்திரையில்லாமல் ஜாக்கிரதையாயிருக்குமவனென்றுமாம்.

௪௯௬. గోపతయేనమః. கோபதயேநம:.

அசேஷமான வேதம்முதலிய மொழிகளுக்கு நிர்வாஹனாயுள்ளவனுக்கு நமஸ்காரம்.

௪௯௭. గోప్త్రేనమః. கோப்த்ரேநம:.

இந்தப்பிரகாரம் ஸர்வவித்தைகளையும் பாலனம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௪௯௮. జ్ఞానగమ్యాయనమః. ஜ்ஞானகம்யாயநம:.

பிரமவித்தையென்று சொல்லப்படுகிற சமாதியினாலே அறியத்தக்கவனாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௪௯௯. పురాతనాయనమః. புராதநாயநம:.

இப்பொழுது மாத்திரமேயல்லாமல் பிரதிகற்பத்திலும் வித்தையைப் பிரகாசம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௦௦. శరీరభూతభృతేనమః. சரீரபூதப்ருதேநம:.

தனக்குச் சரீரங்களாயிருக்கின்ற பிராணி சமூகங்களைத் தாங்குகிறவனுக்கு நமஸ்காரம்.

௫௦௧. భోక్త్రేనమః. போக்த்ரேநம:.

தன்னால் விருத்திசெய்யப்பட்ட வேதவிஹிதமான கருமங்களை நடப்பிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௦௨. కపీన్ద్రాయనమః. கபீந்த்ராயநம꞉.

தான் ஸ்ரீ ராமமூர்த்தியாய் அவதாரம் செய்தகாலத்தில் தனக்கு ச் சகாயமாக வானர ரூபங்களை யடைந்த தேவதைகளுக்கு இந்திரனு யிருந்தவனுக்கு நமஸ்காரம்.

ஸர்வலோகேஸ்வரனுன தான் லோகங்களுக்கு இதம் செய்யவே ண்டுமென்கிற இச்சையினுலே வானரரூபங்களை யடைந்த ஸமஸ்த தேவ தைகளுடன் கூடினவனுய் இருந்தானென்று பிரமாணமிருக்கின்றது.

௫௦௩. భూరిదక్షిణాయనమః. பூரிதக்ஷிணாயநம꞉.

உலகத்தில் யாவரும் நல்லதருமங்களை ஆஸ்ரிக்கைக்காகத் தான் அசுவமேத முதலான யாகங்களைச் செய்து விஸ்தாரமாக தக்ஷிணைகளைக் கொடுத்தவனுக்கு நமஸ்காரம்.

௫௦௪. సోమపాయనమః. ஸோமபாயநம꞉.

அந்த யக்கியத்தில் ஸோமபானம் செய்தவனுக்கு நமஸ்காரம்.

௫௦௫. అమృతపాయనమః. அம்ருதபாயநம꞉.

ஹவிசினுடைய பரிணாமரூபமான அமிர்தத்தைத் தான் பானம் செய்து தான் அனுஷ்டித்ததைப் பின்செல்பவர்க்குச் சுவானுபவரூபமாகிற அமிர்தத்தைப் பரமபதத்தில் பானம் செய்விப்பவனுக்கு நமஸ்காரம்.

௫௦௬. సోమాయనమః. ஸோமாயநம꞉.

தனக்கும் தன்னை அனுபவிக்கிறவர்களுக்கும் அமிர்தம்போன் றிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

இங்குள்ள ஸோமசப்தம் அம்ருதத்தைச் சொல்லுகின்றது.

௫௦௭. పురుజితేనమః. புருஜிதேநம꞉.

சத்தியத்தினுலே லோகங்களையும் தானத்தினுலே ஏழைகளையும் பணிவிடையினுலே குருக்கள்மார்களையும் தனுசினுலே யுத்தத்தில் சத்துரு க்களையும் ஜயிக்கிறவனுனதால் பலவிதமான ஜயத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௦௮. పురుసత్తమాయనమః. புருஸத்தமாயநம꞉.

தன் குணங்களாகிய அமிர்த சமுத்திரத்தைப் பானம் செய்ய இச்சித்திருந்த அனுமான்முதலிய மகத்துக்களில் வாசஞ் செய்தவனுக்கு நமஸ்காரம்.

௫௦௯. వినయాయనమః. விநயாயநம:.

மாரீசன் முதலானவர்களைத் தன் பராக்கிரமத்தாலே நிக்கிரகித்தவனுக்கு நமஸ்காரம்.

௫௧௦. జయాయనమః. ஜயாயநம:.

தன்னை ஆஶ்ரயித்தவர்களாலே ஜயிக்கப்பட்டு அவர்களுக்கு விதேயன் ஆகிறவனுக்கு நமஸ்காரம்.

௫௧௧. సత్యసంధాయనమః. ஸத்யஸந்தாயநம:.

ஆஶ்ரிதர்களிடத்தில் சத்தியமான பிரதிஜ்ஞையை யுடையவனுக்கு நமஸ்காரம்.

நான் என்னுடைய பிராணனையாவது விடுவேன் உன்னையும் லட்சுமணனையும் விடுவேன். பிராமணர்களுக்குப் பிரதிஜ்ஞை செய்து தப்பமாட்டேனென்று ஸ்ரீ ராமமூர்த்தி சீதாபிராட்டியாருடன் கூறியதாக ஸ்ரீமத் ராமாயணத்தில் சொல்லியிருக்கிறது.

௫௧௨. దాశార్హాయనమః. தாஶார்ஹாயநம:.

தன்னிடத்தில் தங்கள் ஆத்துமாவைச் சமர்ப்பிக்கிற பக்த்தர்களுக்குத் தன்னைச் சமர்ப்பிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௧௩. సాత్వతాంపతయేనమః. ஸாத்வதாம்பதயேநம:.

பிரமவித்தையை அறியச் செய்வதாயும் சாத்துவிகமாயும் இராநின்ற சாஸ்திரமானது ஸாத்வதம் என்று சொல்லப்படுகின்றது. அதை உபதேசிக்கிற பாகவதர்களுக்குச் சுவாமியானவனுக்கு நமஸ்காரம்.

௫௧௪. జీవాయనమః. ஜீவாயநம:.

பாகவதர்களைத் தன் சேவையினாலே பிழைக்கச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௧௫. వినయితౄేనమః. விநயித்ரேநம:.

ராஜகுமாரனுக்குப் பிரியம் செய்வதுபோல அந்தப் பாகவதர்களுக்குப் பிரியத்தைச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௧௬. సాక్షిణేనమః.* ஸாக்ஷிணேநம:.

அந்தப் பாகவதர்களுடைய நடக்கைகளை அறிந்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௧௭. ముకుందాయనమః. முகுந்தாயநம:.

நாம் அவன் செய்வதைப் பார்த்திருப்பதொழிய நாமாகவே

கேட்கக்கூடாது என்கிற நினைவால் அவர்கள் பிரார்த்திக்காமல் இருந்த போதிலும் தானாகவே முக்தியைக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௧௮. అమితవిక్రమాయనమః. அமிதவிக்ரமாயநம꞉.

அவர்களுடைய தியானம் ஆராதனம் மனனங்களை நிறைவேற்றும்படியான அளவற்ற சக்தியை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௧௯. అంభోనిధయేనమః. அம்போநிதயேநம꞉.

பாதாள லோகத்திலே அகில ஜகங்களுக்கும் ஆதாரமாய் ஆசன ரூபமாயிருக்கின்ற ஆமை ரூபத்தினாலே ஜகங்களைத் தாங்குகிறவனுக்கு நமஸ்காரம்.

௫௨௦. అనన్తాత్మనేనమః. அநந்தாத்மநேநம꞉.

அந்த ஆமை ரூபத்தின் மீது ஜகங்களுக்கு ஆதார ஸ்தம்பத்தைப்போல ஆதிசேஷ ரூபமா யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௨௧. మహోదధిశయాయనమః. மஹோததிசயாயநம꞉.

அவன்தானே பிரளயகாலத்தில் அவ்வாதிசேஷனாகிய கட்டிலில் மஹாசமுத்திரத்தில் சயனித்துக்கொண்டிருப்பவனுக்கு நமஸ்காரம்.

௫௨௨. అన్తకాయనమః. அந்தகாயநம꞉.

எப்பொழுதும் எல்லாவற்றிற்கும் முடிவைச் செய்பவனுக்கு நமஸ்காரம்.

௫௨௩. అజాయనమః. அஜாயநம꞉.

பகவானைத் தியானம் செய்யும்பொழுது அவன் திருநாமமாகிய அகாரத்தினாலே தியானம் செய்யப்படுகையால் அகாரத்தினால் பிரகாசிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௨௪. మహార్హాయనమః. மஹார்ஹாயநம꞉.

ஆத்துமாவைச் சமர்ப்பணம் செய்து பூஜிக்கத்தக்கவனுக்கு நமஸ்காரம்.

௫௨௫. స్వాభావ్యాయనమః. ஸ்வாபா்வ்யாயநம꞉.

அன்பர்களால் சுவாமியாகப் பாவனை செய்யத்தக்கவனுக்கு நமஸ்காரம்.

தாங்கள் பகவானைச்சேர்ந்து கடைத்தேற எண்ணமுடையவர்களாகில் தங்களைத் தொண்டர்களாகவும் பகவானைச் சுவாமியாகவும் சிந்திக்கக் கடவர்களென்று பிரமாணமிருக்கின்றது.

௫௨௬. జితామిత్రాయనమః. ஜிதாமித்ராயநம ஃ.

இந்த ரகசியத்தைத் தெரிந்துகொள்வதற்கு விரோதிகளான அஹங்காரமமகார காமாதிகளைத் தன்னைக்கொண்டே அவர்கள் ஜயிக்கும்படி செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௨௭. ప్రమోదనాయనమః. ப்ரமோதநாயநம ஃ.

தான் சுவாமியென்று அறியும் அறிவு ஆத்மாக்களுக்குப் பிறந்தவுடன் அவ்வாத்துமாக்களுக்குப் புதையல் அகப்பட்டதுபோலச் சந்தோஷத்தை உண்டுபண்ணுகிறவனுக்கு நமஸ்காரம்.

௫௨௮. ఆనన్దాయనమః. ஆநந்தாயநம ஃ.

வேதமுதலானவைகளும் அறியக்கூடாத அளவற்ற ஆனந்தத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௨௯. నన్దనాయనమః. நந்தநாயநம ஃ.

இப்படிப்பட்ட ஆனந்தத்தை முக்திகாலத்தில் தன் பக்தர்களுக்கு உண்டாக்கிச் சந்தோஷிக்கச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௩௦. నన్దాయనమః. நந்தாயநம ஃ.

பக்தர்கள் தன்னிடம் வந்த பின்பு அனந்தமான போக்ய போக முதலியவைகளால் சமூர்த்தி செய்பவனுக்கு நமஸ்காரம்.

௫௩௧. సత్యధర్మణేనమః. ஸத்யதர்மணேநம ஃ.

இந்தப்பிரகாரம் ஆரம்பமுதல் தன்னைச் சேருமளவும் அந்தப் பக்தர்களிடத்தில் ஒரே விதமான செயலை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௩௨. త్రివిక్రమాయనమః. திரிவிக்ரமாயநம ஃ.

இப்படிப்பட்ட மகிமை யுடையவனென்று மூன்று வேதங்களாலும் சொல்லப்படுகிறவனுக்கு நமஸ்காரம்.

௫௩௩. మహర్షయేనమః. மஹர்ஷயேநம ஃ.

மேற்சொல்லிய மூன்று வேதங்களையும் உள்ளபடி அறிந்தவனுக்கு நமஸ்காரம்.

பகவான் ரிஷி ரூபமான கபிலாவதாரம் செய்து வேதார்த்தங்களான சாங்கிய சாஸ்திரத்தைச் செய்தாரென்று பிரமாணமிருக்கின்றது.

௫௩௪. కపిలాచార్యాయనమః. கபிலாசார்யாயநம ஃ.

கபில ரூபமாய் அவதரித்துச் சாஸ்திரத்தை உபதேசித்தவனுக்கு நமஸ்காரம்.

கபில ரூபத்தியானக் கிரமத்தில் புகை இல்லாத அக்கினியைப்போல நிறத்தை யுடையவரென்றும் சங்கம் பதுமம் பதுமமணிமாலே இவைகளைத் தரித்துக்கொண்டிருக்கிறவரென்றும் கூறி யிருக்கின்றது.

௫௩௫. కృతజ్ఞాయనమః. க்ருதஜ்ஞாயநம:.

சகரராஜனுடைய குமாரர்கள் அபராதம் செய்திருந்தாலும் அந்தச் சந்ததியானகிய அம்சுமான் செய்த வணக்கத்தைத் தனக்கு நன்றியாகக்கொண்டவனுக்கு நமஸ்காரம்.

௫௩௬. మేదినీపతయేనమః. மேதினீபதயேநம:.

கபில ரூபமா யிருந்துகொண்டு பூமியைத் தாங்குகிறபடியால் பூமிக்குச் சுவாமி யானவனுக்கு நமஸ்காரம்.

௫௩௭. త్రిపదాయనమః. த்ரிபதாயநம:.

போக்கியம் போக்திரு நியந்திரு (அசேதனம் சேதனம் ஈஸ்வரன்) என்கின்ற இந்த மூன்று தத்துவங்கள் உலகத்தில் உள்ளவைகளென்று அறிவிக்கத்தக்கதான மூன்று பாதங்களை யுடைய அந்தக் கபில ரூபி யானவனும் பின்னும் பருத்த மூன்று முசுப்புக்களை யுடையவராகரூபத்தை யுடையவனும் ஆனவனுக்கு நமஸ்காரம்.

௫௩௮. త్రిదశాధ్యక్షాయనమః. த்ரிதசாத்யக்ஷாயநம:.

வராக ரூபியான தானே பிரளயகாலத்தில் பிரமாதிகளுக்குச் சகாயமாயிருந்தவனனதால் அவர்களுக்கு நியாமகனனவனுக்கு நமஸ்காரம்.

௫௩௯. మహాశృంగాయనమః. மஹாஸ்ருங்காயநம:.

நுனியில் ஒட்டிய பூமண்டலத்தை யுடைய கோரைப்பல்லாகிய பெரிய கொம்பை யுடைத்தானவனுக்கு நமஸ்காரம்.

௫௪0. కృతాన్తకృతేనమః. க்ருதாந்தக்ருதேநம:.

யமனுக்குச் சமானமான இரணியாக்ஷனைச் சேதித்தவனுக்கு நமஸ்காரம்.

௫௪௧. మహావరాహాయనమః. மஹாவராஹாயநம:.

விகசிதபத்மங்களைப் போல நேத்திரங்களை யுடைய மஹாவராஹ ரூபமாய்த் தன்னுடைய பல்லில் ஒட்டிய கருங்குவளை இதழ்போலப் பூமியை எடுத்துக்கொண்டு நீல பருவதம்போல ரசாதலத்திலிருந்து மேலே வந்தவனுக்கு நமஸ்காரம்.

௫௪௨. 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌯𑌨𑌮𑌃. கோவிந்தாயநம꞉.

மஹா வராஹ அவதாரமெடுத்து நஷ்டமான பூமியைத் தேடிப்பின்பு அதை அடைந்ததினலே கோவிந்தனென்கின்ற பெயரை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௪௩. 𑌸𑍁𑌷𑍇𑌣𑌾𑌯𑌨𑌮𑌃. ஸுஷேணாயநம꞉.

சோபனகரமாயும் சுத்த சத்துவமயமாயும் இராநின்ற தேகத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௪௪. 𑌕𑌨𑌕𑌾𑌙𑍍𑌗𑌦𑌿𑌨𑍇𑌨𑌮𑌃. கநகாங்கதிநேநம꞉.

மேற்சொன்ன ரூபத்தின் செளந்தரியத்துக்கு அபிவிர்த்தி கரங்களாயிராநின்ற சுவர்ண மயமான தோள் வளைமுதலிய ஆபரணங்களை யணிந்தவனுக்கு நமஸ்காரம்.

௫௪௫. 𑌗𑍁𑌹𑍍𑌯𑌾𑌯𑌨𑌮𑌃. குஹ்யாயநம꞉.

இந்தப் பிரகாரம் உபநிஷத்துகளில் ரகசியமாய்ச் சொல்லப்பட்ட மேற் சொன்ன ரூபத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௪௬. 𑌗𑌭𑍀𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. கபீராயநம꞉.

அந்த ரூபத்தினல் பிரகாசிக்கப்பட்ட கம்பீரத் தன்மையை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௪௭. 𑌗𑌹𑌨𑌾𑌯𑌨𑌮𑌃. கஹநாயநம꞉.

ஆழம் காணக்கூடாததும் தெளிவுள்ளதும் உள்ளிருக்கும் பொருள்கள் நன்ருயறியலாம்படி யிருக்கிறதுமான சமுத்திரம்போன்றவனுக்கு நமஸ்காரம்.

௫௪௮. 𑌗𑍁𑌪𑍍𑌤𑌾𑌯𑌨𑌮𑌃. குப்தாயநம꞉.

தன் பிரபாவத்தை யறிந்த பூர்வ குருக்கள்மார்களாலே சாதாரணமாய் வெளியிடாமல் மறைக்கப்பட்டிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௪௯. 𑌚𑌕𑍍𑌰𑌗𑌦𑌾𑌧𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. சக்ரகதாதராயநம꞉.

மேற்சொன்ன ரூபத்துக்குத் தகுந்த ஆபரணங்களைப் போலத் திவ்வியமான சக்கரம் கதை முதலிய ஆயுதங்களை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௫௦. 𑌵𑍇𑌧𑌸𑍇𑌨𑌮𑌃. வேதஸேநம꞉.

இவ்விதமாக அந்தரங்க விபவங்களைச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௫௧. 𑌸𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑌾𑌯 𑌨𑌮𑌃. ஸ்வாங்காயநம:.

சாம்பிராச்சியாதிபத்தியத்திற்கு உரிய தனக்கு அசாதாரணமான அடையாளங்களாயிருக்கின்ற சத்திரம் சாமர முதலிய உபகரணங்களை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௫௨. 𑌅𑌜𑌿𑌤𑌾𑌯 𑌨𑌮𑌃. அஜிதாயநம:.

பிரகிருதி சம்பந்தமான உத்பத்தி முதலிய விகாரங்களில்லாமையால் அஜிதை யென்று சொல்லப்படுகின்ற சத்துவ ரூபமான பரமபதமாகிய பட்டணத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௫௩. 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌨𑌮𑌃. கிருஷ்ணாயநம:.

சுத்தசத்துவ மயமானவனும் மேகத்தைப்போலக் கறுத்தமனோஹரமான வர்ணத்தை யுடையவனும் ஆனவனுக்கு நமஸ்காரம்.

வராகமுதலிய அவதாரங்களிலுள்ள ரூபமும் இந்தச் சுத்தசத்துவ மயமான ரூபமென்று பிரமாண மிருக்கின்றது.

௫௫௪. 𑌦𑍃𑌢𑌾𑌯 𑌨𑌮𑌃. த்ருடாயநம:.

தியானம் செய்பவர்களை அனுக்கிரகிக்கைக்காக இந்த ரூபத்தினால்தானே வியூஹரூபமா யிருந்துகொண்டு பிரகாசிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௫௫. 𑌸𑌙𑍍𑌕𑌰𑍍𑌷𑌣𑌾𑌯 𑌨𑌮𑌃. சங்கர்ஷணாயநம:.

சங்கார காலத்தில் சித்துக்களையும் அசித்துக்களையும் தனக்குள் லயிக்கும்படி ஏககாலத்தில் இழுக்குமவனுக்கு நமஸ்காரம்.

௫௫௬. 𑌅𑌚𑍍𑌯𑍁𑌤𑌾𑌯 𑌨𑌮𑌃. அச்சுதாயநம:.

வியூஹ ரூபத்தில் உற்பத்தி நாசங்களை யுடைய பிரமன் உருத்திரன் இந்திரன் வருணன் முதலானவர்களுடன் இருந்தாலும் தன்னுடைய ஸ்தானத்தை விட்டு நழுவாமலிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௫௭. 𑌵𑌰𑍁𑌣𑌾𑌯 𑌨𑌮𑌃. வருணாயநம:.

தன்னால் சூழப்பட்டிருக்கிற ஆகாசம் சுவர்க்கம் பூமி இவைகளை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௫௮. 𑌵𑌾𑌰𑍁𑌣𑌾𑌯 𑌨𑌮𑌃. வாருணாயநம:.

தன்னைச் சுவாமியாகப் பிரார்த்திக்கும்படி யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ருருக. వృక్షాయనమః. வ்ருக்ஷாயநம:.

ஆஸ்ரிதர்களுக்கு நிழலுள்ள தருவைப்போலத் தானே ஜீவனமாயும் அவர்கள் செய்யும் ஸமஸ்த அபராதங்களாகிற உபத்திரவங்களையும் சகிக்கிற விருக்ஷமாயும் இருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

சாதுக்களுக்கு நிவாசவிருக்ஷமாயும் துயர் அடைந்தவர்களுக்குப் பரகதியாயும் இருக்கிறவனென்று பிரமாண மிருக்கின்றது.

ருசா0. పుష్కరాక్షాయనమః. புஷ்கராக்ஷாயநம:.

அவர்களுக்கும் அநுக்கிரகத்தை வருஷிக்கிறதினால் போஷகங்களாயிருக்கின்ற நேத்திரங்களை யுடையவனுக்கு நமஸ்காரம்.

ருசாக. మహామనసేనమః. மஹாமநஸேநம:.

ஆஸ்ரிதர்களிடத்தில் இவ்வளவு என்று அறியக்கூடாதபடியிருந்த பிரீதி யுள்ள மனத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

ருசாஉ. భగవతేనమః. பகவதேநம:.

இந்தப் பிரகாரம் ஸமஸ்த தோஷங்களும் அற்ற மங்கள ரூபனானதால் எல்லாராலும் பூஜிக்கத்தக்கவனுக்கு நமஸ்காரம்.

ருசாந. భగఘ్నేనమః. பகக்நேநம:.

அப்படியே ஆறு குணங்களை யுடையவனாய்ப் பூஜ்ஜியன் ஆனவனுக்கு நமஸ்காரம்.

ருசாச. నన్దినేనమః. நந்திநேநம:.

பலபத்திர அவதாரத்தில் நந்தகோபனைப் பிதாவாக வுடையவனுக்கு நமஸ்காரம்

ருசாரு. వనమాలినేనమః. வநமாலிநேநம:.

ப்ரகிருதியினுடைய பரிமளத்துக்கு அபிமான தேவதையாயிருக்கின்ற வைஜயந்திமாலையை எப்பொழுதுமுடையவனுக்கு நமஸ்காரம்.

ருசாசா. హలాయుధాయనమః. ஹலாயுதாயநம:.

மேற்சொன்ன ப்ரகிருதியின் வேறுபாடான பூமியை உழுகிறபொழுது கீர்த்தனம் செய்யத் தக்கவனாய்க் கலப்பையை ஆயுதமாக வுடைய பலபத்திர சொரூபனானவனுக்கு நமஸ்காரம்.

சமூர்த்தி ஆதற்கு ஏர் உழும்போது பலபத்திரனைக் கீர்த்தனம் செய்யவேண்டியதென்று பிரமாண மிருக்கின்றது.

ருசுஎ. ആദിത്യായനമഃ. ஆதித்யாயநம:.

தனக்குத் திருநாமமாகிய அ என்கிற அக்ஷரத்தை உச்சரிக்கிறதினலே அடையத் தக்கவனுக்கு நமஸ்காரம்.

ருசுஅ. ജ്യോതിരാദിത്യായനമഃ. ஜ்யோதிராதித்யாயநம:.

திவ்வியனயும் ஐஸ்வரியத்தைக் காட்டத்தக்க ஜோதி ரூபத்தையுடையவனயும் இருக்கின்றமையால் நூதன சூரியன் போன்றவனுக்கு நமஸ்காரம்.

ருசுகூ. സഹിഷ്ണവേനമഃ. ஸஹிஷ்ணவேநம:.

தனக்கும் சிவனுக்கும் யுத்தம் நடந்தபொழுது அந்த யுத்தத்தில் சிவனுடைய அபராதத்தைச் சகித்துக்கொண்டவனுக்கு நமஸ்காரம்.

நாரணீயம் என்கின்ற சாஸ்திரத்தில் இந்தக் கதை சொல்லி யிருக்கின்றது.

ருஎ0. ഗതിസത്തമായനമഃ. கதிஸத்தமாயநம:.

பரம தருமத்தை அறிய இச்சித்தவர்களுக்குத் தான் தேசிகனய் அந்தப் பரம தருமத்தை உபதேசித்தவனுக்கு நமஸ்காரம்.

ருஎக. സുധന്വനേനമഃ. ஸு—தந்விநேநம:.

சுரர்களும் அசுரர்களும் அமிர்த நிமித்தமாகச் செய்த யுத்தத்தில் சம்ஹார வில்லை யுடையவனயிருந்தவனுக்கு நமஸ்காரம்.

ருஎஉ. ഖണ്ഡപരശവേനമഃ. கண்டபரஶவேநம:.

ருத்திரனேடு யுத்தஞ் செய்து பிரயோகித்து முரிந்த பரசை யுடையவனுக்கு நமஸ்காரம்.

ருஎங. ദാരുണായനമഃ. தாருணாயநம:.

இந்தப்பிரகாரம் உள்ளும் புறம்புமான சத்துருக்களைப் பிளக்குமவனுக்கு நமஸ்காரம்.

ருஎச. ദ്രവിണപ്രദായനമഃ. த்ரவிணப்ரதாயநம:.

ஸமஸ்த சாஸ்திர ரூபமாயும் அவைகளின் பொருள் ரூபமாயும் இராநின்ற தனத்தைக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ருஎரு. ദിവിസ്പൃശേനമഃ. திவிஸ்ப்ருஶேநம:.

பரமபதத்திலிருக்கிற தன்னுடைய உண்மையைப் பிரமவித்தையினலே ஏகாந்தமாய் அறிவிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௭௬. 𑌸𑌰𑍍𑌵𑌦𑍃𑌶𑍇𑌨𑌮𑌃. ஸர்வத்ருஶேநம:.

அன்னியமான ஸர்வ வைபவத்தையும் பார்க்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௭௭. 𑌵𑍍𑌯𑌾𑌸𑌾𑌯𑌨𑌮𑌃. வ்யாஸாயநம:.

யுகானுசாரமாய் ஞானங்களைச் சிரமம் இல்லாமல் போதிக்க வேதத்தை நான்காகப் பிரித்ததனால் வியாஸன் என்கின்ற திருநாமத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௭௮. 𑌵𑌾𑌚𑌸𑍍𑌪𑌤𑌯𑍇𑌨𑌮𑌃. வாசஸ்பதயேநம:.

ஐந்தாம் வேதமாகிய பாரதத்தைச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

௫௭௯. 𑌅𑌯𑍋𑌨𑌿𑌜𑌾𑌯𑌨𑌮𑌃. அயோநிஜாயநம:.

ஸாரஸ்வதாவதாரத்தில் யோனி சம்பந்தம் இல்லாமல் பிரம்ஹாவினுடைய வாக்கினாலே உண்டானவனுக்கு நமஸ்காரம்.

௫௮0. 𑌤𑍍𑌰𑌿𑌸𑌾𑌮𑍍𑌨𑍇𑌨𑌮𑌃. த்ரிஸாம்நேநம:.

தன்னைக் கானம் செய்யத்தக்க ப்ரஹத்-ரதந்த்ரம்-வாமதேவ்யம் என்கின்ற மூன்றுவிதமான சாமவேதத்தின் பிரிவுகளை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௫௮௧. 𑌸𑌾𑌮𑌗𑌾𑌯𑌨𑌮𑌃. ஸாமகாயநம:.

தானும் ஸ்வானுபவப் பிரீதியினாலே அப்படிப்பட்ட சாமவேதத்தைக் கானம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௮௨. 𑌸𑌾𑌮𑍍𑌨𑍇𑌨𑌮𑌃. ஸாம்நேநம:.

தன்னைக் கானம் செய்பவர்களுக்கு அந்தக் கான அமிர்தத்தை மென்மேலும் பானம் செய்ய இச்சை யுண்டாகச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௮௩. 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌯𑌨𑌮𑌃. நிர்வாணாயநம:.

முக்தராய்த் தன்னை யடைந்தவர்களுக்கு அவர்கள் முன் சமுசாரத்திற் பட்ட வெப்பத்தைப் போக்கிச் சாந்தி யடையச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௫௮௪. 𑌭𑍇𑌷𑌜𑌾𑌯𑌨𑌮𑌃. பேஷஜாயநம:.

ஆகையால் போக்க வொண்ணாத சமுசார வியாதிக்கும் பரம ஔஷதம் ஆகிறவனுக்கு நமஸ்காரம்.

ருஷி கணங்களும் சித்தர்களும் உரகர்களும் தேவர்களும் தேவருஷிகளும் நாராயணனைத் துக்கத்துக்கு ஔஷதமாக அறிகிறார்கள் என்று ஸ்தவராஜத்தில் கூறியிருக்கின்றது.

ருஅரு. భిషజేనమః. பிஷஜேநம:.

நன்றாய்க் காரணத்தை அறிந்து சிகிச்சை செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

ருஅசு. సన్న్యాసకృతేనమః. ஸந்நியாஸக்ருதேநம:.

சாத்விகமான சந்நியாசத்தை உண்டாக்கி ராஜச தாமசகுணங்களைச் சேதிக்கிறவனுக்கு நமஸ்காரம். சன்னியர்சமாவது தன்பாரத்தைப் பகவானிடத்தில் வைத்து அவனே ரக்ஷணம் செய்யவேண்டுமென்கிற நினைவு.

ருஅஎ. శమాయనమః. ஶமாயநம:.

இச்சை பயம் குரோதம் இவைகளைச் சாந்தி செய்யும் உபாயத்தைச் சொன்னவனுக்கு நமஸ்காரம்.

ருஅஅ. శాన్తాయనమః. ஶாந்தாயநம:.

அகங்காரத்துக்கு ஹேதுவான அளவற்ற பிரபாவத்தை யுடையவனாயிருந்தாலும் அலை யற்ற சமுத்திரம்போலச் சாந்தி யடைந்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ருஅகூ. నిష్ఠాయైనమః. நிஷ்டாயைநம:.

தங்கள் மனத்தை ஒரு நிலையாக நிறுத்தும் பக்தர்களாலே தியானம் செய்யப்படுகிறவனுக்கு நமஸ்காரம்.

ருகூ0. శాన్త్యైనమః. ஶாந்தயேநம:.

தன்னைத் தியானம் செய்யும்பொழுது அன்னியங்களான செயல்களை யெல்லாம் மறக்கச்செய்து சாந்தி யடையச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

ருகூக. పరాయణాయనమః. பராயணாயநம:.

தியானம் செய்கிறவர்களுக்குத் தன்னை யடைதற்குத் தப்பாத உபாயமான பக்தியை மென்மேலும் வளரச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

ருகூஉ. శుభాఙ్గాయనమః. சுபாங்காயநம:.

இந்தப்பிரகாரம் தன்னுடைய பக்தி பாவனையினாலே சுபங்களான இயமமுதல் சமாதிவரையிலுள்ள அஷ்டாங்கங்களைத் தானே செய்விக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ருகூங. శాన్తిదాయనమః. ஶாந்திதாயநம:.

இந்தப் பிரகாரம் பக்தி யுண்டானவர்களுக்கு அனுதியாயுள்ள சமுசார உபத்திரவத்தை நிர்மூலம்செய்து தன்னுடைய அனுபவரூபமான சாந்தியைக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ருகூச. స్రష్ట్రేనమః. ஸ்ரஷ்ட்ரேநம:.

மேற்சொல்லிய முமூட்சுகள் தவிர சிருஷ்டிக்கத்தக்க மற்றவர்களை விஸ்தாரமாயும் புராதனமாயும் இருக்கின்ற விசித்திரங்களான கருமங்களுக்குத்தக்க உபகரணங்களாலே சேர்த்துச் சிருஷ்டி செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

ருகூரு. కుముదాయనమః. குமுதாயநம:.

இந்தப்பிரகாரம் சிருஷ்டிசெய்து அந்தச் சிருஷ்டியிலே தாரதம்மியங்களுள்ள ஸப்த ஸ்பரிசமுதலிய போகங்களை யுடைய பூமியிலே ஸமஸ்த ஸமுசாரிகளையும் போகிக்கச் செய்து தான் சந்தோஷிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ருகூகூ. కువలేశయాయనమః. குவலேஶயாயநம:.

இந்தப் பூமியில் ஸமுசாரத்தில் சுழலுகிறவர்களாயும் தங்கள் தேகம் இந்திரிய முதலியவைகளுக்குத் தாங்களே நியாமகர்களாயும் எண்ணியிருக்கின்ற ஜீவர்களை நியமனம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

ருகூஎ. గోహితాయనమః. கோஹிதாயநம:.

சமுசார கருமங்களாகிய விதைகளை விதைப்பதற்கு க்ஷேத்திரமா யிராநின்ற பூமிக்கு இதமான எற்பாடுகளைச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

ருகூஅ. గోపతయేనమః. கோபதயேநம:.

போகபூமியான சுவர்க்கத்துக்கும் பதியானவனுக்கு நமஸ்காரம்.

ருகூகூ. గోప్త్రేనమః. கோப்த்ரேநம:.

அந்தக் கருமபல சக்கிரத்துக்கு ரக்ஷகனுயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

சு00. వృషభాక్షాయనమః. வ்ருஷபாக்ஷாயநம:.

பலத்தை வருஷிக்கிற கருமங்களைச் சமுசார சக்கரத்திற்கு அச்சாகச் செய்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

சு0க. వృషప్రియాయనమః. வ்ருஷப்ரியாயநம:.

இந்தப் பிரகாரம் பிரவர்த்தக நிவர்த்தக தருமங்களிரண்டையும் பிரியமாகவுடையவனுக்கு நமஸ்காரம்.

சு0உ. అనివర్తినేనమః. அநிவர்த்திநேநம:.

பிரவர்த்தி தருமத்தில் ஆசக்தி யுள்ளவர்களை அதின் பலனை அனுபவிக்க மேல் லோகங்களுக்குப் போகச்செய்து மறுபடியும் இங்குவரும்படிக்குச் செய்கின்றபடியால் அவர்களுக்குச் சமுசாரத்தின் ஒழிவில்லாமற் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௬௦௩. నివృత్తాత్మనేనమః. நிவ்ருத்தாத்மனேநம:.

நிவர்த்தி தருமபரானைத் தன் உயிராக உடையவனுக்கு நமஸ்காரம்.

௬௦௪. సంక్షేప్త్రేనమః. ஸம்க்ஷேப்த்ரேநம:.

அந்தப் பிரவர்த்தி தருமபராளுக்குச் சுபாவ சித்தமான ஞானத்தைப் பரவச் செய்யாமல் சுருங்கச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௬௦௫. క్షేమకృతేనమః. க்ஷேமக்ருதேநம:.

நிவர்த்தி தருமபராளுக்கு அந்த ஞானத்தின் சுருக்கத்தைப் போக்கி எல்லாவற்றையு மறியும்படி க்ஷேமத்தைச் செய்பவனுக்கு நமஸ்காரம்.

௬௦௬. శివాయనమః. சிவாயநம:.

இந்தப் பிரகாரம் கரும பலத்தை அபேக்ஷிக்கிறவர்களுக்கும் முமுட்சுகளுக்கும் அவரவர்களுக்குத் தகுந்தபடி சுபகரனானவனுக்கு நமஸ்காரம்.

௬௦௭. శ్రీవత్సవక్షసేనమః. ஸ்ரீவத்ஸவக்ஷஸேநம:.

ஈஸ்வர னென்பதைக் காட்டத்தக்கதும் லக்ஷ்மீ நாயகனென்பதற்கு அடையாளமானதுமாகிய ஸ்ரீ வத்ஸமென்னும் மறுவை மார்பிலுடையவனுக்கு நமஸ்காரம்.

௬௦௮. శ్రీవాసాయనమః. ஸ்ரீவாஸாயநம:.

அந்த ஸ்ரீவத்ஸத்தினாலே அறியப்படும் லக்ஷ்மி சம்பந்தத்தைச் சொல்லுகின்றது.

லக்ஷ்மி நித்தியமும் யதேச்சையாய் விளையாட யோக்யமான கற்பகவிருக்ஷங்களையுடைய வனத்துக்குச் சமானமானவனுக்கு நமஸ்காரம்.

௬௦௯. శ్రీపతయేనమః. ஸ்ரீபதயேநம:.

அந்தலக்ஷ்மி எப்பொழுதும் ஆசைப்படுதற்கு அவளுக்கு அநுகுணமான பதியானவனுக்கு நமஸ்காரம்.

௬௧௦. శ్రీమతాంవరాయనమః. ஸ்ரீமதாம்வராயநம:.

ஆகையால் ஸ்ரீமான்களிலே சிரேஷ்டனானவனுக்கு நமஸ்காரம்.

௬௧௧. శ్రీదాయనమః. ஸ்ரீதாயநம:.

நித்தியமானதும் நூதனமானதுமான தன் அனுபவ ரூபமாகிய சம்பத்தை அந்த லக்ஷ்மிக்குக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௬௧௨. ஶ்ரீஶாய நம:. ஸ்ரீஶாயநம:.

லக்ஷ்மிக்கு இவ்வளவு பிரபாவம் உண்டாகும்படி தான் அவளுக்குப்பதியாயும் தன் இஷ்டத்தினால் அவள் நினைவின்படி செய்பவனாயுமிருப்பவனுக்கு நமஸ்காரம்.

௬௧௩. ஶ்ரீநிவாஸாய நம:. ஸ்ரீநிவாஸாயநம:.

லக்ஷ்மியாகிய திவ்வியமானகொடிக்கு ஆஸ்ரயமான கற்பக விருக்ஷத்தைப்போ லிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௬௧௪. ஶ்ரீநிதயே நம:. ஸ்ரீநிதயேநம:.

பெட்டியில் வைக்கப்படுகிற ரத்தின மஞ்சரியைப்போல் லக்ஷ்மியைத் தன்னிடத்தில் வைத்துக்கொண்டிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௬௧௫. ஶ்ரீவிபாவனாய நம:. ஸ்ரீவிபாவநாயநம:.

அவளாலே தான் பிரசித்தியடைந்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௬௧௬. ஶ்ரீதராய நம:. ஸ்ரீதராயநம:.

ரத்தினம் காந்தியையும் புஷ்பம்வாசனையையும் சந்திரன் நிலவையும் அமிர்தம் இனிப்பையும் தரித்திருக்கிறதுபோலச் சுபாவசம்பந்தத்தினாலே அந்த லக்ஷ்மியைத் தரித்துக்கொண்டிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௬௧௭. ஶ்ரீகராய நம:. ஸ்ரீகராயநம:.

அந்த லக்ஷ்மியைப் பரமபதத்தில் எப்படியோ அப்படியே வியூஹங்களிலும் அவதாரங்களிலும் தனக்குத்தகுந்தபடி அவதரிக்கச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௬௧௮. ஶ்ரேய:ஶ்ரீமதே நம:. ஶ்ரேயஸ்ரீமதேநம:.

சுககரமான ஸர்வ புருஷார்த்தங்களுக்கும் ஆஸ்ரயமான லக்ஷ்மியினுடைய நித்திய சம்பந்தத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

ஜனகனுடைய குமாரத்தியாகிய ஜானகி ஒருத்தியே பிரபன்னர்களை ஸம்ரக்ஷிக்கவும் மகத்தானபயத்தைப் பரிகரிக்கவும் போதுமென்று ஸ்ரீராமாயணமும் சரீராரோக்கியம் ஐசுவரியம் சத்துருக்ஷயம் சுகம் முதலியவைகள் ஓ தேவிஉன் திருஷ்டியினாலே பார்க்கப்பட்ட புருஷர்களுக்கு உண்டாவதில் சமுசயமில்லையென்று விஷ்ணுபுராணமும் கூறுகின்றன.

௬௧௯. லோகத்ரயாஶ்ரயாய நம:. லோகத்ரயாஸ்ரயாயநம:.

லோக மாதாவாயிருக்கிற அந்த லக்ஷ்மியோடு கூடிய தான்பிதாவாய்ச் சகலருக்கும் ஆஸ்ரயனாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஸர்வலோகத்திற்கும் லக்ஷ்மி தாயென்றும் ஹரி தகப்பனென்றும் ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் கூறியிருக்கின்றது.

௬௨௦. స్వక్షాయనమః. ஸ்வக்ஷாயநம:.

அந்த லக்ஷ்மியினுடைய செளந்தரியமாகிய அமிர்த சமுத்திரத்தின் கரையைக்கண்ட திவ்விய நேத்திரங்களையுடையவனுக்கு நமஸ்காரம்.

௬௨௧. స్వంగాయనమః. ஸ்வங்காயநம:.

லக்ஷ்மியும் ஆசைப்படைத்தக்கதேகத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௬௨௨. శతానన్దాయనమః. ஶதாநந்தாயநம:.

ஒருவருக்கொருவர் அன்பின் பிரவாகத்தினால் விளையும் அபரிமிதமான ஆனந்தத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௬௨௩. నన్దయేనమః. நந்தயேநம:.

இந்தப்பிரகாரம் எப்பொழுதும் எங்கும் எல்லாப்பிரகாரத்திலும் அந்த லக்ஷ்மியினாலே அபிவிர்த்தியடைந்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௬௨௪. జ్యోతిర్గణేశ్వరాయనమః. ஜ்யோதிர்கணேஶ்வராயநம:.

இருவருக்கும் அநுகூலர்களாயும் எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருக்கிற பரிகரங்களாயுமிருக்கின்ற ஆதிசேஷன் முதலான நித்தியசூரிகள் சமூகத்தினாலே சேவிக்கப்பட்டவனுக்கு நமஸ்காரம்.

௬௨௫. విజితాత్మనేనమః. விஜிதாத்மநேநம:.

லக்ஷ்மியும் ஆசைப்படும்படியான பிரபாவத்தை யுடையவனாயிருந்தாலும் தன்னை அடுத்தவர்களிடத்தில் வணங்கின மனத்தையுடையவனுக்கு நமஸ்காரம்.

௬௨௬. విధేయాత్మనేనమః. விதேயாத்மநேநம:.

ஆஶ்ரிதர்களுக்கு விதேயமாய் அங்கேபோ இங்கே நில்லு இங்கே இரு இதைச்சாப்பிடு என்று விதிக்கிறதற்கு யோக்கியமான சொரூபத்தையுடையவனுக்கு நமஸ்காரம்.

௬௨௭. సత్కీర్తయేనమః. ஸத்கீர்த்தயேநம:.

இப்படிப்பட்ட ஸௌசீல்யமிருப்பதினால் மகத்தான கீர்த்தியையுடையவனுக்கு நமஸ்காரம்.

௯௨௮. 𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌾𑌯𑌨𑌮𑌃. சிந்நஸம்ஸயாயநம:.

இந்தப்பிரகாரம் தன்னுடைய சௌசீல்ய ப்ரசித்தியினலே இவனை நாம் அறியலாமோ அறியக்கூடாதோ சாதிக்கலாமோ சாதிக்கக்கூடாதோ கிட்டலாமோ கிட்டக்கூடாதோ என்கிற சமுசயங்களைச் சேதிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

இதுமுதல் அர்ச்சாவதார விஷயத்தைச் சொல்லுகின்றது.

௯௨௯. 𑌉𑌦𑍀𑌰𑍍𑌣𑌾𑌯𑌨𑌮𑌃. உதீர்ணயநம:.

சர்மநேத்திரங்களை யுடையவர்களுக்கும் பிரத்தியக்ஷயோக்கியனாய் விளங்குகிறவனுக்கு நமஸ்காரம்.

௯௩0. 𑌸𑌰𑍍𑌵𑌤𑌶𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑍇𑌨𑌮𑌃. ஸர்வதச்சக்ஷுஷேநம:.

ஆகையால் நம்போல்வாருடைய நேத்திரங்களும் தன்னைச் சாட்சாத்கரிக்கச் சாமர்த்தியம் உள்ளவைகளாய்ச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௩௧. 𑌅𑌨𑍀𑌶𑌾𑌯𑌨𑌮𑌃. அநீஸாயநம:.

தன்னை ஆராதனம் செய்கிறவர்களிடத்தில் பரதந்திரனாய் ஸ்நானம் வஸ்திரதாரணம் புஷ்பதாரணம் கோஷ்டி முதலான எல்லாச் செயல்களிலும் அவர்கள் அதீனமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௩௨. 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌸𑍍𑌥𑌿𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. ஸாஸ்வதஸ்திராயநம:.

எப்பொழுதும் அவர்களை விட்டுப் பிரியாமலிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௩௩. 𑌭𑍂𑌶𑌯𑌾𑌯𑌨𑌮𑌃. பூஸயாயநம:.

ஸ்வயம் வ்யக்தம் என்றும் சித்தம் என்றும் மானுஷம் என்றும் சொல்லுகின்ற திவ்விய தேசங்களில் அங்குள்ளவர்களை அனுக்கிரகம் செய்கிற சுகத்தினல் சயனம்பண்ணுமவனுக்கு நமஸ்காரம்.

௯௩௪. 𑌭𑍂𑌷𑌣𑌾𑌯𑌨𑌮𑌃. பூஷணயநம:.

இந்தப்பிரகாரம் ஸமஸ்த ஜனங்களுக்கும் பிரியமான சீலத்தைத் தனக்குப் பூஷணமாய்ச் செய்து கொண்டிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௩௫. 𑌭𑍂𑌤𑌯𑍇𑌨𑌮𑌃. பூதயேநம:.

அவர்களுக்குப் பிள்ளை பசு சிநேகிதர் முதலானவைகளைப் போலத்தான் ஐஸ்வரியமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௬௫௬. విశోకాయనమః. விஶோகாயநம:.

ஒன்றும் இல்லாதவனாகிய ஒருவன் தனக்குள்ளதைக் கொண்டு ஆராதனம் செய்தால் அவனிடத்திலும் சந்தோஷத்தைச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௬௫௭. శోకనాశనాయనమః. ஶோகநாஶநாயநம:.

அவர்கள் சோகத்தைத் தன்னுடைய சம்பந்தத்தினால் நாசம் செய்பவனுக்கு நமஸ்காரம்.

௬௫௮. అర్చిష్మతేనమః. அர்ச்சிஷ்மதேநம:.

தான்மறைந்த பிரபாவத்தை யுடையவனாயிருந்து கொண்டு அவர்களுடைய புறம்பும் உள்ளுமான நேத்திரங்களைத் திறக்கும்படி செய்யச் சாமர்த்தியமுள்ள திவ்விய தேஜஸ்ஸினுடைய அதிசயத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்,

௬௫௯. అర్చితాయనమః. அர்ச்சிதாயநம:.

அர்ச்சாவதாரமாகிறவனுக்கு நமஸ்காரம்.

இந்த அர்ச்சாவதாரமானது பரவியூகங்களைப் போலத் தூரமாயிராமலும் ராமகிருஷ்ணாதி விபவாவதாரங்களைப் போலத் தேசகாலாதிகாரி நியமங்களுக்கு உட்படாமலும், யாவர்கண்களுக்கும் விஷயமாம்படி கோயில்களிலும் கிருகங்களிலும் எழுந்தருளியிருக்கும் நிலை. அலர்ந்தமுகத்தையும் பார்வையையும் நல்ல ரூபத்தையுமுள்ளதாய்த்தங்களுக்குப் பிரீதிகரமாயிருக்கும்படி விஷ்ணுரூபத்தைச் சுவர்ணத்தினாலேனும் வெள்ளியினாலேனும் செய்து அதையே பூஜிக்கத்தக்கது அதையே நமஸ்கரிக்கத்தக்கது அதையே சிந்திக்கத்தக்கதென்று வைஷ்ணவ தர்மத்தில் கூறியிருக்கிறது.

௬௬0. కుంభాయనమః. கும்பாயநம:.

அந்த அர்ச்சையில் தன்னுடைய சௌந்தரியாதிகளால் எல்லாரும் ஆசைப்படும்படி செய்கிறவனும் பின்னும் திவ்விய தேச முதலான இடங்களில் தியானம் ஆராதனம் வாஸம் ஜனனம் மரணம் முதலிய சொற்ப சம்பந்தமுடையவர்களுக்கும் யமதூதர்களுடைய பயத்தைப் பரிகரிக்கிற மகா பிரபாவத்தினாலே பிரகாசிக்கிறவனும் ஆனவனுக்கு நமஸ்காரம்.

௬௬௧. విశుద్ధాత్మనేనమః. விசுத்தாத்மநேநம:.

இந்தப்பிரகாரம் ஸமஸ்த ஆஸ்ரிதர்கள் விஷயத்திலும் தன்னுடைய சகல சொத்தையும் அவர்கள் அதீனம் ஆக்குகையால் பரிசுத்தமான மனத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

சுசஉ. విశోధనాయనమః. விசோதநாயநமஃ.

அந்த க்ஷேத்திரங்களில் தேகத்தை விட்டவர்களைத் தன்னை யடையும்படி பரிசுத்தர்களாகச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

வியூஹ விபவ ரூபங்களான பகவான் க்ஷேத்திர விசேஷங்களில் அர்ச்சா ரூபமாயிருக்கிறன் என்பதைச் சொல்லுகின்றது.

சுசஙு. అనిరుద్ధాయనమః. அநிருத்தாயநமஃ.

அநிருத்த ரூபனான தான் ஜநார்த்தனன் என்கின்ற பெயரை யுடையவனாய் வாஸுபாண்டம் என்கின்ற பூமியின் பாகத்தில் அர்ச்சையில் பிரத்தியட்சமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

சுசச. అప్రతిరథాయనమః. அப்ரதிரதாயநமஃ.

அவன் சத்துருக்களைச் சங்கரிக்கிறவனானதால் விரோதிகள் இல்லாதவனுக்கு நமஸ்காரம்.

சுசரு. ప్రద్యుమ్నాయనమః. ப்ரத்யும்நாயநமஃ.

தன்னைப் பிரகாசம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

சுசசு. అమితవిక్రమాయనమః. அமிதவிக்ரமாயநமஃ.

திரிவிக்கிரமனாய் மூன்று லோகங்களிலும் அடங்காத பராக்கிரமத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

சுசஎ. కాలనేమినిఘ్నేనమః. காலநேமிநிக்நேநமஃ.

இந்த க்ஷேத்திரங்களில் இருந்துகொண்டு கலி தோஷத்தைப் பரிகாரம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கால சக்கரத்தின் பாரத்தைத் தாங்கிக்கொண்டு இருக்கிற இருசாகிய அவித்தையைத் தன்னைத் தியானம் செய்கிறவர்களுக்குப் போக்குகிறனென்று பிரமாணமிருக்கிறது.

சுசஅ. శౌరయేనమః. சௌரயேநமஃ.

கிருஷ்ணாரணிய க்ஷேத்திரத்தில் கிருஷ்ண ரூபமாய் சௌரியென்கின்ற பெயரை யுடையவனாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

சுசகூ. శూరాయనమః. சூராயநமஃ.

சித்திர கூடம் என்கின்ற க்ஷேத்திரத்தில் ராக்ஷசர்களை நாசஞ் செய்யும் சௌரியமுடைய ஸ்ரீராம ரூபியாயிருந்தவனுக்கு நமஸ்காரம்.

௩௫௦. శూరజనేశ్వరాయనమః. சூரஜநேஸ்வராயநம:.

இப்படிப்பட்ட சௌரியம் உடையவனுகையால் சூரர்களான ஜனங்களையடக்கி ஆண்டவனுக்கு நமஸ்காரம்.

௩௫௧. త్రిలోకాత్మనేనమః. திரிலோகாத்மநேநம:.

பக்தர்களுக்கு அநுக்கிரகம் செய்வதற்காக மூன்று லோகங்களிலும் நிரந்தரம் சஞ்சாரஞ்செய்பவனுக்கு நமஸ்காரம்.

௩௫௨. త్రిలోకేశాయనమః. திரிலோகேசாயநம:.

க்ஷேத்திர விசேஷத்தில் ருத்திரனுக்காகச் சன்னிதி செய்திருப்பவனுக்கு நமஸ்காரம்.

௩௫௩. కేశవాయనమః. கேசவாயநம:.

மதுரா பட்டணத்திலும் காசியிலுமிருந்துகொண்டு கிலேசத்தைப் போக்குகிறவனும் பிரமனையும் ருத்திரனையும் தன் தேகத்தில் பிறக்கச் செய்தவனும் ஆனவனுக்கு நமஸ்காரம்.

௩௫௪. కేశిఘ్నేనమః. கேசிக்நேநம:.

கேசி என்னும் அசுரனைச் சங்கரித்தவனுக்கு நமஸ்காரம்.

௩௫௫. హరయేనమః. ஹரயேநம:.

கோவர்த்தன பருவதத்தில் இந்திரனைக் குறித்துச் செய்த யாகத்தை அபகரித்துக் கொண்டவனுக்கு நமஸ்காரம்.

௩௫௬. కామదేవాయనమః. காமதேவாயநம:.

ஸகலருக்கும் ஸர்வகாமத்தையும் கொடுக்கிறவனும் சங்கரனுடைய ஆலயத்தில் இருந்துகொண்டு தேவதா ஸ்திரீகளால் பூஜிக்கப்பட்டவனும் ஆனவனுக்கு நமஸ்காரம்.

௩௫௭. కామపాలాయనమః. காமபாலாயநம:.

அவன் தானே தன்னால் கொடுக்கப்பட்ட கோரிக்கைகளைப் பரிபாலனம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௩௫௮. కామినేనమః. காமிநேநம:.

ஆசைப்படும் பொருள்களை யெல்லாம் கொடுக்கிற அதிசயமுடையவனுகையால் காமிக்கத்தக்கவனுக்கு நமஸ்காரம்.

௩௫௯. కాన్తాయనమః. காந்தாயநம:.

தேவதாஸ்திரிகளும் ஆசைப்பட்டு ஆராதனஞ் செய்யும்படியான அழகுள்ளவனுக்கு நமஸ்காரம்.

இனி சக்தி ஈசன் என்கின்ற அவதாரத்தைச் சொல்லுகின்றது.

௬௬0. 𑌕𑍃𑌤𑌾𑌗𑌮𑌾𑌯𑌨𑌮𑌃. க்ருதாகமாயநம:.

நிர்மல ஆத்துமாக்களுக்காகப் பல மந்திர மயமான சாஸ்திரங்களைச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

௬௬௧. 𑌅𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑍍𑌯𑌵𑌪𑍁𑌷𑍇𑌨𑌮𑌃. அநிர்த்தேஸ்யவபுஷேநம:.

அந்தந்த யுகானுசாரமாய்க் காந்தியையும் ரூப வைசித்திரியங்களையும் உடையவனாகையால் இன்னது என்று நிர்த்தேசிக்கக் கூடாத தேகத்தையுடையவனுக்கு நமஸ்காரம்.

௬௬௨. 𑌵𑌿𑌷𑍍𑌣𑌵𑍇𑌨𑌮𑌃. விஷ்ணவேநம:.

இந்தப்படிக்கு வியாப்திநியமன முதலான சக்திகளின் வழியாய் எல்லாவற்றிலும் வியாபித்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௬௬௩. 𑌵𑍀𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. வீராயநம:.

சாதுக்களுக்கு விரோதத்தைச் செய்கிறவர்களைச் சீக்கிரமாய்ச் சங்கரிக்கத்தக்க வீரத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௬௬௪. 𑌅𑌨𑌨𑍍𑌤𑌾𑌯𑌨𑌮𑌃. அநந்தாயநம:.

தேசம் காலம் வஸ்துக்களால் பரிச்சேதிக்கக் கூடாதவனுக்கு நமஸ்காரம்.

௬௬௫. 𑌧𑌨𑌂𑌜𑌯𑌾𑌯𑌨𑌮𑌃. தநஞ்ஜயாயநம:.

தனங்களைப் பார்க்கிலும் தான் எல்லாவிதத்திலும் உபயோகப்படுகிறவனாகையால் தனங்களைக் கீழ்ப்படுத்துகிறவனுக்கு நமஸ்காரம்.

௬௬௬. 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌾𑌯𑌨𑌮𑌃. ப்ரம்ஹண்யாயநம:

பிரமம் என்று சொல்லப்படுகின்ற சேதனம் அசேதனம் இரண்டிற்கும் சிருஷ்டி ரக்ஷண முதலானவைகளைச் செய்து அவற்றிற்கு இதஞ் செய்பவனுக்கு நமஸ்காரம்.

சேதனம் அசேதனங்களைப் பிரமம் என்று சில விடங்களில் உபசாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

௬௬௭. 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑍃𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇𑌨𑌮𑌃. ப்ரம்ஹக்ருத்ப்ரம்ஹணேநம:.

சேதனம் அசேதனங்களுக்குக் காரணமான மஹத்தத்துவம் அஹங்கார தத்துவ முதலானவைகள் பெரிதும் ஸ்திரமும் உள்ளவைகளாகையால் அவைகளுக்கும் பிரமம் என்று பெயர். அந்த மஹத் அஹங்காராதிகளுக்குக் கர்த்தாவாகவும் ஸர்வப் பிரகாரத்திலும் நியாமகனாகவும் பிரமாவை யுண்டாக்கி அவன் வழியாய்ச் சிருஷ்டி செய்கிறவனும் ஆனவனுக்கு நமஸ்காரம்.

சுசுஅ. బ్రహ్మణేనమః. ப்ரம்ஹணேநம:.

பிரளய காலத்தில் ஸூக்ஷ்மரூபங்களாயிராநின்ற சேதனம் அசேதனங்களைச் சிருஷ்டிகாலத்தில் ஸ்தூலங்களாய்ச் செய்கிறவனும் நிரதிசய கலியாண குணங்களை யுடைய ஸ்வரூப விபவங்களினாலே தானும் பூரணனாய் வேதாந்தத்தினாலே அறியத்தக்கபரப்பிரமமும் ஆனவனுக்கு நமஸ்காரம்.

சுசுகூ. బ్రహ్మవివర్ధనాయనమః. ப்ரம்ஹவிவர்த்தநாயநம:.

தபசு முதலான ஸமஸ்த தருமங்களையும் விருத்தி செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

சுஎ0. బ్రహ్మవిదేనమః. ப்ரம்ஹவிதேநம:.

அவைகளைப் பிரதிபாதிக்கப்பட்ட அனந்த வேதங்களையும் அளவிட்டறிந்தவனுக்கு நமஸ்காரம்

சுஎக. బ్రాహ్మణాయనమః ப்ராம்ஹணாயநம:.

வேதமார்க்கத்தை நிலைநிறுத்துகைக்காக அத்திரி வம்சமுதலானவைகளில் தத்தாத்ரேயர் முதலான பிராமண ரூபமாயவதரித்தவனுக்கு நமஸ்காரம்.

சுஎஉ. బ్రహ్మిణేనమః. ப்ரம்ஹிணேநம:.

பிரமாண ரூபமாயும் பிரமேய ரூபமாயும் இருப்பவைகளை விர்த்திசெய்கிற பாவத்தையுடையவனுக்கு நமஸ்காரம்.

சுஎங. బ్రహ్మజ్ఞాయనమః. ப்ரம்ஹஜ்ஞாயநம:.

ஸர்வ வேதமயோ ஹரி என்றபடி வேதத்தை அர்த்தத்துடன் சாக்ஷாத் கரிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

சுஎச. బ్రాహ్మణప్రియాయనమః. ப்ராம்ஹண ப்ரியாயநம:.

அந்த வேதங்களை ஓதவல்ல பிராமணர்களைத் தனக்கு இஷ்டர்களாயுடையவனுக்கு நமஸ்காரம்.

சுஎரு. మహాక్రమాయనమః. மஹாக்ரமாயநம:.

உயர்ந்த ஸ்தானமான பரமபதத்திலிருக்கிற தன்னை மிகவும் பள்ளமான சமுசாரத்திலிருக்கும் ஆத்துமாக்கள் வந்து கிட்டுகைக்குத் தான் சாதகமான படிகட்டுபோலிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

படிகட்டுப்போன்றிருக்கையாவது தாயானவள் குழந்தைக்குப் பாலும், பின்பு அன்னமும், பின்பு போக்ய பதார்த்தங்களும் கொடுப்பது போல ஈஸ்வரனும் முதலில் தன்னிடத்தில் த்வேஷமில்லாமையையும், பிறகு எல்லாம் உண்மையென்னும் ஆஸ்திகத்தையும், பிறகு தன்னிடத்தில் ஆபிமுக்யத்தையும், பிறகு ஆசார்யபிராப்தியையும், அதனடியாக ஜ்ஞானத்தையும், பிறகு ரக்ஷிப்பன் என்னும் விசுவாசத்தையும் கிரமமாக வுண்டாக்குகை,

சுஎசு. మహాకర్మణేనమః. மஹாகர்மணேநம:.

புழு முதலிய சூக்ஷ்ம ஜந்துக்களையும் மிகுந்த வைபவத்தை யுடைய தேவாதிகளாகச் செய்கையால் ஆச்சரிய கரமான செயலை யுடையவனுக்கு நமஸ்காரம்.

சுஎஎ. మహాతేజసేనమః. மஹாதேஜஸேநம:.

அஞ்ஞானமாகிய இருளை யடைந்தவர்களுடைய அறுதியான இருட்டை அபகரிக்கிற மகத்தானதேஜசை யுடையவனுக்கு நமஸ்காரம்.

சுஎஅ. మహోరగాయనమః மஹோரகாயநம:.

தன்னைக் கிட்டினவர்களுக்குத் தான் கிட்டினவனாய் மற்றயவைகளில்போல அவர்கள் கரணங்களிலும், அந்தக் கரணங்களிலும் அநுப்பிரவேசித்தவனுக்கு நமஸ்காரம்.

சுஎகூ. మహాక్రతవేనమః. மஹாக்கிரதவேநம:.

எல்லாருக்கும் சுலபமாய்ச் செய்யத்தக்கதும் சிரேஷ்டமுமான ஆராதனத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

பகவானானவர் திரவ்ய விபவ வஸ்திர ஆபரணங்களைத் தனக்குக் கொடுப்பதினால் சந்தோஷிக்காமல் இருதயத்திலுள்ள பிரீதி ஒன்றினாலேயே சந்தோஷிக்கிறவனாகையால் அப்படிப்பட்டவனை எவன் பூஜிக்காமலிருக்கலாம்.

சுஅ௦. మహాయజ్వనేనమః. மஹாயஜ்வநேநம:.

அந்நிய தேவதைகளைப் பூஜிக்கிறவர்களைப் பார்க்கிலும் தன்னைப் பூஜிக்கிறவர்களை உத்கருஷர்களாகச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

பக்தர்களில் ஏகாந்த பக்தர்களே சிறந்தவர்கள் அவர்களே அந்நிய தேவதையைப் பூஜியாதவர்கள் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

நீ ஞாயமாய்ச் செய்யத்தக்கவைகளை யெல்லாம் செய்து அவைகளை யெனக்குச் சமர்ப்பணம் செய்துவிடு. அது தான் என்னைக்குறித்த ஆராதனமென்று அருச்சனனுக்குப் பகவத்கீதையில் பகவான் கூறி இருக்கிறார்.

சுஅக. మహాయజ్ఞాయనమః. மஹாயஞ்ஞாயநம:.

பால்பழ முதலியவைகளைச் சமர்ப்பித்துத் தன்னை ஆராதிப்பவர்களைக்காட்டிலும் தன்னிடத்தில் பிரீதிபண்ணுகிறவர்களைச் சிரேஷ்டர்களாக நினைக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஸமஸ்த தருமங்களைப் பார்க்கிலும் வைஷ்ணவ விதி உத்தமம் என்றும் பகவானான விஷ்ணுவானவர் பக்தர்களைத் தன்னுடைய சரீரத்தைப்போல ரக்ஷிக்கிறார் என்றும் அத்தியந்தம் பக்தி யுடையவர்களாகிய பரமேகாந்திகளால் செய்யப்படும் ஸமஸ்த கிரியைகளையும் சிரசாக வகிக்கிறார் என்றும் பிரமாணமிருக்கின்றது.

சூஅஉ. మహాహవిషేనమః. மஹாஹவிஷேநம:.

அஹிம்சையானதும் ஸாத்விகமானதும் உபநிஷத்து முதலியவைகளால் சொல்லப்பட்டதுமான ஹவிஸை யுடையவனுக்கு நமஸ்காரம்.

ஸர்வகர்மத்தையும் பிர்ம்மார்ப்பணம் செய்யவேண்டியது என்றும் ஞான யஜ்ஞத்தினாலே யஜிக்கப்பட்டவர்களுடைய அஞ்ஞானத்தைப் பரிகரிக்கிறவன் என்றும் திரவியமயமான யஜ்ஞத்தைப்பார்க்கிலும் ஞானமயமான யஜ்ஞம் சிரேஷ்டம் என்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

சூஅந. స్తవ్యాయనమః. ஸ்தவ்யாயநம:.

இந்தப்பிரகாரம் மனம் சரீரம் இவற்றின் செயல்களால் ஆராதிக்கப்படுவதைப்போல வாக்கினாலும் ஸ்தோத்திரம் செய்யத்தக்கவனுக்கு நமஸ்காரம்.

உண்டாக்கப்படாமல் சுவாபாவிகங்களாயும் மஹாமங்களமாயும் சாஸ்விதமாயும் அளவின்மையாயுமிருக்கிற குணங்களை யுடையவனும், ஆயிரம் திருநாமங்களால் கீர்த்திக்கத்தக்கவனுமாகிய சுவாமியே ஸ்துதிக்கு யோக்கியன் என்றும் அந்நியர்களான தேவர்கள் இப்படிப்பட்ட குணமுடையவர்களல்லாமையால் ஸ்தோத்திரம் செய்யப்படுதற்கு யோக்கியரல்லரென்றும் பல சாஸ்திரங்கள் கூறுகின்றன. இதனைக் கண்டாகர்னனுடைய விருத்தாந்தத்தில் நன்குயறியலாம்.

சூஅச. స్తవప్రియాయనమః. ஸ்தவப்ரியாயநம:.

எப்படியாவது எந்தப் பாஷையினாலாவது எவனாலேயாவது தன் விஷயமாய்த் தேஜஸ்கரமாயேனும் (இனிப்பாயர்வது) தமஸ்கரமாயேனும் (இனிப்பு அற்றவிதமாயாவது) ஆசையுடன் செய்யப்படும் ஸ்தோத்திரங்களை மிகவும் பிரியமாய்க் கேட்கிறவனுக்கு நமஸ்காரம்.

சூஅரு. స్తోత్రాయనమః. ஸ்தோத்ராயநம:.

தன்னை ஸ்தோத்திரம் செய்ய எண்ணமுள்ளவர்களுக்கு ஸ்தோத்திரம் செய்யும் சக்தியைத்தானே தன் கிருபையால் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

இதைத் துருவனுடைய விருத்தாந்தத்தினால் செவ்வையாயறியலாம்.

கூஅச. ஸ்துதயேநம:. ஸ்துதயேநம:.

ஆயிரம் படங்களையுடைய ஆதிசேஷன் முதலான நித்திய சூரிகளாலும் தங்களுடைய கோரிக்கைகள் நிறைவேறுதற்காகப் பிரமாதிகளாலும் அளவற்ற காலம் ஸ்தோத்திரம் செய்யப் படுகிறவனுக்கு நமஸ்காரம்.

ஸமஸ்த தேவதா சிரேஷ்டர்களாலும் அற்புதமான அவனுடைய சரித்திரமானது ஸ்தோத்திரம் செய்யப்பட்டிருக்கிறதென்று பிரமாணமிருக்கிறது.

கூஅஎ. ஸ்தோத்ரேநம:. ஸ்தோத்ரேநம:.

தன்னை ஸ்தோத்திரம் செய்கிறவர்களைத் தானும் ஸ்தோத்திரஞ் செய்கிற சீலமுடையவனுக்கு நமஸ்காரம்.

பகவானை ஸ்தோத்திரம் செய்கிறவன் அவனால் ஸ்துதிக்கப்படுகிறான் என்றும் நமஸ்காரம் செய்கிறவன் அவனால் நமஸ்கரிக்கப்படுகிறான் என்றும் பிரமாணமிருக்கின்றது. ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி கைலாசத்துக்குச் சென்றபோது நடந்த விருத்தாந்தத்தினால் இதனை நன்றாயறிலாம்.

கூஅஅ. ரணப்ரியாயநம:. ரணப்ரியாயநம:.

சாதுக்களைச் சந்தோஷிக்கச் செய்வதற்காக விரோதிகளைச் சங்கரித்தல் முதலிய லோகோபகாரமான செயல்களை இஷ்டமாக வுடையவனுக்கு நமஸ்காரம்.

ராவணனை யுத்தத்தில் சம்ஹரித்துச் சுக்கிரீவனையும் அங்கதனையும் சந்தோஷிக்கச் செய்தவனென்று பிரமாணமிருக்கிறது.

கூஅகூ. பூர்ணாயநம:. பூர்ணாயநம:.

மிகுந்த ஆயாசமும் சத்காரமும் இல்லாமலே ஸ்தோத்திர மாத்திரத்தினாலேயே திருப்தி செய்யலாம்படி தான் பூர்ணனாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூகூ0. பூரயித்ரேநம:. பூரயித்ரேநம:.

தான்பூர்ணனானாலும் பக்தர்களுடைய ஸ்தோத்திர முதலியவைகளை அபேட்சையுடன் கேட்டு அங்கீகரித்து அவர்கள் மனோரதத்தைப் பூரணஞ் செய்யும் சுபாவத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

கூகூக. புண்யாயநம:. புண்யாயநம:.

பாதகர்களையும் தன்னை ஸ்துதிக்க யோக்கியர்களாகச் செய்து அவர்களைப் பரிசுத்தவான்களாக்குகிறவனுக்கு நமஸ்காரம்.

௬௯௨. పుణ్యకీర్తయేనమః. புண்யகீர்த்தயேநமః.

பரிசுத்தம் செய்யத்தக்க கீர்த்தனத்தை யுடையவனுக்கு நமஸ் காரம்.

௬௯௩. అనామయాయనమః. அநாமயாயநமః.

இந்தப் பிரகாரம் தன்னுடைய சம்பந்தமாகிற திவ்விய ஔஷ தத்தினால் சமுசாரமாகிய நோயில்லாமல் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

பகவானை அநுபவிப்பதற்குச் சமுசாரம் விரோதமாயிருக்கிறப டியால் வியாதியென்று சொல்லப்படுகின்றது.

௬௯௪. మనోజవాయనమః. மனோஜவாயநமః.

சமுசார வியாதியால் துக்கம் அடைந்திருக்கிறேனென்கிற வ சனமாத்திரத்துக்கே அவர்களிடத்தில் சீக்கிரமாய் வருகிறவனுக்கு நமஸ் காரம்.

ஏழுஜன்மத்தில் செய்த பாவம் மிகுதியாயிருந்தாலும் விஷ்ணு வுக்கு ஆலயப் பிரதிஷ்டையினுடைய ஆரம்பமாத்திரத்தில் நசிக்குமென் று பிரமாணமிருக்கிறது.

௬௯௫. తీర్థకరాయనమః. தீர்த்தகராயநமః.

தன்னைக் கீர்த்தனம் செய்வதுபோலக் கங்கை முதலானவைக ளையும் கீர்த்தனம் செய்த மாத்திரத்தில் அவர்களைப் பரிசுத்தம் செய்யத்த க்கவைகளாம்படி அவைகளைத் தன் சம்பந்தத்தினாலே புனிதஞ் செய் திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௬௯௬. వసురేతసేనమః. வஸுரேதஸேநமః.

திவ்விய ஜோதி ரூபமான பரப்பிர்மமாகிய தானே கிருஷ்ணரூப னா யவதரித்தவனுக்கு நமஸ்காரம்.

௬௯௭. వసుప్రదాయనమః. வஸுப்ரதாயநமః.

பரமாத்துமாவான தன்னைத் தேவகிவசுதேவருக்குப் புத்திர னாய்க் கொடுத்தவனுக்கு நமஸ்காரம்.

௬௯௮. వసుప్రదాయనమః வஸுப்ரதாயநமః.

ஜகத்பிதாவாக விருக்கிற தனக்குத் தேவகீவசுதேவர்கள் மாதா பிதாக்களாகும்படியான மகத்தாகிய தேஜஸை அவர்களுக்குக் கொடுத்த வனுக்கு நமஸ்காரம்.

சாகூகூ. వాసుదేవాయనమః. வாஸுதேவாயநமः.

வசுதேவருக்குப் புத்திரனாய்ப் பிறந்தவனுக்கு நமஸ்காரம்.

அவதாரத்துக்கு மூலமாயிராநின்ற திருப்பாற்கடலாகியவீட்டை யுடையவனென்பதைச் சொல்லுகின்றது.

எ00. వసవేనమః. வஸவேநமः.

திருப்பாற்கடலிலே வாசம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

அவன் லோகங்களுக்கு ஹிதார்த்தமாய்த் திருப்பாற்கடலே வீடாக வாசம் செய்கிறானென்றும் அந்த நாராயணனே அவ்விடம் விட்டு மதுரையில் கிருஷ்ணனாயவதரித்தானென்றும் பிரமாணமிருக்கிறது.

எ0க. వసుమనసేనమః. வஸுமனஸேநமः.

லக்ஷ்மிக்கு ஜன்ம பூமியான திருப்பாற்கடலிலே வாசம் செய்து கொண்டிருக்கும்பொழுதும் வசுதேவனிடத்தில் மனமுடையவனுக்கு நமஸ்காரம்.

எ0௨. హవిషేనమః. ஹவிஷேநமः.

தேவகீ வசுதேவர் இவர்களிடத்தில் வாசம் செய்ய ஆசையுடையவனாயிருந்தும் ஆபத்தினாலும் பிரேமையினாலும் வியசனமடைந்திருந்த அவர்களைக் கம்சனுடைய உபத்திரவத்தினின்றும் சம்ரக்ஷிக்கைக்காகவும் மிகுந்த பிரேமமுடைய நந்தகோபன் யசோதை இவர்களுக்காகவும் கம்சன் அறியாமலிருப்பதற்காகவும் அந்த ஆசையினின்றும் பிரிந்தவனுக்கு நமஸ்காரம்.

எ0௩. సద్గతయేనమః. ஸத்கதயேநமः.

பிறந்தவுடனே அசுரர்களைச் சங்காரம் செய்ததினாலே சற்ஜனர்களுக்குக் கதியானவனுக்கு நமஸ்காரம்.

எ0௪. సత్కృతయేనమః. ஸத்க்ருதயேநமः.

சமுசார விலங்கைச் சேதிக்கத்தக்கதாயிராநின்ற தயிர் நவநீத சோரங்களும் உரலில் கட்டுபெட்டதும் முழங்காலால் தவழ்ந்ததும் ராஸக்கிரீடையும் முதலிய மனோகரமான செயல்களையுடையவனுக்கு நமஸ்காரம்.

எ0௫. సత్తాయైనమః. ஸத்தாயைநமः.

சற்ஜனர்கள் தன்னைப் பிரிந்து ஜீவியாதபடி அவர்களுக்கு ஆதாரமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௭௦௬. సద్భూతయేనమః. ஸத்பூதயேநம:.

சற்ஜனர்களுக்குப் புத்திரன் மித்திரன் பந்து தாசன் சாரதியும் இன்னு மன்னியமானவைகளுமாகிறவனுக்கு நமஸ்காரம்.

௭௦௭. సత్పరాయణాయనమః. ஸத்பராயணாயநம:.

சற்ஜனர்களான பாண்டவர்களுக்கு ஆஸ்ரியனாயும் பலமாயும் நாதனாயும் பந்துவாயும் அவனே பராயணனாயும் இருந்தவனுக்கு நமஸ்காரம்.

௭௦௮. శూరసేనాయనమః. சூரஸேநாயநம:.

சூரர்களாகிய யாதவர்களையும் பாண்டவர்களையும் பூ பாரத்தை நிவிர்த்தி செய்யச் சகாயமாக வுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௦௯. యదుశ్రేష్ఠాయనమః. யதுஸ்ரேஷ்டாயநம:.

மிகவும் தாழ்மையடைந்திருந்த யாதவவம்சத்தைத் தான் கோபாலனா யவதரித்து உத்தாரணஞ் செய்தவனுக்கு நமஸ்காரம்.

௭௧௦. సన్నివాసాయనమః. ஸந்நிவாஸாயநம:.

மனிதற்கியல்பான லீலையை யுடையவனாயிருந்தபோதிலும் ஸத்துக்களான சனகாதிகளும் தங்கள் சிரமம் பரிகாரமாம்படி தியானிப்பதற்கிடமாயிருந்தவனுக்கு நமஸ்காரம்.

௭௧௧. సుయామునాయనమః. ஸுயாமுநாயநம:.

சோபனம் பாவனம் மனோகரங்களுமான யமுனாநதியில் ஜலக்கிரீடை பூப்பறித்தல் ராஸக்கிரீடை முதலிய செயல்களை யுடையவனாயிருந்தவனுக்கு நமஸ்காரம்.

௭௧௨. భూతావాసాయనమః. பூதாவாஸாயநம:.

கிருஷ்ணனாயவதரித்தபோது பரப்பிரமத் தன்மையுமுடையவனாயிருந்தபடியால் பிராணிகளுக்குத் தான் வாசஸ்தலமாயும் பிராணிகளிடத்தில் தான் வாசஞ் செய்கிறவனாயுமிருந்தவனுக்கு நமஸ்காரம்.

௭௧௩. వాసుదేవాయనమః. வாஸுதேவாயநம:.

வசுதேவனுக்குப் புத்திரன் ஆனபோது பன்னிரண்டு ரூபமாய் ஆனவனுக்கு நமஸ்காரம்.

இவைகளில் மதுராபட்டணத்தில் ஒரு ரூபம்.

எகச. సర్వాసునిలయాయనమః. ஸர்வாஸுநிலயாயநம:.

சகலருக்கும் பிராணுதாரமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

எகரு. అనలాయనమః. அநலாயநம:.

பிராணிகளுக்குச் சர்வ அபீஷ்டங்களையும் பூர்த்தி செய்தபோதிலும் கொஞ்சமாகிலும் தன்னுல் செய்யப்படவில்லையென்று திருப்தியற்றவனுயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

எகசு. దర్పఘ్నే నమః. தர்பக்நேநம:.

கோவர்த்தனகிரியை எடுத்துக் குடையாகப் பிடித்தல் பாரிஜாததருவைப் பிடுங்கிக்கொண்டு வருதல் பாணுசுரனுடைய தோள்களைக் கண்டித்தல் முதலிய செயல்களால் தன்னவர்களென்கிற அபிமானத்தினுலே இந்திரன் ருத்திரன் முதலானவர்களுடைய கெர்வத்தைமாத்திரம் அழித்தவனுக்கு நமஸ்காரம்.

எகஎ. దర్పదాయనమః. தர்பதாயநம:.

சத்துருக்களை வதைத்தல் ஒருவராலும் கிட்டவொண்ணுதபடி துவாரகாபுரியை நிர்மித்தல் சங்கநிதி பதுமநிதி கற்பதரு தேவசபைகளைக்கொண்டுவருதல் முதலிய செயல்களால் யாதவர்கள் கவலையற்று இறுமாந்திருக்கும்படி செய்தவனுக்கு நமஸ்காரம்.

எகஅ. అదృప్తాయనమః. அத்ருப்தாயாம:.

அப்படிச்செய்தும் தான் அகங்காரமில்லாதவனு யிருந்தவனுக்கு நமஸ்காரம்.

எகக. దుర్ధరాయనమః. துர்தராயநம:.

பாலலீலை முதலான செயல்களில் நந்தகோபன் யசோதை முதலானவர்களால் தடுக்கக் கூடாதபடி துடுக்குள்ள செயல்களை யுடையவனுக்கு நமஸ்காரம்.

எஉ0. అపరాజితాయనమః. அபராஜிதாயநம:.

ஒருசகாயமுமில்லாத பாண்டவர்கள் அநேக உபகரணங்களுடன் கூடியிருந்த துரியோதனுதிகளாலே பாரத யுத்தத்தில் அபஜயத்தையடையாதபடி தான் அவர்களுக்குச் சகாயமாயிருந்தவனுக்கு நமஸ்காரம்.

௭௨௧. 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑍇𑌨𑌮𑌃. விஸ்வமூர்த்தயேநம꞉.

பலமில்லாத பாண்டவர்கள் பலமுடைய துரியோதனுதிகளை ஜயிக்கவும் அத்துரியோதனுதியர்கள் தோற்கவும் செய்தபடியால் எல்லாவற்றையும் தனக்குச் சரீரம்போல விதேயமாக வுடையவனுக்கு நமஸ்காரம்.

அருச்சுனு நான் அந்தராத்துமாவாய்ச் சருவபூதங்களுடைய இருதயங்களிலும் வாசம் செய்கிறேனென்று பகவத்கீதையில் கூறியிருக்கிறது.

௭௨௨. 𑌮𑌹𑌾𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑍇𑌨𑌮𑌃. மஹாமூர்த்தயேநம꞉.

எல்லாவற்றிற்கும் ஆதாரமான தேகத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

என்னுடைய தேகத்தில் சராசரங்களோடு கூடிய சகல ஜகத்தையும் பாரென்று பகவான் காண்பித்ததாய்க் கீதையில் கூறியிருக்கிறது.

௭௨௩. 𑌦𑍀𑌪𑍍𑌤𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑍇𑌨𑌮𑌃. தீப்தமூர்த்தயேநம꞉.

உலகத்தில் ஏதாவது ஒரு குணத்தினுலே பிரகாசிக்கும் பொருள்களில் விசேஷமாய் வாசஞ்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௭௨௪. 𑌅𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌮𑌤𑍇𑌨𑌮𑌃. அமூர்த்திமதேநம꞉.

கண்ணுக்குத் தோற்றுமையால் அமூர்த்தி யென்று சொல்லப்படுகிற பிரகிருதி ஜீவர்களைத் தனக்குச் சுவாதீனமாயுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௨௫. 𑌅𑌨𑍇𑌕𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑍇𑌨𑌮𑌃. அநேகமூர்த்தயேநம꞉.

வாசுதேவாதி நான்கு மூர்த்தங்களையுடையவனுமாய்க் கிருஷ்ணுவதாரத்தில் பதினாயிரத் தொருநூறு ஸ்திரீகளுடன் அவ்வளவு வடிவங்கள் கொண்டு கலந்தவனுமாயிருந்தவனுக்கு நமஸ்காரம்.

௭௨௬. 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌯𑌨𑌮𑌃. அவ்யக்தாயநம꞉.

மேற்கூறிய தன் வைபவத்தை மானிட அவதாரத்தில் ஒருவராலும் அறியக்கூடாதபடி யிருந்தவனுக்கு நமஸ்காரம்.

௭௨௭. 𑌶𑌤𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑍇𑌨𑌮𑌃. ஶதமூர்த்தயேநம꞉.

தரிசிக்க வேண்டுமென்று அபேட்சித்த அருச்சுனனுக்குப் பிரகாசமாகத் தன்னுடைய விசுவரூபத்தைக் காண்பித்தவனுக்கு நமஸ்காரம்.

அர்ச்சுனு நூறு ஆயிரமாக அளவற்றிருக்கிற என்னுடைய ரூபங்களைப் பாரென்று பகவான் காண்பித்ததாகக் கீதையில் கூறியிருக்கிறது.

எஉஅ. ಅನೇಕಾನನಾಯನಮಃ. அநேகாநநாயநம:.

அநேகமான முகங்களை யுடையவனுக்கு நமஸ்காரம்.

அநேகமான முகங்களையும் கண்களையுமுடையவனென்று கீதையில் கூறியிருக்கிறது.

எஉகூ. ಏಕಸ್ಮೈನಮಃ. ஏகஸ்மைநம:.

எல்லாம் தனக்குச் சுவாதீனமாயிருக்கிறபடியாலும் தன்னைப் போல ஜகத்துக்கு வேறொரு நியாமகன் இல்லாமையாலும் தான் ஒருவனே எல்லாவற்றிற்கும் நியாமகனா யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

எ௩0. ನೈಕಸ್ಮೈನಮಃ. நைகஸ்மைநம:.

தனக்குச் சமானம் ஒன்றும் இல்லாமற்போன போதிலும் தனக்குச் சுவாதீனமானவைகள் பலவும் இருப்பதால் அனேகமான வுலகங்களை யுடையவனுக்கு நமஸ்காரம்.

அருச்சுனா திவ்வியமான என்னுடைய உலகங்களுக்கு அந்தம் இல்லையென்று பகவத்கீதையில்கண்ணன் கூறி இருக்கிறார்.

எ௩க. ಸಾಯನಮಃ. ஸாயநம:.

இந்தப்பிரகாரம் தன் வைபவம் பிரசித்தமாயிருப்பதால் பாலியர் முதற்கொண்டு யாவரும் தன்னை அறியாதபடி செய்கிற அஞ்ஞானத்தைப் பரிகரிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

எ௩உ. ವಾಯನಮಃ. வாயநம:.

பிரசித்தமாக ஸர்வத்திலும் வாசம் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

அவனிடத்தில் எல்லாம் இருக்கின்றன. யாவற்றிலும் அவன் இருக்கிறான். ஆனதால் வ என்று அவனுக்குத் திருநாமம் என்று பிரமாணமிருக்கிறது.

எ௩௩. ಕಾಯನಮಃ. காயநம:.

இந்தப்பிரகாரம் மலினமானவர்களிடத்தில் வாசம் செய்தாலும் பிரகாசிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

எ௩ச. ಕಸ್ಮೈನಮಃ. கஸ்மைநம:.

எல்லாப் பலன்களையும் கொடுக்கிறவன் தானாகையால் யாவராலும் பகவத் சொரூபம் எப்படிப்பட்டதென்று பெரியோர்களிடத்தில் கேட்டறியத்தக்கவனுக்கு நமஸ்காரம்.

எஙடு. యస్మైనమః. யஸ்மைநம:.

அவர்களுடைய சம்ரக்ஷணைக்காகப் பிரயத்தனஞ் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

எஙசு. తస్మైనమః. தஸ்மைநம:.

ஆகையால் அது என்று பிரசித்தமாய்ச் சொல்லப்படுகிறவனுக்கு நமஸ்காரம்.

எஙஎ. అనుత్తమపదాయనమః. அநுத்தமபதாயநம:.

அவர்களுக்குப் பரமப்பிராப்பியனானவனுக்கு நமஸ்காரம்.

எஙஅ. లోకబన్ధవేనమః. லோகபந்தவேநம:.

உலகத்தாருக்கு ஸமஸ்தமான பந்துவாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

ஜகத்துக்கு நாராயணன் மாதாவும் பிதாவும் பிராதாவும் இருப்பிடமும் புகலிடமும் சினேகிதனும் கதியும் மற்றுமுள்ளவைகளுமாயிருக்கிருனென்று சுருதியில் கூறியிருக்கிறது.

அதற்குக் காரணமாகவும் அசாதாரணமாகவும் சுபாவிகமாகவும் இராநின்ற சம்பந்தத்தைச் சொல்லுகின்றது.

எஙகூ. లోకనాథాయనమః. லோகநாதாயநம:.

லோகத்துக்குச் சுவாமியா யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

லக்ஷ்மியுடன் கூடிக்கொண்டு தான் சுவாமியாகவும் பந்துவாகவும் இருக்கிருனென்பதை விசேஷித்துச் சொல்லுகின்றது.

எசO. మాధవాయనమః. மாதவாயநம:.

லக்ஷ்மீபதி யாகையாலும் மதுகுலத்தில் உற்பத்தி யுடையவனாகையாலும் மாதவனென்கிற திருநாமத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

எசக. భక్తవత్సలాయనమః. பக்தவத்ஸலாயநம:.

மேற்சொல்லியபடி யெல்லாருக்கும் சுவாமியும் பந்துவுமாயிருக்கிறதுமன்றியில் பக்தர்களிடத்தில் விசேஷமான வாச்சலியத்தையுமுடையவனுக்கு நமஸ்காரம்.

எசஉ. సువర్ణవర్ణాయనమః. சுவர்ணவர்ணாயநம:.

மேற்சொல்லிய குணத்தைப்போல்ப் பொன்னுனை போன்று நிர்த்தோஷமாயும் பிரகாசமாயுமிருக்கிற திவ்விய காந்தியை யுடையவனுக்கு நமஸ்காரம்.

எசங. హేమాఙ్గాయనమః. ஹேமாங்காயநம:.

நித்தியமானதும் திவ்வியமானதும் சத்துவமயமானதும் மங்களமானதுமாயிருக்கிற தேஹத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

எசச. వరాఙ్గాయనమః. வராங்காயநம:.

உபநிஷத்துக்களில் சொல்லியிருக்கிற தன் ரூபத்தைத் தேவகிதேவியாருக்கு முன் வரம் கொடுத்தபடியே பிரகாசம் செய்தவனுக்கு நமஸ்காரம்.

விகசிதநீலோற்பலத்தைப் போலக் காந்தியையும் சதுர்ப்புஜங்களையும் ஸ்ரீ வச்சத்தையுமுடையவனாயிருந்த பகவானைப் பார்த்து வசுதேவர் ஸ்தோத்திரம் செய்தாரென்று ஸ்ரீ பாகவதத்தில் கூறியிருக்கிறது.

எசரு. చన్దనాఙ్గదినేనమః. சந்தநாங்கதிநேநம:.

சந்தோஷகரமானவைகளும் விலையில்லாதவைகளுமாயிருக்கிற தோள்வளை முதலிய பூஷணங்களைச் சரீரத்திலே பூரணமாயுடையவனுக்கு நமஸ்காரம்.

எசசூ. వీరఘ్నేనమః. வீரக்நேநம:.

மிகுந்த அழகுள்ள பாலுண்கிற குழந்தையாக விருந்தும் பூதனையையும் சகடாசுரனையும் மருதமரங்களையும் சமூலமாகச் சங்கரித்தவனுக்கு நமஸ்காரம்.

எசஎ. విషమాయనమః. விஷமாயநம:.

கபடமற்ற மனத்தை யுடையவர்களிடத்தில் க்ஷேமகரமானதும் குடிலமனத்தை யுடையவர்களிடத்தில் பயங்கரமானதுமாகிய விஷம நடத்தையை யுடையவனுக்கு நமஸ்காரம்.

எசஅ. శూన్యాయనమః. சூன்யாயநம:.

மானிடத்தன்மையிலும் தோஷங்கள் ஒன்றுமில்லாதவனுக்கு நமஸ்காரம்.

எசகூ. ఘృతాశీషేనమః. க்ருதாசிஷேநம:.

தன் குணங்களினாலே ஜகத்தைச் செய்கிறவனும் கோபாலர்களுடைய வீட்டிலிருந்த நெய்யைக் குளிர வுண்டவனுமானவனுக்கு நமஸ்காரம்.

எரு௦. అచలాయనమః. அசலாயநம:.

துஷ்டர்களான துரியோதனன் முதலானவர்களாலே ஜயிக்கப்படாமல் ஸ்திரமாயிருந்தவனுக்கு நமஸ்காரம்.

௭௫௧. చలాయనమః. சலாயநம:.

சரணமடைந்த பாண்டவர்களுடைய பிரயோசனத்தின் பொருட்டுச் சத்திய நிபந்தனையினின்றும் பெயர்ந்தவனுக்கு நமஸ்காரம்.

ஆயுதத்தை யெடுக்கிறதில்லை யென்று சொன்ன நிபந்தனையைத் தப்பிச் சக்கரத்தைத் தரித்தவனுப்ப் பீஷ்மர்பேரில் ஓடியும் உரத்தும் பேசுகிறவனும் கோபித்தவனுமிருந்த ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியைப் பார்த்து கௌரவர்களுக்கு க்ஷயம் ஆச்சுதென்று ஸமஸ்த பூதங்களும் முறையிட்டன வென்றும் சக்கரத்தைக் கிரகித்துக்கொண்டு நின்ற ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி பூதங்களை யெல்லாம் தகிக்கப்பட்ட அக்கினியைப்போல விளங்கினார் என்றும் பிரமாணமிருக்கிறது.

௭௫௨. అమానినేనమః. அமாநிநேநம:.

அருச்சுனனுக்கு லச்சை யில்லாமல் சாரதித் தொழிலைச் செய்தவனுகையால் பக்தர்களிடத்தில் அகங்காரமில்லாதவனுக்கு நமஸ்காரம்.

௭௫௩. మానదాయనమః. மாநதாயநம:.

அருச்சுனனுக்கும் உக்கிரஸேனனுக்கும் தருமராசனுக்கும் தலைவனுகவிருந்து சாம்பிராச்சிய வெகுமானத்தைக் கொடுத்தவனுக்கு நமஸ்காரம்.

௭௫௪. మాన్యాయనమః. மாந்யாயநம:.

அவர்களைச் சேர்ந்தவனுக எண்ணத் தகும்படி யிருந்தவனுக்கு நமஸ்காரம்.

பாண்டவர்களை நான் சேர்ந்து சாரதியாயிருக்க யுத்தபூமியிலிருந்து தப்பிப் போகிறவன் யாரென்று கண்ணன் கூறி யிருக்கிறார்.

௭௫௫. లోకస్వామినేనమః. லோகஸ்வாமிநேநம:.

இப்படிப்பட்ட தாழ்ந்த கருமங்களைச் செய்தும் லோகத்துக்குத் தான் சுவாமியாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௭௫௬. త్రిలోకధృతేనమః. திரிலோகத்ருதேநம:.

தான் சுவாமியாக விருப்பதால் தாழ்ந்த செயல்களைச் செய்தாலும் லோகத்தை ரட்சிக்கவேண்டுமென்கிற பாரத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௫௭. సుమేధసేనమః. ஸுமேதஸேநம:.

இவை எல்லாவற்றிற்கும் காரணமான நல்ல ஞான முடையவனுக்கு நமஸ்காரம்.

௭௫௮. మేధజాయనమః. மேதஜாயநமஃ.

தேவகீ தேவியார் புத்திர அபேட்சையாய்ச் செய்த விரதரூபமான யக்கியத்தில் பிறந்தவனுக்கு நமஸ்காரம்.

புத்திர அபேட்சையுள்ள உன்னாலே நான் பிரார்த்திக்கப்பட்டு அதற்குப் பலமாக இப்போது நான் உன்னுடைய உதரத்தில் பிறந்தேனென்று தேவகீ தேவியாருடன் பகவான் கூறியதாக ஸ்ரீ பாகவதத்தில் கூறி யிருக்கிறது.

௭௫௯. ధన్యాయనమః. தந்யாயநமஃ.

தான் தேவகியார் வயிற்றில் பிறந்ததினாலே தனலாபம் பெற்றவனைப் போலச் சந்தோஷத்தை யடைந்தவனுக்கு நமஸ்காரம்.

௭௬௦. సత్యమేధసేనమః. ஸத்யமேதஸேநமஃ.

வசுதேவர் முதலானவர்களுக்கு ஸஜாதீயனாகத் தன்னை மெய்யா யெண்ணி யிருந்தவனுக்கு நமஸ்காரம்.

என்னிடத்தில் உங்களுக்குப் பிரீதி யிருந்தால் உங்களில் என்னையும் ஒருவனாக நினையுங்களென்றும் நான் தேவன் அல்ல கந்தருவன் அல்ல யட்சன் அல்ல ராட்சசன் அல்ல நான் உங்களுக்குப்பந்துவாயிருக்கிறேன் என்னை வேறாக எண்ண வேண்டாமென்றும் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தி கோபாலர்களைப் பார்த்து சொல்லி யிருக்கிறானென்று ஸ்ரீ பாகவதம் கூறுகிறது.

௭௬௧. ధరాధరాయనమః. தராதராயநமஃ.

இந்தக் கோகுலத்தை இப்போது நான் சம்ரட்சிக்கத் தக்கதென்று சிலைகளினாலே கனமாயிருக்கிற பர்வதத்தைச் சீக்கிரமாய்ப் பிடுங்கிக் குடையாகப் பிடித்தவனுக்கு நமஸ்காரம்.

௭௬௨. తేజోవృషాయనమః. தேஜோவ்ருஷாயநமஃ.

இந்தப்பிரகாரம் நல்ல மனத்தை யுள்ளவர்களுக்குப் பாலன போஷண ரூபமான தன் தேஜஸை வருஷிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௭௬௩. ద్యుతిధరాయనమః. த்யுதிதராயநமஃ.

பால்யத்திலும் இந்திரனை அவமானம் செய்யத்தக்க மனிதத்தன்மைக்கு மேற்பட்ட பிரபாவத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௬௪. సర్వశస్త్రభృతాంవరాయనమః. ஸர்வசஸ்த்ரப்ருதாம்வராயநமஃ.

நரகாசுரன் ஜராசந்தன் முதலானவர்களுடைய யுத்தங்களில் ஸமஸ்த ஆயுதங்களையும் தரிப்பவர்களைப் பார்க்கிலும் சிரேஷ்டனாயிருந்தவனுக்கு நமஸ்காரம்.

அநேக ரூபங்களாயிருக்கிற அஸ்திரங்களைச் சத்துருக்கள் மீது விடுவது மானிட அவதாரம் செய்த பகவானுக்கு லீலையா யிருந்ததென்று பிரமாணமிருக்கிறது.

௭௬௫. ప్రగ్రహాయనమః. ப்ரக்ரஹாயநம꞉.

அருச்சுனனுக்குச் சாரதியாய்க் குதிரைகளினுடைய கடிவாளவார்களைப் பிடித்தவனுக்கு நமஸ்காரம்.

௭௬௬. నిగ్రహాయనమః. நிக்ரஹாயநம꞉.

அருச்சுனனுடைய வலியை அபேட்சிக்காமலே தான் தன் சாரத்திய சாமர்த்தியத்தினலே சத்துருக்களை நிக்கிரகித்தவனுக்கு நமஸ்காரம்.

௭௬௭. వ్యగ్రాయనమః. வ்யக்ராயநம꞉.

அருச்சுனனுடைய சத்துருக்களைச் சங்கரிப்பதில் கிரமமாய் யுத்தம் செய்வதைப் பொறுக்காமல் சீக்கிரமாய் அடிக்க ஓடினவனுக்கு நமஸ்காரம்.

௭௬௮. నైకశృఙ్గాయనమః. நைகஸ்ருங்காயநம꞉.

கபட சாரத்தியம் செய்தும் ஆயுதம் எடுக்கிறதில்லை யென்று சொல்லிச் சமயத்தில் எடுத்தும் இப்படி சத்துருக்களை அழிப்பதற்காகப் பலசெய்கைகளைச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

௭௬௯. గదాగ్రజాయనమః. கதாக்ரஜாயநம꞉.

கதன் என்பவனுக்குத் தான் தமயனனவனுக்கு நமஸ்காரம்.
விபவத்திலும் அதற்கு மூலமான வியூஹம் ஈதென்
று காட்டுகின்றது.

௭௭௦. చతుర్మూర్తయేనమః. சதுர்மூர்த்தயேநம꞉.

தான் யதுகுலத்தில் அவதரித்த காலத்தில் பலபத்திரன் வாசுதேவன் பிரத்தியுமனன் அநிருத்தன் என்கின்ற நான்கு திருவுருவங்களையுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௭௧. చతుర్బాహవేనమః. சதுர்ப்பாஹவேநம꞉.

நான்கு புயங்களை யுடைய பரசொரூபமாகவே தேவகீ தேவியார் வயிற்றில் அவதாரம் செய்தவனுக்கு நமஸ்காரம்.

விஶ்வாத்துமாவாயிருக்கிற பகவானே ராட்சசேசுரனை கம்சனுக்குத் தெரியாமலிருக்கும்படி இந்தச் சதுர்ப்புஜங்களை யுடைய ரூபத்தை மறைத்துக் கொள்ளுமென்று தேவகீ தேவியார் சுவாமியைப் பார்த்துச் சொல்லி யிருக்கிறாரென்று ஸ்ரீ பாகவதம் கூறுகிறது.

௭௭௨. చతుర్వ్యూహాయనమః. சதுர்வ்யூஹாயநம꞉.

இங்கேயும் அப்படியே ஒன்றுபட்டும் வேறு வேறுருகியும் இருக்கிற ஆறுகுணங்களின் ஏற்பாட்டை யுடைய நான்கு ரூபமாயிருந்தவனுக்கு நமஸ்காரம்.

௭௭௩. చతుర్గతయేనమః. சதுர்க்கதயேநமஃ.

நான்கு விதமான பலனை ஆசைப்பட்டுத் தன்னை உபாசிக்கிறவர்களுக்கு அந்தப் பிரயோசனங்களைக் கொடுத்து அவர்களுக்குக் கதியாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௭௭௪. చతురాత్మనేనమః. சதுராத்மநேநமஃ.

மேற்சொல்லிய நால்வருக்கும் அவரவர்களுக்குத் தக்கபடி பிரகாசிக்கும் நான்கு விதமான சொரூபத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௭௫. చతుర్భావాయనమః. சதுர்ப்பாவாயநமஃ.

நான்குவிதமான வியூகத்தின் செயல்களான ஆக்கல் அளித்தல் அழித்தல் முத்தி கொடுத்தல் முதலான ஜகத் வியாபாரங்களை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௭௬. చతుర్వేదవిదేకపాదేనమః. சதுர்வேதவிதேகபாதேநமஃ.

நாலுவேதத்தையு மறிந்தவர்களுக்கு விஷ்ணுவின் நாலுபாகத்திலொன்றுவந் தவதரித்ததென்று சொல்லும்படி பிரகாசிக்குமவனுக்கு நமஸ்காரம்.

ருஷிகளும் யதுகுலத்தில் பிறந்தவன் அம்சாவதாரனென்றும் விஷ்ணுவினுடைய அம்சாம்சத்தினாலே பிறந்தானென்றும் சொல்லி யிருக்கிறார்கள்.

௭௭௭. సమావర్తాయనమః. ஸமாவர்த்தாயநமஃ.

இந்தப்பிரகாரம் எப்பொழுதும் எல்லா விடங்களிலும் அவதார வைபவமாகிய சுழியை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௭௮. నివృత్తాత్మనేనమః. நிவ்ருத்தாத்மநேநமஃ.

கிருபையினால் ஜகத்தில் அவதாரமுதலிய செயல்களைச் செய்கிறானே அன்றி சுபாவமாய் இவை ஒன்றிலும் சம்பந்தம் அற்ற மனத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௭௯. దుర్జయాయనమః. துர்ஜயாயநமஃ.

சுரர் நரர் முதலானவர்கள் தங்கள் சக்தியினாலே வசப்படுத்திக் கொள்ள அசக்கியமானவனுக்கு நமஸ்காரம்.

௭௮௦. దురతిక్రమాయనమః. துரதிக்ரமாயநமஃ.

எல்லாருக்கும் தன்னுடைய பாதமூலத்தை அதிக்கிரமித்து வேறு கதி இல்லாதபடி இருப்பவனுக்கு நமஸ்காரம்.

விஷ்ணுவை யல்லாமல் வேறே கதி இல்லையென்று வேதங்கள் நிரந்தரமும் முறை யிடுகின்றன, இதற்குச் சந்தேகம் இல்லை யென்று பிரமாண மிருக்கிறது.

௭௮௧. దుర్లభాయనమః. துர்லபாயநம:.

அந்நியமான இடத்தில் மனதை யுடையவர்களுக்குச் சுலப னல்லாதவனையும் இந்திரிய ஜயமில்லாதவர்கள் தன்னை யடையக்கூடா தவனையு மிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௭௮௨. దుర్గమాయనమః. துர்கமாயநம:.

உச்சிகாலத்துச் சூரியனுடைய காந்தியை நேத்திரவியாதி யுடையவர்கள் சகிக்கக் கூடாதது போலப் பக்தி இல்லாதவர்கள் கிட்ட வொண்ணாதபடி காந்தியை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௮௩. దుర్గాయనమః. துர்காயநம:.

ஆத்மாக்களுடைய அஞ்ஞானமுதலிய மறைவுகளினாலே பிரவேசிக்க வொண்ணாதபடி யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௭௮௪. దురావాసాయనమః. துராவாஸாயநம:.

இந்தப் பிரகாரம் தன்னுடைய பாதமூலத்தில் வாசம் பக்தி இல்லாதவர்களுக்குக் கிடைக்க அரிதாம்படி யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௭௮௫. దురారిఘ్నేనమః. துராரிக்நேநம:.

துர்ம்மார்க்கத்தை அனுசரித்திருந்த சத்துருக்களை வேதமார்க்கத்தை விடச் செய்வதுமுதலான அந்தந்த உபாயங்களினாலே சங்கரித்தவனுக்கு நமஸ்காரம்.

விஷ்ணுவினாலே பிரேரேபணம் செய்யப்பட்ட மகா மோகத்தினாலே ராக்ஷசர்களுக்கு வெகுபிரகாரங்களால் வேதங்களானவை கொஞ்சமாகிலும் ருசிக்காமல் செய்யப்பட்டுப் பின்பு அவர்கள் தேவர்களாலே சங்கரிக்கப்பட்டார்களென்று வைஷ்ணவபுராணம் கூறுகிறது.

௭௮௬. శుభాంగాయనమః. சுபாங்காயநம:.

அசுரர்களுக்கு வஞ்சனை செய்யத்தக்க மாயா மோக ரூபத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௮௭. లోకసారంగాయనమః. லோகஸாரங்காயநம:.

லோகத்திலே சாரமாயும் ஞாயத்தை விடாமல் இருப்பதாயும் இருக்கிற முக்தி மார்க்கம் முதலானவைகளை அவர்களுக்குத் தெரியவொட்டாமற் பண்ணினவனுக்கு நமஸ்காரம்.

௭௮௮. సుతంతవేనమః. ஸுதந்தவேநம:.

அந்த ராட்சசர்களாலே தாண்டக் கூடாததாய் அவர்களைச் சுவாதீனம் செய்து கொள்ளத்தக்க வலைக்கயிறுபோலும் இருக்கிற கபடத்தினால் பாவனை காட்டிய சாந்திமுதலிய குணங்களை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௮௯. తన్తువర్ధనాయనమః. தந்துவர்த்தநாயநம꞉.

பாப ருசிகளாகிற நூல்களாலே சம்சாரமாகிற கயிற்றை விர்த்தி செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

என்னைத் துவேஷிக்கிற குரூரர்களாகிய நர அதமர்களை நிரந்தரமும் சம்சாரத்தில் நானே வீழ்த்துகிறேன் என்று ஸ்ரீ பாகவதத்தில் கூறி இருக்கிறது.

௭௯௦. ఇన్ద్రకర్మణేనమః. இந்த்ரகர்மணேநம꞉.

சரணாகதர்களான இந்திராதிகள் நிமித்தமாய்ப் புத்த தேவனாக அவதரித்து மேற்சொல்லிய செயல்களைச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

சரணமடைந்தவர்களை ரட்சிப்பதற்காகவும் துஷ்டர்களைத் தண்டிப்பதற்காகவும் மிகவும் கருணை யுடைய பகவான் கபட அவதாரங்கள் செய்தானாதலால் இது அவனுக்கு நற்குணமே யன்றி குற்றம் அல்லவென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

௭௯௧. మహాకర్మణేనమః. மஹாகர்மணேநம꞉.

இப்படிப்பட்ட குணமான செயல்களை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௯௨. కృతకర్మణేనమః. க்ருதகர்மணேநம꞉.

அந்த ராட்சசர்களை மோகம் அடையச் செய்வதற்காக அவர்கள் நம்பும்படி தான் அனுஷ்டித்த நல்ல நடக்கைகளை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௯௩. కృతాగమాయనమః. க்ருதாகமாயநம꞉.

அதை ஸ்திரப்படுத்துவதற்காகப் புத்தம் அருகம் முதலிய சமய சாஸ்திரங்களை யுண்டாக்கினவனுக்கு நமஸ்காரம்.

௭௯௪. ఉద్భవాయనమః. உத்பவாயநம꞉.

முத்தியுபதேசத்தினாலே அவர்கள் பிறவியை நீக்கினவனுக்கு நமஸ்காரம்.

௭௯௫. సున్దరాయనమః. ஸுந்தராயநம꞉.

அவர்களுடைய நேத்திரங்களையும் மனதையும் அபகரிக்கத்தக்க அழகுள்ளவனுக்கு நமஸ்காரம்

௭௯௬. సున్దాయనమః. ஸுந்தாயநம꞉.

அழகால் அசுரர்களுடைய மனதை நன்றாய்க் கலங்கச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

௭௬௭. రత్ననాభాయనమః. ரத்நநாபாயநம:.

தன்னுடைய வித்துவத்தன்மையை வெளியிடுதற்காகக் காண்பித்த அழகுள்ள நாபியையுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௬௮. సులోచనాయనమః. ஸுலோசநாயநம:.

அப்படியே நல்ல மனமுடையவர்களை அபகரிக்கப்பட்ட நேத்திரங்களையுடையவனுக்கு நமஸ்காரம்.

௭௬௯. అర్కాయనమః. அர்க்காயநம:.

மேற் சொல்லப்பட்டவர்களால் ஆச்சரியத்துடன் மகாத்துமாவென்றும் அதிக தர்மத்தை யுடையவனென்றும் ஸ்தோத்திரம் செய்யும்படி யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௮00. వాజసనాయనమః. வாஜஸநாயநம:.

நாஸ்திக வாதத்தினுல் பிரத்தியட்சமாயிருக்கிற அன்னம் முதலியவைகளைப் புசிக்கிறதே சுகம் வேறுசுகமில்லையென்று ஏற்பாடுகளைச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

௮0௧. శృంగిణేనమః. ஶ்ருங்கிணேநம:.

அஹிம்சையைக் காண்பிக்கத்தக்க மயிலிறகுக்குஞ்சத்தைக் கையிலுடையவனுக்கு நமஸ்காரம்.

௮0௨. జయన్తాయనమః. ஜயந்தாயநம:.

நாஸ்திகவாதத்தினுலே மற்றவாதிகளை ஜெயித்தவனுக்கு நமஸ்காரம்.

௮0௩. సర్వవిజ్జయినేనమః. ஸர்வவிஜ்ஜயிநேநம:.

ஸர்வஜ்ஞனர்களும் தன்னுல் ஜயிக்கப்படும் ஸர்வசக்தியுடையவனைதால் பிரமாண விருத்தமானவைகளையும் அவர்கள் நம்பும்படி செய்தவனுக்கு நமஸ்காரம்.

௮0௪. సువర్ణబిందవేనమః. ஸுவர்ணபிந்தவேநம:.

கேட்கைக்கு இன்பமான தன் சொல்லின் சாதுரியத்தினுலே அவர்களுக்கு அறிவு கெடும்படி செய்தவனுக்கு நமஸ்காரம்.

௮0ரு. అక్షోభ్యాయనమః. அக்ஷோப்யாயநம:.

கம்பீர அதிசயத்தினுலே கலங்காதவனுக்கு நமஸ்காரம்.

அ0௬. సర్వవాగీశ్వరేశ్వరాయనమః. ஸர்வவாகீஸ்வரேஸ்வராயநம꞉.

ஆகையால் வாதிக்கிறதிலும் வாசாலகத்திலும் களைகண்டவ னுக்கு நமஸ்காரம்.

மேலுமேலும் யுக்திகளைப் பிரகஸ்பதியைப்போலச் சொல்லத் தக்கவனென்று ராமாயணத்தில் கூறியிருக்கிறது.

அ0எ. మహాహ్రదాయనమః. மஹாஹ்ரதாயநம꞉.

பாவகர்மமுடையவர்கள் மறுபடியும் கிளம்பாதவர்களாய் மு ழுகிப் போகத்தக்கதும் புண்ணியகர்மமுடையவர்கள் முழுகிமுழுகித் திருப்தி யடையாமலிருக்கிறதுமானமடுவைப்போன்றவனுக்குநமஸ்காரம்.

அ0அ. మహాగర్తాయనమః. மஹாகர்த்தாயநம꞉.

குயுக்தியாக வாதிக்கும் அறிவில்லாதவர்களை ரவரவாதி நரகக் குழிகளையடையச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

இதுவரையில் தன்னுடைய ஆக்கினையை மீறின அசுரர்களை நிக்கிரகித்தவ னென்பதைச்சொல்லிற்று. இனி தன்னிடத்தில் பக்தியுடைய வர்களாய்த் தன் ஆக்கினைக்குவசப்பட்டிருக்கிறவர்களுக் கநுக்கிரகஞ் செய்பவனென்பதைச் சொல்லுகிறது.

அ0௯. మహాభూతాయనమః, மஹாபூதாயநம꞉.

மகாத்மாக்களைத் தன் சொத்தாக வுடையவனுக்கு நமஸ்காரம்.

அர்ச்சுனா என்னுடையதர்மத்தில் சிரத்தையில்லாதவர்களெ ன்னை யடையாமல் மிருத்தியுரூபமான சம்சாரத்தில் பாதிக்கப்படுவார்க ளென்று கீதையில் கூறியிருக்கிறது.

அ௧0. మహానిధయేనమః. மஹாநிதயேநம꞉.

மகாத்துமாக்களைத் தனக்கு நிதியைப்போல அதிக பிரியமாயு டையவனுக்கு நமஸ்காரம்.

அ௧௧. కుముదాయనమః. குமுதாயநம꞉.

இந்தப்பூமியில் தானே அவர்களுடன்கூடிச் சந்தோஷிக்கிறவ னுக்கு நமஸ்காரம்.

அ௧௨. కున్దరాయనమః. குந்தராயநம꞉.

முக்தி பூமியைக் கொடுப்பதும் ஊசி மல்லிகைப் புஷ்பத்தைப் போல நிர்மலமாயிருக்கிறதுமான தன் சொரூபத்தை யறியும் ஞானத்தைக் கொடுக்கிறவனும் குச்சிதமான பாவங்களைப் பிளக்கிறவனுமானவனுக்கு நம ஸ்காரம்.

௮௧௩. కుందాయనమః. குந்தாயநம:.

அவர்களுக்கு முன்புள்ள ஞானபக்தி வைராக்கியங்களுக்கு மேற்பட்ட பரபக்தி பரஞானாதிகளான உயர்ந்த நிலையைக் கொடுக்கிறவனும் மேற்சொல்லியபடியே தன்னால் பிளக்கப்படும் பாவங்களைச் சோதித்து ஒட்டறச்செய்கிறவனுமானவனுக்கு நமஸ்காரம்.

௮௧௪. పర్జన్యాయనమః. பர்ஜன்யாயநம:.

தன்னுடைய தத்துவத்தைத் தெரியப்படுத்தித் தாபத்திரயங்களைப் பரிகரிக்கிற மேகமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௮௧௫. పవనాయనమః. பவனாயநம:.

தன்னை யொழிந்த எல்லாவற்றையும் பரிசுத்தமாக்குமவனுக்கு நமஸ்காரம்.

௮௧௬. అనిలాయనమః. அநிலாயநம:.

அவர்களுக்கு அநுக்கிரகஞ் செய்வதில் ஒருவருடைய பிரேரணம் வேண்டாதவனுக்கு நமஸ்காரம்.

௮௧௭. అమృతాశనాయనమః. அம்ருதாஶநாயநம:.

அவர்களைத் தன்னுடைய குணங்களாகிய அமிர்தத்தை யுண்ணச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௮௧௮. అమృతవపుషేనమః. அம்ருதவபுஷேநம:.

அமிர்தத்தைப் போன்ற தேகத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௮௧௯. సర్వజ్ఞాయనమః. ஸர்வஜ்ஞாயநம:.

அவர்களுக்குச் சக்கியம் அசக்கியம் சாத்தியம் அசாத்தியமாயிருக்கிறவைகளைச் செவ்வையாய்த் தானறிந்தவனுக்கு நமஸ்காரம்.

௮௨௦. సర్వతోముఖాయనమః. ஸர்வதோமுகாயநம:.

அவர்கள் இன்னவிதமாகவே தன்னையடையக்கடவர்களென்கிற நிபந்தனை வைக்காமல் எந்தக் காரணத்தினாலாவது தன்னைச் சுலபமாயடையும்படி யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௮௨௧. సులభాయనమః. ஸுலபாயநம:.

தான் தோஷரகிதனாயிருந்தும் ஆபாஸஜனங்களும் தன்னைக் கிட்டுகைக்குத் தான் தாராளமா யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

குப்ஜையானவள் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திக்குப் பூசும் பரிமளத்தைக் கொடுத்து வஸ்திரத்தைப் பிடித்துக்கொண்டு தன் கிருகத்துக்கு வரும்படி யழைத்துச் சுவாதீனஞ்செய்துகொண்டனளென்று ஸ்ரீ பாகவதத்தில் கூறியிருக்கிறது.

அ௨௨. సువ్రతాయనమః. ஸுவ்ரதாயநம:.

எவ்வகையினுலாவது தன்னை யடைந்தவர்களை ஸர்வபிரகாரத்தாலும் பரிபாலனஞ் செய்யும் திடவிரதத்தையுடையவனுக்கு நமஸ்காரம்.

அ௨௩. సిద్ధాయనమః. ஸித்தாயநம:.

தன்னுடைய தத்துவத்தை யறிந்தவர்களை ரக்ஷிக்கிறதில் அவர்கள் யத்தனம் வேண்டாமலே தானே ரக்ஷிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

எப்பொழுதும் ஸர்வத்தையும் ரக்ஷிக்கிறவனுனதால் தான் சம்ரக்ஷணம் செய்வது ஒரு காரணத்துடன் கூடியதல்லவென்று பிரமாணமிருக்கிறது.

இதுவரையிலும் சொல்லியவைகள் தானே செய்த அவதாரங்களால்
செய்தவைகள். இனிச் சொல்லப்படுபவைகள் ஒருவனைக்
கொண்டு செய்விக்கப்பட்டவைகள்.

அ௨௪. శత్రుజిచ్ఛత్రుతాపనాయనమః. சத்ருஜித்சத்ருதாபநாயநம:.

தன்னுடைய திவ்விய தேஜசினுலே பலமடைந்து சத்துருக்களை ஜயிக்க வல்லவர்களான ககுஸ்தன் புருகுச்சன் முதலானவர்களைக் கொண்டு அசுரர் கந்தருவர் முதலிய துஷ்ட சத்துருக்களைத் தபிக்கச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

அ௨௫. న్యగ్రోధాయనమః. ந்யக்ரோதாயநம:.

தன் திருவடிகளின் கீழிருந்து அஞ்சலி செய்கிறவர்களால் தங்களிடத்தில் கிருபை செய்யாமலே போகவொண்ணுதபடி தடுக்கப்படுமவனுக்கு நமஸ்காரம்.

அஞ்சலியானது சீக்கிரத்தில் பகவானுடைய பிரசாதத்தை யுண்டுபண்ணத் தக்கது. இந்த அஞ்சலியைவிடத் தான்செய்த அபராதங்களுக்குப் பரிஹாரமில்லையென்று பிரமாணமிருக்கிறது.

அ௨௬. ఉదుంబరాయనమః. உதும்பராயநம:.

ஸர்வகுணங்களாலும் மேற்பட்ட அம்பர மென்கின்ற பரமபதத்தில் லக்ஷ்மிமுதலான பரிஜனங்களையுடையவனுக்கு நமஸ்காரம்.

தன் சரீர பூதர்களாயிருக்கிற அந்தந்தத் தேவதைகள் மூலமாய் ஜகத்தை
நியமனம் செய்கிருனென்பதைச் சொல்லுகின்றது.

அ௨௭. అశ్వత్థాయనమః. அஸ்வத்தாயநம:.

இன்றைக்கிருந்து நாளைக்கில்லாமல் அநித்தியமாயிருக்கிற இந்திராதிபதங்களையுடைய தேவதைகளுக்கு நியாமகனுயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

அஉஅ. చాణూరాన్ధ్రనిషూదనాయనమః. சாணூராந்த்ரநிஷூதநாயநம:.

அந்தத் தேவதைகளுக்கு விரோதியான சாணூரனென்கிற மல்லனைச் சங்கரித்தவனுக்கு நமஸ்காரம்.

அஉகூ. సహస్రార్చిషేనమః. ஸஹஸ்ரார்ச்சிஷேநம:.

பரிசுத்தம்செய்தல் உலர்த்துதல் தபிக்கச்செய்தல் பிரகாசஞ்செய்தல் முதலிய தர்மங்களில் சாமர்த்தியமும் உபகாரமுமுள்ளவைகளுமாயிராநின்ற ஆயிரங்கிரணங்களைத் தான் சூரியனிடத்தில் வைத்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

அ௩0. సప్తజిహ్వాయనమః. ஸப்தஜிஹ்வாயநம:.

தேவதைகளைத் திருப்தி செய்கிற ஹவிசுகளைக் கிரகிக்கவும் வகிக்கவும் தக்கவைகளான ஏழுவகைப்பட்ட நாவுகளைத் தான் அக்கினியினிடத்திலிருக்கச் செய்தவனுக்கு நமஸ்காரம்.

அ௩க. సప్తైధసేనమః. ஸப்தைதஸேநம:.

வேதங்களில் ஏழுவிதமாகச் சொல்லப்பட்ட சமித்துக்களை யுடையவனாக அக்கினியைச் செய்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

அ௩உ. సప్తవాహనాయనమః. ஸப்தவாஹநாயநம:.

அவைகளைப் பிரகாசம் செய்கின்ற வைதிக மந்திரங்களுக்கு அபிமானிகளாயிருக்கிற ஏழுகுதிரைகள்பூண்ட ரதத்தையுடைய சூரியனுக்கு நியாமகனானவனுக்கு நமஸ்காரம்.

இந்தப்பிரகாரம் தான் விசேஷமாயிருக்குமிடமான சூரியன்
முதலானவர்களைப்பார்க்கிலும் இன்னம் இவனுக்கு
ள்ள வேறுபாட்டைச் சொல்லுகின்றது.

அ௩௩. అమూర్తయేనమః. அமூர்த்தயேநம:.

பஞ்சபூதகாரியமான ரூபமில்லாதவனுக்கு நமஸ்காரம்.

அ௩ச. అనఘాయనమః. அநகாயநம:.

கர்மவசனல்லாதவனாகையால் கர்மத்தில் முழுகின ஜீவனுக்கு வேறுபட்டிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

அ௩ரு. అచిన్త్యాయనమః. அசிந்த்யாயநம:.

முக்தர்களோடும் சமமாயெண்ணப்படாதவனுக்கு நமஸ்காரம்.

அ௩சு. భయకృతేనమః. பயக்ருதேநம:.

தன் ஆக்கினையை மீறுகிறவர்களுக்குப் பயத்தை யுண்டுபண்ணுகிறவனுக்கு நமஸ்காரம்.

௮௩௭. భయనాశనాయనమః. பயநாஶநாயநம:.

தன் ஆக்கினையை மீருதவர்களுக்குப் பயத்தை நாசஞ்செய்கிற வனுக்கு நமஸ்காரம்.

அணிமாமுதலான அஷ்ட ஐசுவரியங்களை யுடையவ னென்பதைச் சொல்லுகின்றது.

௮௩௮. అణవేనమః. அணவேநம:.

மிகவும் சூக்ஷமமாக இருதயத்திலிருக்கின்ற ஜீவாத்துமாவில் பிரவேசித்திருக்கிற சக்தியை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௮௩௯. బృహతేనమః. ப்ருஹதேநம:.

வியாப்தியினலே பரமாகாசத்தையுந் தன்னுளடக்கிக்கொண்டு பெரிதாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௮௪௦. కృశాయనమః. க்ருஶாயநம:.

எல்லா விடங்களிலும் தடை யில்லாமல் போகும்படி காற்றில் பறக்கும் பஞ்சைப்பார்க்கிலும் அதிக லகுவாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௮௪௧. స్థూలాయనమః. ஸ்தூலாயநம:.

தான் ஓரிடத்திலிருந்துகொண்டே எல்லாவற்றையும் இழுக்கத் தக்க சக்திரூபமான பிராப்தி யென்கிற ஐசுவரியத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௮௪௨. గుణభృతేనమః. குணப்ருதேநம:.

தன் சங்கற்பத்தினலே எல்லாவற்றையும் எப்பொழுதும் தாங்கிக்கொண்டிருக்கிற ஈசத்துவமென்கின்ற ஐசுவரியத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௮௪௩. నిర్గుణాయనమః. நிர்குணயநம:.

ஒன்றுக்கும் வசமல்லாதவனுனதால் அதனதனுடைய சம்பந்தமுண்டாயிருந்தும் அதனதனுடைய குணசம்பந்தமில்லாமையாகிற வசித்துவமென்கின்ற ஐசுவரியத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௮௪௪. మహతేనమః. மஹதேநம:.

தடையற்ற இச்சையினல் செய்யக் கூடாதவைகளையும் நினைத்தமாத்திரத்தில் செய்யத்தக்க சக்தி ரூபமான பிராகாமியமென்கின்ற ஐசுவரியத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

அசரு. అభ్రుతాయనమః. அத்ருதாயநம:.

இப்படிப்பட்ட விசுவரூபமுடையவனானதால் ஓரிடத்தில் ஒன்றி னால் தாங்கப்படாதவனுக்கு நமஸ்காரம்.

அசசு. స్వధృతాయనమః. ஸ்வத்ருதாயநம:.

இந்த அணிமாமுதலிய ஐசுவரியங்கள் சாமர்த்தியத்தினாலே சம் பாதிக்கப்படாமல் சுபாவமாயுடையவனுக்கு நமஸ்காரம்.

அசஎ. స్వాస్యాయనమః. ஸ்வாஸ்யாயநம:.

ஒருக்கால் மறைந்து பின்பு வெளிப்படுகிற முக்தனுடைய ஐசுவ ரியத்தைப்போலன்றி எப்பொழுதும் பிரகாசமான ஐசுவரியத்தை யுடை யவனுக்கு நமஸ்காரம்.

அசஅ. ప్రాగ్వంశాయనమః. ப்ராக்வம்ஶாயநம:.

அநாதிமுக்தர்களான நித்திய சூரிகளுக்கு எப்பொழுதும் சொரூ பம் பிரகாசகரமா யிருக்கும்படி செய்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

இதினால் நித்திய சூரிகளுடைய ஐசுவரியத்தைப் போலப் பராதீ னமாகாத ஐசுவரியத்தை யுடையவனென்பது கருத்து.

அசகூ. వంశవర్ధనాయనమః. வம்ஶவர்தநாயநம:.

மேற்சொல்லியபடி தன் சந்தானமாயிராநின்ற நித்திய சித்தர்க ளைத் தன்னை அநுபவிக்கச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

அரு௦. భారభృతేనమః. பாரப்ருதேநம:.

முக்தர்களுக்குப் பாரத்தை விடுவிக்கிறதும் சொரூபம் பிரகாசிக் கச்செய்கிறதும் தன்னை யடையச் செய்கிறதுமாகிற பாரங்களைத் தரித்தவ னுக்கு நமஸ்காரம்.

அருக. కథితాయనమః. கதிதாயநம:.

மேற்சொல்லியதும் இனிச் சொல்லத்தக்கதுமான குணங்களை யு டையவனாக வேதமுதலிய ஸர்வசாஸ்திரங்களிலேயும் சொல்லப்பட்டிரு க்கிறவனுக்கு நமஸ்காரம்.

அருஉ. యోగినేనమః. யோகிநேநம:.

ஸமஸ்த குணங்களும் தன்னிடத்திலிருக்கத்தகும்படியாகிய அ கடிதகடனா ரூபமான சக்தியை எப்பொழுதுமுள்ளவனுக்கு நமஸ்காரம்.

அ௫௩. యోగీశాయనమః. யோகீஶாயநம:.

பிறந்தது முதல் சுபாவமாய் யோகிகளான சனகாதிகளுடைய தியானத்தை நிரந்தரம் நடத்துகிறவனுக்கு நமஸ்காரம்.

சனகாதிகளைச் சகல தேவருஷிகளைப் பார்க்கிலும் பரிசுத்தர்களாகச் செய்தவனென்று பிரமாணமிருக்கிறது.

அ௫௪. సర్వకామదాయనమః. ஸர்வகாமதாயநம:.

யோகத்தில் நழுவினவர்களுக்கு அணிமா முதலிய ஐசுவரியங்களைக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

யோகத்தில் பிரஷ்டரானவர்கள் புண்ணிய லோகங்களில் வாசஞ்செய்து மறுபடியும் பூலோகத்தில் பிறப்பார்களென்று பிரமாணமிருக்கிறது.

அ௫௫. ఆశ్రమాయనమః. ஆஶ்ரமாயநம:.

தன்னைச் சுலபமாயறியத்தக்க ஞானம் நடையாடுகிற வைஷ்ணவ கிருகங்களில் அவர்களைப் பிறக்கச் செய்து சிரமத்தைப் போக்குகிறவனுக்கு நமஸ்காரம்.

சுசியும் ஞானசம்பந்தமுமுடையவர்களா யிருக்கிறவர்களுடைய கிருகங்களில் யோகப்பிரஷ்டர்கள் பிறப்பார்களென்று பகவத்கீதையில் கூறியிருக்கிறது.

அ௫௬. శ్రమణాయనమః. ஶ்ரமணாயநம:.

புண்ணியலோக போகத்தினாலும் ஜன்மத்தினாலும் க்ஷீணிக்காமலிருக்கிற பூர்வ வாசனையையுடையவர்களை அந்த வைஷ்ணவர்களுடைய கிருகங்களில் ஆயாசமில்லாமல் யோகத்தை அப்பியாசிக்கச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

அ௫௭. క్షామాయనమః. க்ஷாமாயநம:.

இந்தப்பிரகாரம் தன்னைத் தியானிப்பதற்கு யத்தனஞ்செய்த மாத்திரத்தில் அவர்கள் யோகப்பிரஷ்டர்களாயிருந்தாலும் சகல ஆபத்துகளையும் தாண்டுதற்குச் சாமர்த்தியமுள்ளவர்களாகச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

அ௫௮ సుపర్ణాయనమః. ஸுபர்ணாயநம:.

இந்தப்பிரகாரம் மறுபடியும் யோகத்தை யடைந்தவர்களுக்கு யோகத்தைப் பரிபக்குவஞ்செய்வித்து அவர்களைப் பிரகிருதிக்கு மேற்பட்ட பரமபதத்தையடையச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௮௬௯. వాయువాహనాయనమః. வாயுவாஹநாயநம:.

அவர்கள் பிரபல ஹேதுக்களாலே கெட்டுப்போனபோதிலும் வாயுவைப்போன்ற வேகத்தையுடைய கருடனைக்கொண்டு அவர்களை யுத்தாரணஞ் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

பிரமருஷி சாபத்தினாலே சாமர்த்தியமற்றவனாய் அதப்பதித்துவிட்ட (கீழேவிழுந்துபோன) பரமபாகவதனான வசுவைக் கருடனாலே மறுபடியும் உபரிசரனாக (மீதுசஞ்சரிப்பவனாக) செய்தானென்று பாரதத்தில் கூறியிருக்கிறது.

௮௭௦. ధనుర్ధరాయనమః. தநுர்தராயநம:.

முட்களைப் போன்ற சத்துருக்களை நீக்கிப்போடுகிறதற்காகத் தனுசைப் பிடித்தவனுக்கு நமஸ்காரம்.

௮௭௧. ధనుర్వేదాయనమః. தநுர்வேதாயநம:.

சுரர் நரர் முதலானவர்கள் வில்வித்தை முதலியவைகளையறியும்படி அந்தச் சாஸ்திரங்களை யுண்டாக்கினவனுக்கு நமஸ்காரம்.

௮௭௨. దణ్డాయనమః. தண்டாயநம:.

வேததருமங்களைப் பரிபாலனஞ்செய்கிற அரசர்களைக்கொண்டு தண்டநீதியினாலே துஷ்டர்களை யடக்கினவனுக்கு நமஸ்காரம்.

௮௭௩. దమయిత్రేనమః. தமயித்ரேநம:.

ராவணாதிகளைப்போன்ற துஷ்டர்களைத் தானே அவதரித்து நிக்கிரகஞ் செய்தவனுக்கு நமஸ்காரம்.

௮௭௪ అదమాయనమః. அதமாயநம:.

தன்னையன்றித் துஷ்டநிக்கிரகஞ்செய்ய வேறே ஒருவனுமில்லாதவனுக்கு நமஸ்காரம்.

௮௭௫. అపరాజితాయనమః. அபராஜிதாயநம:.

இந்தப்பிரகாரம் எல்லாவழிகளாலுமெப்பொழுதும் ஒருவராலும் தடங்கலில்லாமல் சிக்ஷிக்கிறவனாகையால் அபஜயமில்லாதவனுக்கு நமஸ்காரம்.

௮௭௬. సర్వసహాయనమః. ஸர்வஸஹாயநம:.

அந்நியர்களான ஸகல தேவதைகளையும் தன்னுடைய ஆக்கினையால் மந்தமதிகளானவர்கள் ஆராதனஞ் செய்யும்படி தான் அந்தத் தேவதைகளைத் தாங்கிக்கொண்டிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

அசுஎ. నియన్త్రేనమః. நியந்த்ரே நமஃ.

அந்தத் தேவதாந்தரங்களில் ருசியையுடையவர்களுக்கு அதை மென்மேலும் விருத்திசெய்து அவர்களுக்கு நியாமகனானவனுக்கு நமஸ்காரம்.

அசுஅ. నియమాయనమః. நியமாயநமஃ.

அதற்குப் பலனான போகங்களை யவர்களடையும்படி யேற்பாடுகளைச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

அசுகூ. యమాయనమః. யமாயநமஃ.

அந்தந்தக் கர்மபலத்தைக் கொடுக்க நியாமகர்களான யமன் முதலானவர்களுக்கு நியமனஞ்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

இதுவரையிலும் ரஜோகுணதமோகுணங்களுக்கு நியாமகனென்பதைச் சொல்லப்பட்டது. இனிச் சத்துவகுணத்துக்கு நியாமகனென்பதைச் சொல்லுகின்றது.

அஎ0. సత్వవతేనమః. ஸத்வவதேநமஃ.

மிகுந்த பிரகாசத்துக்கும் லகுவாயிருக்கைக்கும் சுகத்துக்கும் காரணமாய் மோக்ஷத்துக்கு மூலமான சத்துவகுணத்தை நியமனஞ் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

அஎக. సాత్త్వికాయనమః. ஸாத்விகாயநமஃ.

சத்துவகுணத்தின் பலன்களாகிய தருமம் ஞானம் வைராக்கியமென்கின்ற ஐசுவரியங்களை யேற்பாடுசெய்கிறவனுக்கு நமஸ்காரம்.

அஎஉ. సత్యాయనమః. ஸத்யாயநமஃ.

சாஸ்திரங்களாலே சொல்லப்படுகிறவனாகையால் யதார்த்தமான வைபவத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

அஎ௩. సత్యధర్మపరాయణాయనమః. ஸத்யதர்மபராயணாயநமஃ.

சாத்விகர்களாலே சொல்லப்படுகிற வுத்தமமான தருமத்தைத் தனக்கு மிகவும் பிரியமாகவுடையவனுக்கு நமஸ்காரம்.

அஎ௪. అభిప్రాయాయనమః. அபிப்ராயாயநமஃ.

மேற்சொல்லிய தெளிவுடைய சாத்விகர்களாலே ஒரு பிரயோசனத்தை யெண்ணாமலேசெய்யப்படும் ஆராதனத்துக்குரியவனானவனுக்கு நமஸ்காரம்.

௮௭௫. ప్రియార్హాయనమః. ப்ரியார்ஹாயநம:.

இந்தப்பிரகாரம் அந்த ஞானிகளிடத்தில் தான் பிரீதிசெய்யத் தக்கவனுயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௮௭௬. అర్హాయనమః. அர்ஹாயநம:.

வேறென்றிலும் ஆசையில்லாத அந்த ஞானிகள் அடைகைக்கு யோக்கியனுயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௮௭௭. ప్రియకృతేనమః. ப்ரியக்ருதேநம:.

ஒருபலத்தை யாசைபட்டுத் தன்னை யடைந்தவர்களையும் அவர்கள் கருத்தையநுசரித்துத் தனக்கு இஷ்டர்களாகச் செய்துகொள்கிறவனுக்கு நமஸ்காரம்.

௮௭௮. ప్రీతివర్ధనాయనమః. ப்ரீதிவர்தநாயநம:.

அதன்பின்பு தன்னுடைய குணங்களை யவர்களுக்கு மென்மேலும் பிரகாசஞ்செய்து தான் அவர்களிடத்தில் கொண்டபிரீதியை விருத்திசெய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௮௭௯. విహాయసగతయేనమః. விஹாயஸகதயேநம:.

இப்படிக்கு முடிந்த பக்தியையுடையவர்கள்பரமபதத்தையடையச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௮௮௦. జ్యోతిషేనమః. ஜ்யோதிஷேநம:.

பரமபதத்துக்குப்போகும் வழியாயிருக்கிற அர்ச்சிராதிமார்க்கத்தில் முந்தினவனுன அர்ச்சிஸ்என்கிற தேவதைக்கு நியாமகனுனவனுக்கு நமஸ்காரம்.

அர்ச்சிராதிமார்க்கமென்கிறது பரமபதத்துக்குப் போகும்வழி. அதில் நடத்துகிறவர்கள் பன்னிரண்டு பேர்களென்று வேதாந்தபாகத்தில் கூறியிருக்கிறது.

௮௮௧. సురుచయేనమః. ஸுருசயேநம:.

சூரிய உதயத்தினுல் நன்றுகப் பிரகாசிக்கிற பகலுக்கு அபிமானியான தேவதைக்கு நியாமகனுனவனுக்கு நமஸ்காரம்.

௮௮௨. హుతభుగ్విభవేనమః. ஹுதபுக்விபவேநம:.

அமிர்தரூபமான ஹோமம்பண்ணப்பட்டபொருளைப் புசிக்கிற சந்திரன் பூரணமாகுங்காலமான சுக்கிலபக்ஷத்துக்கு அபிமானியான தேவதைக்கு நியாமகனுனவனுக்கு நமஸ்காரம்.

அஅங. రవయేనమః. ரவயேநம:.

ஞானிகள் முத்தியடைதற்கு முக்கியகாலமாய்க் கொண்டாடப்பட்ட உத்தராயணத்துக்கு அபிமானியானதேவதைக்கு நியாமகனானவனுக்கு நமஸ்காரம்.

அஅச. విరోచనాయనమః. விரோசநாயநம:.

சூரியன் தன் ரதத்திற்சென்று பிரகாசிக்கும் அயனங்களிரண்டுங் கூடின சம்வச்சரத்துக்கு அபிமானியானதேவதைக்கு நியாமகனானவனுக்கு நமஸ்காரம்.

அஅரு. సూర్యాయనమః. ஸூர்யாயநம:.

தன்னலெப்பொழுதுஞ் சஞ்சரிக்கிற வாயுதேவதைக்கு நியாமகனானவனுக்கு நமஸ்காரம்.

அஅசா. సవిత్రేనమః. ஸவித்ரேநம:.

மழை பயிர் முதலியவைகளை யுண்டுபண்ணுஞ் சூரியதேவதைக்கு நியாமகனானவனுக்கு நமஸ்காரம்.

அஅஎ. రవిలోచనాయనమః. ரவிலோசநாயநம:.

சூரியகிரணங்களைப்பெற்று அதினல் சந்திரன் விருத்தியடையும்படி செய்து அவனுக்கு நியாமகனானவனுக்கு நமஸ்காரம்.

அஅஅ. అనన్తహుతభుగ్భోక్త్రేనమః. அநந்தஹுதபுக்போக்த்ரேநம:.

உலகத்துக்குப் பூஜ்ஜியராய் ஹவிசைப் புசிக்கிற இந்திரனுக்கும் பிரஜைகளைப் பாலனஞ்செய்கிற பிரமாவுக்கும் நியாமகனானவனுக்கு நமஸ்காரம்.

அஅகூ. సుఖదాయనమః. ஸுகதாயநம:.

சேதனனுக்கு விரசைக்கரையிலிருக்கும் அமாநவனுடைய ஸ்பரிசத்தினற் சமுசாரத்தை வாசனையுடன் பரிகரிப்பித்துத் தன்னை யடைதலாகிய சுகத்தைக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

அகூ0. నైకదాయనమః. நைகதாயநம:.

இங்கிருந்து தன்னிடம்வரும் முக்தர்களுக்குத் திவ்விய அப்சரசுக்களைக்கொண் டநேகமான மாலை அஞ்சனம் வஸ்திரம் முதலிய தனக்குள்ள அலங்காரங்களைக் கொடுப்பிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

அகூக. అగ్రజాయనమః. அக்ரஜாயநம:.

இப்படித் தன்னிடம்வந்த முக்தர்களைத் தன்னோடொத்தவர்களாகச் செய்து தன்முன்பாகத் தன்னைத்தரிசித்து ஆனந்திக்கச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

அகூஉ. అనిర్విణ్ణాయనమః. அநிர்விண்ணாயநம:.

இந்தப்பிரகாரம் ஆஶ்ரிதர்களை மகத்தான வுபாயத்தினாலே சம்சாரமாகிய பள்ளத்திலிருந்து மேலுக்கு எழுப்பித் தன்னை யடையச்செய்து சோகமற்றவர்களாக்கி யவர்களைப் பார்த்துத் தானுஞ் சோகமற்றவனாகுமவனுக்கு நமஸ்காரம்.

அகூ௩. సదామర్షిణేనమః. ஸதாமர்ஷிணேநம:.

அதுமுதல் ஸர்வகாலமுந் தன்னை யநுபவிக்கச் சக்தராகும்படி யவர்களை நிருவகித்துக்கொள்ளுஞ் சுபாவத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

அகூச. లోకాధిష్ఠానాయనమః. லோகாதிஷ்டாநாயநம:.

முக்தர்கள் சுகமாய்ச் சஞ்சரிக்கும்படியான லோகங்களுக் காதாரமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

அகூ௫. అద్భుతాయనమః. அத்புதாயநம:.

எப்பொழுது மெல்லாராலு மனுபவிக்கப்பட்டாலும் நவநவமாக மிகவும் ஆச்சரியப்படுகைக்குரியவனானவனுக்கு நமஸ்காரம்.

அகூ௬. సనాతేనమః. ஸநாதேநம:.

அவர்களால் செவ்வையாகப் பஜிக்கப்படுமவனுக்கு நமஸ்காரம்.

அகூஎ. సనాతనతమాయనమః. ஸநாதநதமாயநம:.

புராதனமாயிருந்த போதிலு மப்பொழுதைக் கப்பொழுது நூதனமாய்க் காணப்படுகிற ரூபத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

அகூஅ. కపిలాయనమః. கபிலாயநம:.

நீலமேகத்தின் மத்தியில் மின்னுகின்ற மின்னற் கொடிகளைப் போற் பிரகாசிக்கின்ற நிறத்தையுடையவனுக்கு நமஸ்காரம்.

அகூகூ. అవ్యయకపయేనమః. அவ்யயகபயேநம:.

தானுமந்த ரூபத்தின் அனுபவசுகத்தை யெப்பொழுதும் அடைந்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூ00. స్వస్తిదాయనమః. ஸ்வஸ்திதாயநம:.

இந்தப்பிரகாரம் மஹாமங்களங்களைக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௦௧. స్వస్తికృతేనమః. ஸ்வஸ்திக்ருதேநம:.

தன்னுடைய குணங்களாலே ஆத்துமாக்களுக்குத் தன்னை யனுபவிக்கவேண்டுமென்கிற மனோரதத்தை யுண்டாக்குகிறவனுக்கு நமஸ்காரம்.

௯௦௨. స్వస్తయేనమః. ஸ்வஸ்தயேநம:.

தானும் பரமமங்களமா யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௦௩. స్వస్తిభుజేనమః. ஸ்வஸ்திபுஜேநம:.

ஸமஸ்த மங்களங்களையு மெப்பொழுதும் பாலனஞ் செய்கிறவனானவனுக்கு நமஸ்காரம்.

௯௦௪. స్వస్తిదక్షిణాయనమః. ஸ்வஸ்திதக்ஷிணாயநம:.

தன்னைக் கொடுக்கையாகிற தீர்க்கசத்ரத்தைச் செய்விக்குமவர்களுக்குத் தன்னுடைய கைங்கரியத்துக் கனுகுணமான திவ்விய தேகம் சக்திமுதலிய மங்களங்களைத் தக்ஷிணையாக்க் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௦௫. అరౌద్రాయనమః. அரௌத்ராயநம:.

பரம ஐசுவரியத்தையுடையவனாயிருந்தும் உக்கிரமில்லாத குணத்தினாலே குளிர்ந்திருப்பவனுக்கு நமஸ்காரம்.

௯௦௬. కుండలినేనమః. குண்டலிநேநம:.

தனக்குத் தகுந்த திவ்விய பூஷணத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௯௦௭. చక్రిణేనమః. சக்ரிணேநம:.

அப்படியே திவ்விய ஆயுதத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௯௦௮. విక్రమిణేనమః. விக்ரமிணேநம:.

கம்பீரத் தன்மைக்குத்தகுந்த லீலையான நடையை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௯௦௯. ఊర్జితశాసనాయనమః. ஊர்ஜிதஶாஸநாயநம:.

பிரமனாலும் சிவனாலும் இந்திரனாலும் மீறக்கூடாத ஆக்கினையை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௬௧௦. 𑌶𑌬𑍍𑌦𑌾𑌤𑌿𑌗𑌾𑌯𑌨𑌮𑌃. ஶப்தாதிகாயநம꞉.

ஆயிரம் நாவுகளையுடைய ஆதிசேஷனாலும் அனந்தம் பிரிவுகளையுடைய வேதங்களாலும் ஸரஸ்வதியினாலுஞ் சொல்லிமுடிக்கவொண்ணாத மகிமையுடையவனுக்கு நமஸ்காரம்.

இனிக் கஜேந்திர மோக்ஷத்தைச் சொல்லுகின்றது.

௬௧௧. 𑌶𑌬𑍍𑌦𑌸𑌹𑌾𑌯𑌨𑌮𑌃. ஶப்தஸஹாயநம꞉.

தெளிவில்லாதவார்த்தையையுடைய திரியக்குஜந்துவான கஜேந்திரனுடைய துயரவார்த்தையைக்கேட்டு மஹாபாரத்தைச் சுமந்தவன்போல் வருத்தமடைந்தவனுக்கு நமஸ்காரம்.

௬௧௨. 𑌶𑌿𑌶𑌿𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. ஶிஶிராயநம꞉.

துயரவார்த்தையைக்கேட்டவுடனதிசீக்கிரமாய் வந்தவனுக்கு நமஸ்காரம்.

௬௧௩. 𑌶𑌰𑍍𑌵𑌰𑍀𑌕𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. ஶர்வரீகராயநம꞉.

கேட்டவுடன் சக்கரமுதலிய ஆயுதங்களைக் கையிலுடையவனாய்த் தடாகத்திற்கு வந்தவனுக்கு நமஸ்காரம்.

௬௧௪. 𑌅𑌕𑍍𑌰𑍂𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. அக்ரூராயநம꞉.

கஜராஜனை விடுவிக்கிறதற்காகக் கையிலேந்திய ஆயுதங்களாலே முதலையைச் சீக்கிரமாய்ச் சேதித்தவனுக்கு நமஸ்காரம்.

௬௧௫. 𑌪𑍇𑌶𑌲𑌾𑌯𑌨𑌮𑌃. பேஶலாயநம꞉.

அதிசீக்கிரமாய்ச் சென்றதினாலே கலைந்த மாலை பூஷண வஸ்திரங்களின் அழகுள்ளவனானவனுக்கு நமஸ்காரம்.

௬௧௬. 𑌦𑌕𑍍𑌷𑌾𑌯𑌨𑌮𑌃. தக்ஷாயநம꞉.

சீக்கிரமாய் வந்தவனுக்கு நமஸ்காரம்.

௬௧௭. 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌯𑌨𑌮𑌃. தக்ஷிணாயநம꞉.

சமாதான வசனங்களாலே கஜேந்திரனுக்குத் துயரைப்போக்கி யனுகூலஞ்செய்தவனுக்கு நமஸ்காரம்.

௬௧௮. 𑌕𑍍𑌷𑌮𑌿𑌣𑌾𑌂𑌵𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. க்ஷமிணாம்வராயநம꞉.

அந்தக் கஜேந்திரனைப் பார்த்தபின்பு மனத்தில் தைரியமடைந்தவனுக்கு நமஸ்காரம்.

கூகக. 𑌵𑌿𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑌮𑌾𑌯𑌨𑌮𑌃. வித்வத்தமாயநம :.

கஜேந்திரனுடைய துயரைப் போக்கும்வகையை நன்றாயறிந்தவனுக்கு நமஸ்காரம்.

கூஉ0. 𑌵𑍀𑌤𑌭𑌯𑌾𑌯𑌨𑌮𑌃. வீதபயாயநம :.

கஜேந்தராழ்வானை ஸ்பரிசித்துக் கலக்கையாலே பயம் நீங்கினவனுக்கு நமஸ்காரம்.

கூஉக. 𑌪𑍁𑌣𑍍𑌯𑌶𑍍𑌰𑌵𑌣𑌕𑍀𑌰𑍍𑌤𑌨𑌾𑌯𑌨𑌮𑌃. புண்யஸ்ரவணகீர்த்தநாயநம :.

கஜேந்திர மோக்ஷத்தைச் சொன்னாலும் கேட்டாலும் அவர்கள் பிறவியைப்போக்குகிறவனுக்கு நமஸ்காரம்.

கூஉஉ. 𑌉𑌤𑍍𑌤𑌾𑌰𑌣𑌾𑌯𑌨𑌮𑌃 உத்தாரணாயநம :.

கஜேந்திரனையும் முதலையையும் தடாகத்திலிருந்து மேலேறச்செய்தவனுக்கு நமஸ்காரம்.

கூஉ௩. 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌿𑌘𑍍𑌨𑍇𑌨𑌮𑌃. துஷ்க்ருதிக்நேநம :.

பாவியான முதலையைக் கொன்றவனுக்கு நமஸ்காரம்.

கூஉச. 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌯𑌨𑌮𑌃. புண்யாயநம :.

இந்தக் கீர்த்தியினாலே நம்மைப் போன்றவர்களையும் பரிசுத்தஞ்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூஉரு. 𑌦𑍁𑌃𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌨𑌾𑌶𑌨𑌾𑌯𑌨𑌮𑌃 துஸ்வப்நநாசநாயநம :.

கஜேந்திரனையும் முதலையையும் அந்தத் தடாகத்தையும் கீர்த்தனைசெய்கிறவர்களுக்குக் கெட்டசொப்பனங்களைப் பரிகாரஞ்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூஉசு. 𑌵𑍀𑌰𑌘𑍍𑌨𑍇𑌨𑌮𑌃. வீரக்நேநம :.

அந்தக்கஜேந்திரனை யுபத்திரவப்படுத்திய வீரமுள்ள முதலையைக்கொன்றவனுக்கு நமஸ்காரம்.

கூஉஎ. 𑌰𑌕𑍍𑌷𑌣𑌾𑌯𑌨𑌮𑌃. ரக்ஷணாயநம :.

அந்தக்கஜேந்கிரனை ஸ்பரிசத்தாலும் ஆலிங்கனத்தாலும் சமாதானவாக்கியங்களாலும் ஸம்ரக்ஷித்தவனுக்கு நமஸ்காரம்.

கூஉஅ. 𑌸𑌨𑍍𑌤𑌾𑌯𑌨𑌮𑌃. ஸந்தாயநம :.

இந்தப்பிரகாரம் ஆஸ்ரிதர்களைச் செவ்வையாய் ரக்ஷித்து விருத்திசெய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூஉகூ. జీవనాయనమః. ஜீவநாயநம ஃ.

தன்கரங்களாற் கொன்றதினுலே முதலையையுங் கந்தருவனுக ஜீவிக்கச்செய்தவனுக்கு நமஸ்காரம்.

கூ௩0. పర్యవస్థితాయనమః. பர்யவஸ்த்திதாயநம ஃ.

இந்தப்பிரகாரம் வாச்சலியத்தினுலே கஜேந்திரனுக்கு நாலுபக்கங்களிலும் நின்றவனுக்கு நமஸ்காரம்.

கூ௩க. అనన్తరూపాయనమః. அநந்தரூபாயநம ஃ.

இப்படிப்பட்ட அநந்த ரூபத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

கூ௩உ. అనన్తశ్రియేనమః. அநந்தஸ்ரீயேநம ஃ.

பக்தர்களுக்குக் கொடுக்கத்தக்கதும் தன்னையடைவது முடிவானதுமாகிய அநந்த ஐசுவரியத்தையுடையவனுக்கு நமஸ்காரம்.

கூ௩௩. జితమన్యవేనమః. ஜிதமந்யவேநம ஃ.

சரணுகதனுன் கஜேந்திரனுக்குத் துவேஷியாகிய முதலையினிடத்திற்செய்த கோபத்தை யதைக்கொன் றடக்கிக்கொண்டவனுக்கு நமஸ்காரம்.

கூ௩௪. భయాపహాయనమః. பயாபஹாயநம ஃ.

ஆதரவற்றோமென்று நம்மைப்போன்றவர்களுடையும் பயத்தையும் பரிகரிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூ௩௫. చతురశ్రాయనమః. சதுரஸ்ராயநம ஃ.

தன்னையடைந்தவர்களை ரக்ஷிக்கவேண்டுவது ஞாயமாதலால் முதலையைக் கொன்று கஜேந்திரனை ரக்ஷித்தாலும் தான் யாவர்க்குஞ் சமமாயிருக்கிறவனென்பதற்குக் குறைவு வராமலிருக்கிறவனுக்குநமஸ்காரம்.

கூ௩௬. గభీరాత్మనేనమః. கபீராத்மநேநம ஃ.

நான்குமுகங்களையுடைய பிரமன் முதலானவர்களாலே யறிதற்கு அசக்கியமான காம்பீரியத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

கூ௩௭. విదిశాయనమః. விதிசாயநம ஃ.

அவர்களுடைய வினயத்தோடும் திணறலோடுங் கூடிய துதிவாக்கியங்களுக்கெட்டாத வெகுதூரத்திலிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூ௩அ. వ్యాదిశాయనమః. வியாதிசாயநம ஃ.

அவர்கள் விரும்பும் ஸ்தானவிசேஷங்களைக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்,

௯௩௯. ದಿಶಾಯನಮಃ. திசாயநம ஃ.

தான் அவர்களைக் கஜேந்திரனைப்போ லந்தரங்க விர்த்திக்கு ஆளாகக் கொள்ளாமல் அவர்களை வெளிச்செயலுக்கு ஆளாக்கிக் கொண்டிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

திரியக்குகளா யிருக்கிற பக்தர்களுக்கும் வசனுயிருந்தும் பிரமாதிகளுக்குச் சொற்பபலனைக் கொடுக்கிறதற்குக் காரணஞ்சொல்லுகின்றது.

௯௪0. ಅನಾದಯೇನಮಃ, அநாதயேநம ஃ.

பிரமாதிகள் வேறுபலன்களை யாசைப்படுகிறவர்களாகையால் தன்னையடைவதே பயனுக அவர்களா லபேக்ஷிக்கப்படாதவனுக்கு நமஸ்காரம்.

௯௪௧. ಭುವೇನಮಃ. புவேநம ஃ.

தான் அவனுக்குச் சேஷனென்றறிந்து அதனுல் சொரூபம் பெற்றவனுயுள்ளவனுக்கு நமஸ்காரம்.

௯௪௨. ಭುವಾಯನಮಃ. புவாயநம ஃ.

அத்தன்மையான தாசர்களுக்கு வாசஸ்தானமா யுள்ளவனுக்கு நமஸ்காரம்.

இத்தன்மையான நீ இனி வருங்காலமெல்லாம் என்னிடத்திலேயே வாசம் பண்ணப்போகிருய் இதற்குச் சமுசயமில்லையென்று பகவான் கூறி யிருக்கிறதாகப் பிரமாணமிருக்கிறது.

௯௪௩. ಲಕ್ಷ್ಮ್ಯೈನಮಃ. லக்ஷ்ம்யைநம ஃ.

அவர்களுக்கு ஸர்வஸம்பத்து ரூபமா யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௪௪. ಸುವೀರಾಯನಮಃ ஸுவீராயநமஃ.

அவர்களுக்கு வருமாபத்துகளைப் பரிகரிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௪௫. ರುಚಿರಾಙ್ಗದಾಯನಮಃ. ருசிராங்கதாயநம ஃ.

அவர்களுக்கு அதிமனேகரமாயும் அனுபவ யோக்கியமாயு மிராநின்ற தன்தேகத்தைக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

பகவானுடைய ஸமஸ்தமான செயல்களுக்கும் பிரயோசனத்தைச் சொல்லுகின்றது.

௯௪௬. ಜನನಾಯನಮಃ. ஜநநாயநம ஃ.

அந்நியர்களையுந் தன்னையனுபவிக்கத்தக்க கரணங்களையுடையவர்களாகச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௪௭. 𑌜𑌨𑌜𑌨𑍍𑌮𑌾𑌦𑌯𑍇𑌨𑌮𑌃. ஜநஜந்மாதயேநம ஃ.

அந்நியர்களுடைய ஜன்மத்தையுந் தன்னைச்சேவிப்பது முதலானவைகளால் ஸபலமாகச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௪௮. 𑌭𑍀𑌮𑌾𑌯𑌨𑌮𑌃 பீமாயநமஃ.

இவ்விதமான மஹா அனுக்கிரகத்துக்குப் புறம்பானவர்களுக்கு நரகமுதலியவைகளைக்கொடுத்துப் பயங்கரமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௪௯. 𑌭𑍀𑌮𑌪𑌰𑌾𑌕𑍍𑌰𑌮𑌾𑌯𑌨𑌮𑌃. பீமபராக்ரமாயநம ஃ.

உலகத்துக்குத் தீமைசெய்வதில் ஆசக்தியுடைய இரண்ணியகசிபு முதலானவர்களுக்குப் பயங்கரமான பராக்கிரமத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

௯௫0. 𑌆𑌧𑌾𑌰𑌨𑌿𑌲𑌯𑌾𑌯𑌨𑌮𑌃. ஆதாரநிலயாயநம ஃ.

தாங்கள் தருமத்தையநுஷ்டித்து அதனாலுலகத்துக் காதாரமாயிருந்துள்ள பிரகலாதன் விபீஷணன் பாண்டவர்கள் முதலானவர்களுக்குச் சகாயமானவனுக்கு நமஸ்காரம்.

௯௫க. 𑌧𑌾𑌤𑍍𑌰𑍇𑌨𑌮𑌃. தாத்ரேநம ஃ.

தானும் அருச்சுனன் முதலியவர்கள் மூலமாய்த் தருமங்களை வெளிப்படுத்தி யுலகத்துக் காதாரமா யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௫௨. 𑌪𑍁𑌷𑍍𑌪𑌹𑌾𑌸𑌾𑌯𑌨𑌮𑌃. புஷ்பஹாஸாயநம ஃ.

தன்னையனுபவிக்கச் சக்தியுடையவர்களுக்குப் புஷ்பத்தின் மலர்ச்சியைப்போலப் போக்கியனா யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௫௩. 𑌪𑍍𑌰𑌜𑌾𑌗𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. ப்ரஜாகராயநமஃ.

அவர்களைக் கிருஷிசெய்கிறவன் பயிரைக் காப்பதுபோல் இரவும் பகலும் விழித்துக்கொண்டிருந்து காப்பவனுக்கு நமஸ்காரம்.

௯௫௪. 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌗𑌾𑌯𑌨𑌮𑌃. ஊர்த்வகாயநம ஃ.

ஜீவர்களைத் தானுறங்காமலே காக்கிற சுபாவமுடையவனாகையால் பெரியவனா யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௫௫. 𑌸𑌤𑍍𑌪𑌥𑌾𑌚𑌾𑌰𑌾𑌯𑌨𑌮𑌃. ஸத்பதாசாராயநம ஃ.

சுபாவமாய்ச் சாத்விகமான தனக்குத் தொண்டுசெய்கையாகிற வழியிலே அவர்களைநடக்கச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

௯௫௬. 𑌪𑍍𑌰𑌾𑌣𑌦𑌾𑌯𑌨𑌮𑌃. ப்ராணதாயநம ஃ.

இந்தப்பிரகாரம் சம்சாரமாகிய விஷத்தினாலே மூர்ச்சையடைந்த ஆத்மாவையுடையவர்களுக்கு ஆத்தும உஜ்ஜீவனத்தைக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கருஎ. ப்ரணவாயநம:. ப்ரணவாயநம:.

பிரணவத்தினாலே சேஷத்வரூப சம்பந்தத்தை ஆத்மாக்களுக்குத் தெரியப்படுத்தித் தன்னுடைய சரணாரவிந்தங்களிலவர்களை நமஸ்கரிக்கச் செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கருஅ. பணாயநம:. பணாயநம:.

அவர்கள் தன்னடியார்களாயிருக்க அதற்கு நேர்விரோதமாய் அவர்களைத் தன்னோடு சமானர்களாகச் சொல்லுகிறவனுக்கு நமஸ்காரம்.

கருகூ. ப்ரமாணாயநம:. ப்ரமாணாயநம:.

சமுசயம் விபரியயம் இல்லாதபடி வேதரகசியங்களான பரமார்த்தங்களை வெளிப்படுத்தினவனுக்கு நமஸ்காரம்.

கசுo. ப்ராணநிலயாயநம:. ப்ராணநிலயாயநம:.

பக்ஷிகளுக்குக் கூடுபோலத் தான் ஆத்மாக்களுக் கிருப்பிடமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கசுக. ப்ராணத்ருதேநம:. ப்ராணத்ருதேநம:.

அர்வகளைத் தாய்போலத் தரித்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கசுஉ. ப்ராணஜீவநாயநம:. ப்ராணஜீவநாயநம:.

அன்னபானாதிகளைப்போலத் தான் பிராணிகளை ஜீவிக்கச்செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கசுங. தத்வாயநம:. தத்வாயநம:.

பால்தயிர்களில் வெண்ணெய் ஸாரமாவதுபோலச் சேதனா சேதனங்களில் தான் சாரமாய் அவைகளில் வியாபித்து அவைகளுக்குப் பிரயோசனகரனா யிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கசுச. தத்வவிதேநம:. தத்வவிதேநம:.

அப்படிப்பட்ட தன்னுடைய தத்துவத்தைத் தானேயறிந்தவனுக்கு நமஸ்காரம்.

கசுரு. ஏகாத்மநேநம:. ஏகாத்மநேநம:.

ஸமஸ்தமான சித்து அசித்து வருக்கங்களுக்கும்தான் ஒருவனே சுவாமியுமாய்ப் போக்தாவுமாய்அபிமானியுமாயிருக்கிறவனுக்குநமஸ்காரம்.

கசுசு. జన్మమృత్యుజరాతిగాయనమః. ஜன்மம்ருத்யுஜராதிகாயநம:.

அப்படியிருந்தும் சித்து அசித்து வருக்கங்களுக்குள்ள பிறப்பு இறப்பு மூப்புகள் இல்லாதவனுக்கு நமஸ்காரம்.

கசுஎ. భూర్భువస్స్వస్తరవేనమః. பூர்புவஸ்வஸ்தரவேநம:.

பக்ஷிகளுக்கு நிழல் இலை கனிகளை யுடைய விருக்ஷம் ஜீவன ஹேதுவாயிருக்கிறதுபோலப் பூலோக புவர்லோக சுவர்லோகங்களிலுள்ள பிராணிகளுக்கு ஜீவனஹேதுவாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கசுஅ. తారాయనమః. தாராயநம:.

அவர்களை ஸம்ஸாரத்திலிருந்துதாண்டுவிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கசுகூ. సవిత్రేనమః. ஸவித்ரேநம:.

ஸகலருக்கும் ஸாக்ஷாத்பிதாவாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கஎ0. ప్రపితామహాయనమః. ப்ரபிதாமஹாயநம:.

உலகத்துக்குப்பிதாமகனன் பிரமாவுக்கும் பிதாவானவனுக்கு நமஸ்காரம்.

கஎக. యజ్ఞాయనమః. யஜ்ஞாயநம:.

தன்னை விசேஷமா யாராதித்துக்கொண்டே பின்னும் அவ்வாராதனத்தையே விரும்புவார்க்குத் தானேயக்கியமாயிருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கஎஉ. యజ్ఞపతయేనమః. யஜ்ஞபதயேநம:.

தன்னைக்குறித்துச்செய்யும் யக்கியத்தின் பலத்தைக் கொடுக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கஎங. యజ్వనేనమః. யஜ்வநேநம:.

அசக்தர்கள் நிமித்தம் தானே யாகத்தைச் செய்விக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கஎச. యజ్ఞాంగాయనమః. யஜ்ஞாங்காயநம:.

சக்தர்களாலே அனுஷ்டிக்கப்படுகிறயக்கியங்களையுந் தன்னுடைய ஆராதனமாயுடையவனுக்கு நமஸ்காரம்.

கஎரு. యజ్ఞవాహనాయనమః. யஜ்ஞவாஹநாயநம:.

அவர்களுக்கு சாந்தி சிரத்தைகளைக்கொடுத்து யக்கியத்தைமுடிக்கும்படி செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூஎசு. யஜ்ஞப்ருதேநம:. யஜ்ஞப்ருதேநம:.

குறைவை அடைந்தயக்கியமும் தன்னை ஸ்மரணை செய்தமாத்திரத்தினலேயே பூர்த்தி யடையும்படி செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூஎஎ. யஜ்ஞக்ருதேநம:. யஜ்ஞக்ருதேநம:.

உலகத்தினுடைய இதத்துக்காக அவ்வுலகத்தார் அறியும்படி ஆதியில் யக்கியத்தை யுண்டாக்கினவனுக்கு நமஸ்காரம்.

கூஎஅ. யஜ்ஞிநேநம:. யஜ்ஞிநேநம:.

ஸர்வ யக்கியத்துக்கும் தானேசுவாமி யானவனுக்கு நமஸ்காரம்.

கூஎகூ. யஜ்ஞபுஜேநம:. யஜ்ஞபுஜேநம:.

தான்யக்கியத்தைப் புசிக்கிறவனும் பாலனஞ் செய்கிறவனுமானவனுக்கு நமஸ்காரம்.

கூஅ0. யஜ்ஞஸாதநாயநம:. யஜ்ஞஸாதநாயநம:.

அந்த யக்கியங்கள் தன்னை அறியத்தக்க ஞானத்தை யுண்டாக்குகிறபடியால் தன்னை யடைதற்கு அவைகளைச் சாதகங்களாம்படி செய்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூஅக. யஜ்ஞாந்தக்ருதேநம:. யஜ்ஞாந்தக்ருதேநம:.

யக்கியத்தினுடைய முடிவாகிய தன்னை யறியும் ஞானம் உண்டாகும்படி செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூஅஉ. யஜ்ஞகுஹ்யாயநம:. யஜ்ஞகுஹ்யாயநம:.

பூரணனான தான் ஆத்மாக்கள் செய்யும் யக்கியத்தினல் திருப்தி யடைகிறனென்பது யக்கியமுதலியவைகளின் உண்மையை அறிந்தவர்களுக்குத் தெரிவதேயல்லாமல் மற்றவர்களுக்குத் தெரியாதபடி செய்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூஅங. அந்நாயநம:. அந்நாயநம:.

இந்தப்பிரகாரம் தன்னை அனுபவிக்கச் சக்தி யுள்ளவர்களால் அனுபவிக்கப்படுகிறவனுக்கு நமஸ்காரம்.

கூஅச. அந்நாதாயநம:. அந்நாதாயநம:.

அவர்களை அந்தப்பிரகாரமே தானும் அனுபவிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூஅரு. ஆத்மயோநயேநம:. ஆத்மயோநயேநம:.

தன்னை அனுபவிக்குமவர்களைத் தன்னோடு சேர்த்துக்கொள்ளுகிறவனுக்கு நமஸ்காரம்.

கூஅகூ. స్వయంజాతాయనమః. ஸ்வயம்ஜாதாயநம:.

ஒருவருடைய பிரார்த்தனையை அபேக்ஷிக்காமல் தானே யவதரிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூஅஎ. వైఖానాయనమః. வைகாநாயநம:.

இப்படிக்குத் தான் அவதரித்து ஆத்துமாக்களுடைய பிறவித் துயரை வேருடன் களைகிறவனுக்கு நமஸ்காரம்.

கூஅஅ. సామగాయనాయనమః. ஸாமகாயநாயநம:.

தன்னை அடைதலாகிய மதுபானத்தினால் சாமகானஞ் செய்யும்படி செய்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூஅகூ. దేవకీనన్దనాయనమః. தேவகீநந்தநாயநம:.

பரமபதத்திலிருக்குமிருப்பில் அல்லாமல் கிருஷ்ணனாய்வந்தவதரித்தபோது மேற்கூறிய செயலைச்செய்வித்தவனுக்கு நமஸ்காரம்.

கூகூ0. స్రష్ట్రేనమః. ஸ்ரஷ்ட்ரேநம:.

இப்படிப்பட்ட தானே முக்காலத்திலுமுள்ள ஸமஸ்தபொருள்களையும் சிருஷ்டி செய்கிறவனானவனுக்கு நமஸ்காரம்.

கூகூக. క్షితీశాయనమః. க்ஷிதீசாயநம:.

இப்படி ஸர்வேஶ்வரனாயிருந்தும் துயரம்மிகுந்திருக்கிற பூமியிலுள்ளவர்களிடத்தில் விசேஷமான அபிமானத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

கூகூஉ. పాపనాశనాయనమః. பாபநாசநாயநம:.

இந்த உலகத்தில் தகாத செயல்களான தயிர் வெண்ணெய்களைக் களவுசெய்ததும் ராசக்கிரீடை முதலிய செயல்களைச் செய்ததுமான கதைகளாகிய அமிர்தத்தினாலே அந்நியர்களுடைய பாவங்களைப் பரிகரிக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூகூங. శంఖభృతేనమః. சங்கப்ருதேநம:.

அவதாரங்களிலும் தன் பக்தர்களுக்கு உள்ளும் புறம்புமுள்ள சத்துருக்களை நாசஞ் செய்வதும் ஸர்வேஶ்வரனென்பதற்கு அடையாளமாயிருப்பதுமாகிய பாஞ்சசன்னியமென்கின்ற திவ்விய ஆயுதத்தையுடையவனுக்கு நமஸ்காரம்.

கூகூச. నన్దకినేనమః. நந்தகிநேநம:.

தன்னுடைய கரஸ்பரிசத்தினால் தன்னைக் கொண்டாடவேண்டுமென்று பகவானால் பிரார்த்திக்கத்தக்க நந்தகமென்னும்வாளை நித்தியமாய்த் தரித்தவனுக்கு நமஸ்காரம்.

கூகூரு. చక్రిణేనమః. சக்ரிணேநம:.

ராக்ஷசர் அசுரர்களுடைய ரக்தத்தினலே தன்னுடைய காந்தி மலினமடைந்தாலும் அழகு குறையாதிருப்பதால் சுதரிசனமென்று பேர் பெற்ற சக்ராயுதத்தை யுடையவனுக்கு நமஸ்காரம்.

கூகூசு. శార్ఙ్గధన్వనేనమః. சார்ங்கதநவநேநம:.

குணத்தொனியினுலும் சரவருஷத்தினுலும் ஸம்ஸ்த சத்துருக்களையுஞ் சங்கரிக்கத்தக்கதும் தனக்குத் தகுந்த ஆயுதமுமான சாரங்கமென்னும் வில்லை யுடையவனுக்கு நமஸ்காரம்.

கூகூஎ. గదాధరాయనమః. கதாதராயநம:.

எல்லா விடங்களிலும் பிரளயகால அக்கினியைப் போலப் பொறிகளை யுமிழ்கிறதாயும் தன்னைச் சந்தோஷிக்கச் செய்வதாயுமிராநின்ற கௌமோதகீயென்னும் கதையைத் தரித்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்.

கூகூஅ. రథాంగపాణయేనమః. ரதாங்கபாணயேநம:.

மேற்சொல்லப்பட்டிருக்கிற சக்கரத்தைக் கையிலுடையவனுக்கு நமஸ்காரம்.

முன் சக்கிரி யென்று சொன்னது சக்கரத்துக்குத் தான் சுவாமியென்பதை. இப்பொழுது சொன்னதுதான் எப்பொழுதும் கையில் தரித்திருக்கிறவனென்பதை.

கூகூகூ. అక్షోభ్యాయనమః. அக்ஷோப்யாயநம:.

சரணமடைந்தவர்களுக்கு அபயங் கொடுத்தால் பின்பு தன்னுலும் அந்த அபயதானம் தப்பும்படி கலங்கச்செய்ய வொண்ணுதவனுக்கு நமஸ்காரம்.

க000. సర్వప్రహరణాయుధాయనమః. ஸர்வப்ரஹரணயுதாயநம:.

தன்னவர்களுக்கு எல்லாத் துக்கங்களையும் வேருடன்களைவதுமாய் எண்ணிறந்ததுமாய் எல்லை யற்ற சக்தியுடையதுமாய்த் தனக்குத்தகுந்ததுமாய் அந்யமுமாய் ஆபரணருபங்களுமாய் எப்பொழுதும் எங்கும் எல்லா விடத்திலும் எல்லாப் பிரகாரத்தாலும் சரணமடைந்தவர்களுடைய சம்ரக்ஷணையாகிய தீர்க்க சத்ரமென்னும் யாகத்தில் தீக்ஷைகொண்டிருப்பதுமாய்த் தன்னுடைய ஐசுவரியத்தைத் தாங்குவதுமாய் வேறுமாயிராநின்ற திவ்விய ஆயுதங்களை யுடையவனுக்கு நமஸ்காரம்.

விஷ்ணு ஸகஸ்ரநாமபாஷ்யம்
முற்றுப்பெற்றது.

